பிசுமில்லாஹி.

# சீறா
# நபியவதாரப்படலம்,

## உரைகடிலகம்.

இஃது

மத்ழூதுபந்தர்

பறங்கிப்பேட்டை

ம-௱-௱-ஸ்ரீ

முகம்மது மக்தூம் கவுசுமிய்யா சாஹிபு

அவர்கள் குமாரர்

**காதிரசஞஹுரைக்காயர்**

அவர்களால் இயற்றப்பட்டு,

ஊ-புஷ்பரதசெட்டியார் அவர்களது

**கலாரத்நாகரம்**

எனும் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை:

1890.



*Price—Rupees 3.*

*31st July* 1890,

CUDDALORE NEW TOWN

MY ESTEEMED FRIEND,

Nothing but your unmerited regard and affection for me can justify your seeking for an opinion from me regarding your excellent work. You do me a violence in insisting on an opinion from me because you thereby lead me to indulge in sentiments of egotism against my will.

You have by your invaluable and lucid commentary placed not only the Mahomedan public but also other religionists of India conversant with Tamil under a deep debt of gratitude to you. That beautiful Book—**The Koran,** is unfortunately not readable by all; and to such, your lucid commentary on the great pundit's poetry offers an excellent reading. The language is so extremely simple and chaste that your readers may adapt it as a means of culture if they are not anxious for anything more.

Ever since your friends learnt that you were engaged in this arduous task, they have all felt deeply anxious about your health; and they all join in offering their prayers to the Great Protector of all for his having helped you towards the completion of

the work; and they thank Him for the opportunity He has given you to make yourself useful to the public, and pray that you will be saved long and in sound health in order that you may confer similar acts of disinterestedness and charity on the Public.

I personally feel happy that, instead of burying your talents in oblivion out of a false sense of modesty, you have, through this excellent work, taught me how to value and admire my friend more than ever I did. Wishing you success in all your undertakings.

I remain,

Ever yours sincerely,

A. SUBBAROYALU REDDIAR, B. A., B. L.,

*High Court Vakil.*

பிஸ்மில்லாஹி.

# சிறப்புப்பாயிரம்.

இஃது

திருமயிலை வித்துவான்

ம-ா-ா-ஸ்ரீ

## சண்முகம்பிள்ளையவர்க ளியற்றிய

நாலடித்தரவுக்கொச்சகக்கலிப்பா.

சீர்நாடு மபயகுலச் செல்வர்செய்ய கோலோச்சப்
பார்நாடும் புகழ்படைத்துப் பல்குடியின் வளனோங்கி
யேர்நாடு காவிரியா மெழினதிபாய்ந் தளறுபடும்
நீர்நாடு தனக்கணித்தா நிலைநாடு நடுநாடு. (க)

செஞ்சொல்பயி லிங்நாட்டிற் றிரைமுன்றிற் பரத்தியர்தா
மஞ்சுவணத் தணிமுத்த மயற்புலத்து மாதர்தரும்
விஞ்சியகோற் றேனெய்தி விலையீயு மடற்கைதை
பைஞ்சினைய வேலிகெழு பறங்கிப்பேட் டைத்தேத்து. (உ)

நீதிமுதற் பலகுணங்க ணிரம்புகிற்கு நெறிமையினன்
ஏதிலிரு வேறுலகத் தியற்கையென வள்ளுவனா
ரோதியவக் குறட்பாவி னுட்பயனை மறுத்தனையான்
காதிரசனா மனக்கான் கவின்புலவர் பெருமானே. (ங)

இன்னவன்றன் சமயநூ லெனைத்துமர புளியோர்ந்து
தன்னிகரில் சீர்த்திமலி தரத்தரணி தனிலோங்கி
என்னையிவன் றனைநிகர்வார் யார்கொலெனப் பரவநிலாய்
இன்னறவிர்த் தருளிறைவ னிணையடிகட் கன்பேய்வான்.

தேவர்திரு வள்ளுவரோ திகழ்கம்ப நன்னுடர்
பூவருமெய்ப் புலவரெலாம் பொருவிலுருக் கொண்டனைய
நாவலவர் பெருமானு நவிலுமறுப் புலவர்பிரான்
ஆவலினே தியசீரு வருந்தமிழ்க்காப் பியமதனே. (ரு)

சொன்னேக்கும் பொருணேக்குந் தொடைநோக்கும் நடைநோக்கும், மென்னேக்கு மிகந்தந்நூற் கேலாத வுரை யொன்றை, முன்னேக்கி யுரைத்தமையான் முழுதோர்ந்த சில்லோர்தாந், தன்னேக்கி யோருரையைத் தானருள் கென் றினிதியம்ப. (சு)

நபியவதா ரச்சீர்த்தி நானிலத்தோர் நனியுணர
நபியவதா ரப்படல நலக்கவோர்ந் தோருரையைத்
தபுதலிலா வகைப்புலவர் தாமுச்சி மேற்கொளுமச்
சுபகரநச் சரிற்புகன்று தோமில்சிறப் பெய்தினனே. (எ)

அன்னவுரை யுரைகடில கப்பெயரி னுயிடையிற்
பன்னலாம் படித்தாகப் பரிந்தெவரும் கொளச்சிறந்து
மன்னுமெழு தாவெழுத்தின் புணர்த்தினுன் வான்புலவீர்
இன்னதனுக் குக்கைம்மா றிவணெடுத்தென் னியம்புவதே.

---

அஷ்டாவதானம்

ம-ா-ா-ஸ்ரீ

பூவை - கலியாணசுந்தரமுதலியார்

அவர்களியற்றிய

ஆசிரியவிருத்தம்.

சீர்மலிநல் லறிஞர்பலர் புகழெட்டி
யாபுரத்துச் செல்வ வேந்தர்
திகழ்சமஸ்தா னத்துவரு மொருமுமறுப்
புலவர்கோன் செய்த தாகு

மேர்மலிபல் லணிகவினும் வியன்சீருப்
புராணமதி லிணைந்து நின்ற
வெழினபியி னவதாரப் படலமதின்
மாட்சியினை யெவருங் கொள்வான்
நார்மலிசொல் லாருரைக டிலகமெனப்
புத்துரையை நயமாய்ச் சொற்றான்
நகர்பறங்கிப் பேட்டையினிற் கவிராஜ
சிங்கமென நண்ணி வாழ்வோன்
பார்மலிவல் லருமைநிறை பிரசங்க
மழைபொழியும் பண்பு மிக்கோன்
பகர்காதி ரசனும மரைக்காய
னெனவதியும் பான்மை யோனே.

---

இஃது

காஞ்சிபுரம் வித்துவான்

ம-া-া-ஸ்ரீ

## சிவஞானஐயரவர்களியற்றிய

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீர்கொண்ட வுமறுநா வலர்கோன் செய்த
சீருவி னபியவதா ரப்பா கத்திற்
கேர்கொண்ட வுரையுரைக டிலக மென்ன
வியல்வல்லோ ரெடுத்துரைக்க வியற்றி னனல்
பார்கொண்ட மகமூது பந்த ரென்னும்
பதியமர்வான் பலகலையும் பயின்ற மேலோன்
கார்கொண்ட கரன்கவுசு மியாவின் சேயாம்
காதிரச னுமரைக்கான் கவிச்சிங் கேமே.

---

இஃது
தில்லைவிடங்கன் மகாவித்துவான்
**மாரிமுத்துப்பிள்ளையவர்கள்**
புத்திரபிரபௌத்திரராகிய
வெண்பாப்புலி

## சு. வேலுசாமிப்பிள்ளையவர்களியற்றிய

### சிறப்புப்பாயிரம்.

நேரிசையாசிரியப்பா.

திருவளர் மருமத் துருவளர் மாயோன்
உருவளர் கமலத் துருவளர் தூயோன்
மருவளர் கற்பத் தருநிழன் மேயோன்
முதலிய வானோர் நுதல்விழிப் பெருமான்
சிமயமார்ந் தொளிரு மிமயமால் வரையிற்
கோலமார் திருமணக் கோலங் காணிய
சென்றமர் காலைத் தென்றலை யுயர்ந்து
வடதலை தாழக் குடமுனி வரனைக்
கூய்நீ யெமைநிகர் வாய்மா தவத்தோய்
தென்பா லேகென வன்பா லேகி
இருநிலந் தனைச்சமந் தருவணஞ் சந்தனத்
தடவரை யமர்ந்து வடமொழிக் கெதிராய்த்
தென்மொழி செய்தருண் மன்புகழ் நாட்டின்
மாட மாளிகை கூடகோ புரமதில்
விலங்க லெனப்பொலிந் திலங்கிடு மெட்டயா
புரசமஸ் தான பிரபல வித்துவான்
பல்காப் பியமுந் தொல்காப் பியமும்
பல்காற் பயின்றே யொல்காப் புகழ்பெற்
றுடுவின நடுவ ணுடுபதி யெனவே
புலவர் குழாத்துட் புலவர்நா யகமாய்

மேவிடு மும்மறு நாவலர் கோன்சீர்
விளங்கிடுங் காலத் துளங்கவன் றந்தோ
வாணு ளெல்லாம் வீணு ளாக்கினம்
நந்த மதசம் பந்த முளநூல்
ஒன்று மியற்றிலஞ் சென்றது காலம்
இனியா யினுமோ ரினியநூ லியற்றுவம்
எனநினைந் தஞ்ஞான் றினமணி கொழிக்கும்
ஓங்குதிரை வளாகப் பாங்கரில் வெள்ளிய
அரும்பவிர் நாக மரும்பெறன் முத்தம்
பந்தர்நேர் மகுமூது பந்தர்க் கரசாம்
வாலறி வுடைய காலிமகு மூதென்
காரணப் பெயருடைக் காரணக் கொடையினன்
தன்பா லடைந்தே யன்பா னிகழ்ந்தன
வனைத்து முரைக்க நினைத்தவா றுகென
உதவுநூ லோடவ னுதவியுங் கொண்டே
எண்ணிய வடியவர்க் கெண்ணிய படியருள்
நாகூ ரொலிகண் மாகூர் கருணையின்
“திருவினுந் திருவாய்ப் பொருளினும் பொருளாய்”
என்ன வசரீரி சொன்னமுன் மொழிகொடு
சொன்னய முதலிய பன்னய மெல்லாம்
ஒருங்கமை தரவே “சுருங்கச் சொல்ல”லென்
இலக்கண விதிக்கோ ரிலக்கிய மாகச்
சீறு வெனப்பெயர் கூறு நிற்குந்
திருப்புரா ணந்தனை விருப்புட னியற்றினன்
சொற்றிடு நூல்பல கற்றவர் யாவரும்
நன்னூ லெனப்புக ழந்நூ லதனில்
அவதானித் துணர்நபி யவதாரப் படலத்திற்
குரைக டிலகமென் றுரைதர வோருரை
இயற்றித் தருகென வியற்றித் தருகெனத்

தன்னிகர் செல்வருந் தன்னிகர் நண்பரும்
பன்முறை வேண்ட நன்முறை யென்றே
உள்ளுவார்க் கின்பருள் வள்ளுவ ராதி
உரைநூல் பற்பல கரைகண் டவர்க்கே
அன்றியீ தேனையோர்க் கன்றென வாவலின்
மார்க்கநூல் தேர்ச்சியிற் றீர்க்கமுள் ளவரும்
ஏற்கநல் லிலக்கிய மேற்கோள் காட்டி
முன்னோ ருரையெனப் பின்னோர் மகிழ்தர
உன்னி யியற்றின னன்னவன் யாரெனில்
ஆம்பல் படர்தருங் காம்புயர் குறிஞ்சியுந்
தாமரை மேவுங் காமரு முல்லையும்
வாரண முழங்குங் காரண மருதமு
நாக மளாவிய நாகமார் நெய்தலுந்
தன்பாற் கொண்டே யன்பாற் றுயெனப்
பெண்ணைசூழ் கிடக்கும் பெண்ணைநா டெனவும்
நடுநாடு நீர்மையி னடுநா டெனவும்
பொலிதரு நாட்டின் மலிதரு புண்ணிய
மாநதி மணிமுத் தாநதி யெனும்வது
ஐந்திணைத் தாயர் தந்தமக் குரிய
உரைக்கரும் பொருடரத் திரைக்கரத் தேந்துபு
கொடுவரக் களிப்பி னெடுவர னெதிர்ந்து
வாங்குதிரைக் கையான் வாங்குபு வைத்தவை
நிரைநிரை யாமிளிர் புரையுறுந் தோற்றம்
பற்பல பொருளும் பொற்புறக் கிடக்குங்
கூலமே நிகர்தரு கூல மருங்கினில்
தங்கக் கடகச் செங்கைச் சிறுர்விடும்
பன்னிறப் புறவும் பன்னிறக் கறங்கும்
மேனிலை மாட மேனிலை பெறூஉம்
பதாகை யும்பறப் பதனுன் வேற்றுமை

தோற்ரு தயர்சுதை தீற்றுநீண் மாடமும்
தெள்ளி யோர்தொழும் பள்ளி வாசலும்
பற்பல பொருணிறை பற்பல வர்த்தக
சாலேயுங் கல்விச் சாலேயும் வயித்திய
சாலேயு மறக்கூழ்ச் சாலேயு நிலவிய
திருவமர் கிருஷ்ண புரியுயர் கவினூர்
அரங்கிற் கேர்தரு பறங்கிப் பேட்டை
அகமது பந்தமா மகுமதா பந்தர்
என்னுநாமப் பொன்னக ரதனில்
தலைமை பெற்றுயர் நிலைமை பெற்றவன்
சகமது புகழு முகமது நெய்னு
லெப்பை யவர்களி னைப்பில்சந் ததியான்
இல்லையென வருவார்க் கில்லையெனுத் தில்லை
விடங்கன் முதலிய விடங்களிற் பற்பல
தானியம் விளைதரு மானிய நிலமும்
நிலையாய்ப் பெறுதலி னுலையாத் திருவினன்
"திரைகட லோடியுந் திரவியந் தே" டென
ஔவையார் வாய்மலர் செவ்வையார் மொழிப்படி
மேவகங் களிப்பத் தீவகந் தோறுஞ்
சேணுற மரக்கல மாணுற வுகைத்தே
வரும்பொரு ளோடு பெரும்புக ழீட்டும்
பெருமை யாளன் றருமத யாளனுங்
கவுசு மியாசெய் தவசின் பயனென
அறிவொழுக் கந்தயை பொறைமுத லியவோர்
உருக்கொண் டன்ன திருக்கிளர் மெய்யினன்
வானமர் கோனெனத் தானமர் மேன்மையன்
அனற்கிறை யென்ன வுனற்கருந் தூய்மையன்
நடுவ னென்ன நடுவு நிலைமையன்
நிருதி யென்ன வருதிறல் வீரியன்

வருண னென்னக் கருணை யுடையவன்
வாயு வெனநூ லாயும்வே கத்தன்
அளகைவேந் தென்ன வளவின்மா நிதியினன்
ஈசான னென்னப் பேசுறு சீர்த்தியன்
அனந்த னென்ன வனந்தநூ லுணர்ந்தவன்
சுரகுரு வென்னப் பரவுறு சூழ்ச்சியன்
அருமணி மாலையென் திருமணி மாலையும்
பத்தி ரசத்தொளிர் சித்திரக் கவிகளும்
தனித்தனி யாக வினித்தநற் பாக்களும்
அரிய நூல்கட் கரிய வுரைகளும்
அன்புற வியற்றி யின்புறு நேயன்
காதிரச னுமறாக் காயன்
ஓதநீ ருலக முவக்குநா வலனே.

நேரிசைவெண்பா.

நாவலர்சீ ருவி னபியவதா ரப்படலக்
கோவில் பொருள்விளக்க முற்றேுங்கப்—பாவலனும்
காதிரச னுமறாக் காயனுரை மாவுரையை
யோதிரச னுமென்பா ரோர்ந்து.

---

மஹ்மூதுபந்தர் மகாவித்துவான்

ஹாஜிகாதிறு அலிமறாக்காயர் அவர்கள் குமாரர்

ம-ா-ா-ஸ்ரீ

**கவிச்சாகரம் செய்கு நயினுமறாக்காயரவர்கள்**

இயற்றிய

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

(1) திருவளர் மறையி னுண்ணிய பொருளாய்த்
தெளிதரு மறிவினுள் ளறிவாய்க்
கருவள ருயிர்க ளனைத்தினுங் கலந்துங்
கலந்திடாக் காரண வொளியாய்

மருவள ரோக நித்தியா நந்தன்
மகிமையின் பேரின்ப விளக்காய்க்
குருவள ருலகின் வருநபி சீருக்
கொழும்புகழ்ப் புராணமீ விளங்க.

(2) அற்களைத் தெழுந்த பருதியை நிகர்ப்ப
ஐவகை யிலக்கண மாய்ந்து
கற்களைத் துணர்ந்தோர் மனங்களைத் தடுபால்
கனியினுந் தேனினுஞ் சிறந்த
சொற்களைத் தமிர்தஞ் சிந்திய கவிகள்
சொற்றன ருமறுநா வலர்கோன்
விற்களைத் திலங்கு நபியவ தார
மேன்மையின் படலமிக் குவந்தே.

(3) கானணி துடவை தடமலி கமலக்
கவின்முகை கிழித்துத்தே னருந்தி
மானணி சிறைவண் டினங்கள்பான் மிழற்ற
வாளையம் பகடுமே லெழுந்து
வானணி விசும்புக் குடியற லுதைத்து
மழையுட னிறங்கவெள் ளெகினந்
தானணி துயிற லொழித்துறு வளமை
தாங்கிய முதுநக ரன்றே.

(4) கலைதரு மதியந் தவழ்ந்துசீ ரழகு
காட்டிய கொடுமுடி படைத்து
நிலைதரு மாட வீதிவாய் தோறு
நித்திய முரசொலி முழக்கும்
விலைதரும் வேற்கை வீரர்கண் முழக்கும்
விளங்கிய பெரும்புகழ் படைத்து
வலைதரு மாழி யுலகிடுந் திலக
மணிமகு மூதுபந் தரில்வாழ்.

(5) பாக்கிய வளமைப் பிரபலந் திரண்ட
பற்பல வணிகர்க டுதிக்குந்
தேக்கிய வளமை மகத்துவ மொழியாச்
செய்குசா கிபுமனைக் காயர்
நோக்கிய வளமைத் தவமெலாந் தழைத்த
நூதனக் கொடியினிற் பூத்த
வாக்கிய வளமை மணமரு மலர்போல்
வையகந் தழைக்குமா மதலே.

(6) கண்ணடங் காத பேரொளி மணியாய்க்
காரண விறைவன்முன் னிருந்த
விண்ணடங் காத புகழ்நபி றவுலா
விளங்குற தெரிசனேப் புரிந்து
பண்ணடங் காதகசு பத்துல் லாவில்
பரிவுடன் தவாபுசெய் தினிதாய்
மண்ணடங் காத வரிசைஹஜ் ஜியற்றி
மருவற வரும்பெரும் வரத்தார்.

(7) அதிபதி முகம்ம தலிமனைக் காய
ரருமையி னேத்திர மணியாய்
நதிபதி யுலகின் மனேகரம் பெருக
நயந்தரும் பிள்ளேமென் கனியாய்
நிதிபதி நிகரா யுதித்தமா மதலே
நெறிமுறை தவறிடா நிபுணன்
துதிபதி தீரன் வசனகெம் பீரன்
சொலவருஞ் செபவுப காரன்.

(8) சம்பிர தாயன் மரக்கல பாக்கியன்
தராதரப் புயவலங் காரன்
சம்பிர தானன் கருணேயு தாரன்
சாது ரியப்பிர காசன்

சம்பிர சாதன் வர்த்தக நேசன்
சரசசல் லாபவுல் லாசன்
சம்பிர காச னிங்கித போஜன்
றகைமைய ருவக்குமா தாரன்.

(9) மாலுயர் வாகை முகம்மது கவுசு
மனைக்காய னெனுமபி தானன்
பாலுய ரன்னே னுயிர்க்குயி ரனையன்
பகருமோர் பதிபிறந் திருப்போன்
சாலுயர் துணைவ னிடத்துரை யமைத்துத்
தருகென வைகலும் வேண்டத்
தாலுயர் பிரசப் பாமலர் குடைந்து
தனிப்பயன் மகரந்தங் குடித்தே.

(10) தெள்ளிய மதுர மூரிய மொழியாய்ச்
சிறந்தகற் பனையலங் காரந்
துள்ளிய நடையாய்ச் செவிகளுக் கினிதாய்த்
துயரறுத் தானந்தம் விளைய
வள்ளிய வமிர்த மெடுத்திரு கையா
லருந்திய தகையதா யெவர்க்கு
மொள்ளிய தண்டாச் சிறப்பினள் பூப்ப
வுரைபெயர்த் தருத்தின னமர்ந்தே.

(11) பற்குண மகற்றிப் பொறிபுல னடக்கிப்
பயன்றரு மோர்மையின் ஞான
சற்குண காலி ஜெய்னுலா பித்தீன்
சாகிபு வரிசையின் பாலர்
துற்குண மொழித்துப் பொறையறி வொழுக்கந்
துலங்கிய மனத்தினர் நாளு
நற்குண மோங்கு முகம்மது மகுதூம்
நாயகர் தவத்துறுஞ் செம்மல்.

(12) காரண விறையை வணங்குநற் சிரத்தார்
கசடறுத் தறிவுறு மனத்தார்
பூரணக் கமலை குடிப்புகு முகத்தார்
பொருவிலா வர்த்தகத் திறத்தார்
வாரணத் தலைவர் வணங்கும்பொற் பதத்தார்
வறியவர்க் கிடுங்கொடைக் கரத்தார்
ஆரண வரத்தார் கவுசுமிய் யாசெய்
யருந்தவப் பொருளென வுதித்தோன்.

(13) பற்பயன் சிறக்கு மறபுநூற் பயின்று
பகலென விளங்கிய வுளத்தான்
சொற்பயன் சிறக்கு மிலக்கணக் கடலின்
றுறைகடந் துளவெலாம் பயந்து
நற்பயன் சிறக்குஞ் செந்தமிழ்ப் பலபா
நாடொறும் பொழியுமா முகிலம்
பொற்பயன் சிறக்குங் கவிதையுட் பொதிந்த
பொருண்மணி கொழிக்குஞ்செவ் வாயான்.

(14) நூற்கடன் மூழ்கி மணிபெறு மாசா
னுதற்கொரு திலதமே யெனலாய்ப்
பாற்கட லுதித்த திருமகட் குலவும்
பாக்கியமா மதியமே யெனலாய்
மாக்கட லனைய வழக்குரை யறுத்து
வழிசெயுங் கருவியே யெனலாய்
மேற்கடற் பருதி யுதிக்கினும் பொய்மை
விளம்பிடா வுருவமே யெனலாய்.

(15) தினநலம் பொழியு மொருமுதற் பொருளைத்
தினந்தொழுங் கருமமே தொழிலாய்
வனநலம் பொழியுங் காதிரிய் யாவின்
வழியமு தருந்தலைப் பயந்து

தனநலம் பொழியு முகிய்யத்தின் ஜகத
சற்குரு வருள்கடற் குளித்தான்
மனநலம் பொழியுந் துரைகாதி ரசனு
மரைக்காய ணுமநா வலனே.

---

இஃது
மஹ்மூதுபந்தர் மகாவித்துவான்
**ஹாஜிகாதிறு அலிமரைக்காயர் அவர்களின் குமாரரும்**
கவிச்சாகரம்
செய்குநயினு மரைக்காயரவர்களின் பின்னவருமான
ம-ா-ா-ஸ்ரீ
**கா. முகம்மதப்துல்காதிறு மரைக்காயரவர்களா**
லியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

(1) சீர்பூத்த வுள்ளமையா வுணரறிவாய்ப்
பேரொளியாய்ச் சிறப்பு வாய்ந்த
பேர்பூத்த வல்லபத்தி னுலகனைத்துந்
தானான பெரியோன் றேழர்
ஏர்பூத்த முகம்மதிற சூனயினூர்
புகழ்சரிதை யிலங்குஞ் சீருப்
பார்பூத்த புராணமதி னபியவதா
ரப்படலம் பரிவு கூர்ந்தே.

(2) கனங்குலவும் பொழிற்புடைசூழ் மகுமூது
பந்தரெனக் கவலு மூரான்
தனங்குலவு முகம்மதலி மரைக்காய
ருருந்தவத்தின் றனையன் மாறு
மனங்குலவுந் தருமமுகம் மதுகவுசு

மரைக்காய மகிப ஞனேன்
வனங்குலவு முரைவரைந்து தருதிரென
நாடோறும் மகிழ்ந்து வேண்ட.

(3) கண்மலரப் பார்ப்பார்க்குஞ் செவிமலரக்
கேட்பார்க்குங் கரங்தொட் டார்க்கு
மண்மலரப் படிப்பார்க்கு நாமலர
மிக்குணர்ந்த மதிவல் லார்க்கு
முண்மலர முக்கனியுஞ் சர்க்கரையுந்
தேம்பாலு முவர்ப்புத் தோன்றப்
பண்மலர செஞ்சொல்லி னுரையமைத்துக்
கொண்டாடப் பணித்தான் மன்னே.

(4) தெருண்மலியும் வழிநான்கின் பயனுணர்ந்து
மதத்தெழுந்த சிந்தை யாளர்
அருண்மலியும் ஜயகாலி அப்துல்கா
திருசாகி பனந்த ஞானப்
பொருண்மலியுங் குலக்கடலி லுதித்தபெரு
மணியனையப் புருடச் சீயம்
வெருண்மலியும் பகைவர்நிதந் தொழுந்தவத்து
கவுசுமிய்யா வியப்பி னீன்றுேன்.

(5) புலனுயர்ந்த விலக்கணத்தாழ்ந் திலக்கியத்தின்
வரம்புகண்டு புதுச்சொற் சேர்த்துப்
பலனுயர்ந்த நாற்கவிக ளேப்பமிட்டோ
னெந்நாளும் பரிசு வாய்ந்து
நலனுயர்ந்த பாவாணர் மெய்ச்சவரும்
பிரசங்க நடாத்து நாவான்
வலனுயர்ந்த காதிரச ஞமரைக்கா
னெனபுகனு வலவ ரேறே.

---

இஃது
மஹ்மூதுபந்தர்
**செய்யதுஹுஸேன்சாகிபு**
அவர்கள்குமாரர்
## அபுல்காசிம் மரைக்காயரவர்கள்
இயற்றியது.

---

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

(1) பூமேவு மதியெனுமோர் சிறப்பு யர்ந்த
புரவலர்கோன் றிறைமுடியா லளந்து சேர்க்கு
மாமேவு மக்கநகர் பிறந்து காபிர்
மனவிருளை யொழித்திசுலா மொளிகொண் டோ
தேமேவு நபிநயினர் முகம்ம தின்றங் [ங்கு
திருச்சரிதை யெனுஞ்சீறாத் தனையுட் கொண்டு
பாமேவு களஞ்சியமா முமறு செம்மற்
பாமாலை யாலுயிர்க்குச் சூடி னனே.

(2) வாகூறுங் கதிர்மேனி நிழலு றாது
வாடைகமழ் கஸ்தூரி காதம் வீசு
மாகூரின் றேற்றமது முன்பிற் பாயு
மைக்குடையி னீழலுமாங் கார ணீகங்
காகூறு முகம்மதைக்கண் ணுற்ற யோகங்
கதித்தியற்று வித்வசிரோ மணியி னந்நூற்
பாகூறு நாவிலென்றாற் பகர்வ தென்ன [மா.
படிப்பார்க்குப் பயமுறுத்தும் பழிப்பார்க் கம்

(3) எழுத்தசைசீர் தொடையடிக ளெழிலும் பாரி
லிலக்கணமு மிலக்கியமும் பயிற்று மாறாய்
வழுத்தியமா புராணமதிற் றிலக மென்னும்
வள்ளனபி யவதாரப் படல மாய்ந்து

பழுத்தறிவார்க் கமைந்துபொரு ளியைந்து தோன்ற
பழுதுற்றூர்க் கியைந்திலது நாளு நாளு
மிழுத்தலறு முறையெவர்செய் தருள்வ ரோவென்
றெண்ணிபல ரேக்கநிறைந் திருக்குங் காலம்.

(4) திருநபியின் பெயரமைந்து தீனோர் தங்கட்
செங்கொடியா லரசுநிகழ்ந் திலங்கு நாளுஞ்
சுருதிமொழி யலற்றூதை மறுஅச் செல்வச்
சுகிர்தமஃது மூதுபந்தர் நகரில் வாசம்
பருதியெனப் புரிசெய்கு சாகி பின்சேய்
பரிவகல ஹஜ்ஜியற்றிப் பரிசு பெற்றோர்
மறுவகலு முகம்மதலி மரைக்கா யர்தம்
மன்மகிழும் புதல்வனென வருமு தாரன்.

(5) கருணைமுகம் மதுகவுசு மரைக்கான் செவ்வி
கனிவாயாற் பலராலுந் தூண்டி வேண்ட
வருணநிறை திசையெங்கு நிறீஇ வானில்
வளருமுகம் மதுமகுதூம் புதல்வ ரான
வருணிறையுங் கரதலத்து கவுசு மிய்யா
வருந்தவங்க ளோருருவாய்க் கொண்ட பாலன்
தெருண்மறையி னுழியிலாழ்ந் தறிவு பொங்கித்
தேர்ந்திட்ட பலகலையா னிடத்து நாளும்.

(6) மாரிநிகர்க் கவிதைமொழி நாவோய் மன்னர்
மன்னர்சபைப் புகழ்திரத்து மதியின் வல்லோய்
தேரியசங் கப்புலவர்க் குழுவி நாப்பண்
திறமுதிரும் பிரசங்க நடாத்து நெஞ்சோய்
கூறியவப் படலத்துக் குருள்வண் டொப்பார்
குறையுரைத்துப் போந்தமையா னதிர்ச்சிக் கொ
சீறியவர் பிடர்பிடித்த சீயம் போலச் [ண்டு
சிலகலைக ணிகழ்த்திவரைந் துரைசெய் கென்ன.

(7) இருசிறையு மறுகாலு முடையான் றேனை
யிழுத்திடுவ போன்றுகருத் துணர்ந்து மேலோ
பொருவுமகத் தியன்புயத்தி னரிய கோவைப் [ர்
பொற்பவளந் தரளமெனப் புனைத்தா னூசி
யிருதலையு மொன்றாய துலாபோ னிற்பா
னினியவிவ காரத்தி லோங்கு நீரார்
கருமணியென் றேற்றிடுமா மகத்வ யோகன்
காதிரச னுமறைக்கா னுவல் லோனே.

---

இஃது
பறங்கிப்பேட்டை
ம-ா-ா-ஸ்ரீ
மு. அப்பாசாமிப்பிள்ளையவர்கள் குமாரர்
திருச்சிற்றம்பலமுடையாரடிமை
முத்துத்தாண்டவராய பிள்ளையவர்கள்
இயற்றியது.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தரளமு மொளியு மஞ்ஞையு மாகித்
தனைபுகழ் நபியென வமைந்தும்
பரவிய கீர்த்திப் பாத்திமா வெனுமோர்
பாக்யமே படைத்தொளி ரறுசின்
றிரமுறும் புலியை மருமக ராக்கித்
திகழ்ஹுச னுசனேயும் படைத்து
விரவுறு முகம்ம தாண்டகைச் சரிதை
விளம்பு முன்னூற்பெயர் விளங்க. (க)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

யமகம்.

கரும்பாரா வாரவுடை யுடைப்புடவி
யினிற்றமிழ்தேர் கவிஞர் யாருங்

கரும்பாரா வாரல்வ னமுதாகண்
டாவென்னக் களிக்க வேயோங்
கரும்பாரா வாரனைய ரெனுமுமறுப்
புலவருளங் கனிந்து சொன்மா
கரும்பாரா வாரமுறுஞ் சிருப்பு
ராணமெனக் கருது நூலின். (உ)

திரிபு.

மிக்கமுக மதுநபியுற் பத்திநவில்
படலமென விளம்பு மேன்மை
தக்கமுக மதுரமெளி யருமருந்த
வுரையெழுதித் தருதி ரென்ன
வக்கமுக மதுலனடி யார்தவம்போல்
வளர்ந்துவிண்ணுட் டைந்து காவின்
பக்கமுக மதுவினிய பாக்குதரு
மிகுத்தவளப் பறங்கிப் பேட்டை. (ங)

மடக்கு.

மாநகர வாச முளான் மல்குவிசு
வாசமுளான் மாலே வாகிற்
றேனமரும் வாசமுளான் றிவ்யசக
வாசமுளான் றினமும் வண்மை
யானமுக மாமதியா னருள்புரியத்
தாமதியா னன்பி லாள
ரேனலன வேமதியா னென்னுநல
மாமதியா னினிய வாயான். (ச)

மிக்கதனத் தாலளகைத் தனதனமங்
திரியெனவும் விபுதர் கோவை
தொக்குடைய பல்லக்குப் போகியென
வுஞ்சகத்தோர் சொல்லுஞ் சீரா

னிக்கனைய வசனமுறு முகமதலி
மரைக்காய ரினிது செய்த
மிக்கதவப் பலனனைத்து மோருருவாய்
வந்ததென விளம்பு மேலோன். (ரு)

எனைப்போல்வார் தமைப்புரக்குங் கருத்தனிந்தப்
புடவியினுக் கெலாங்க ருத்தன்
றனைப்போல்வா னென்னுமுக மதுகவுசு
மரைக்காயன் றலைவன் வேண்ட
நினைப்பாரு மிலக்கணமு மிலக்கியமு
மெய்ப்பொருளும் நிலைத்து வாழு
மனைப்பான்மை யிதுமனத்தின் மனவிருளைப்
போக்கிரவி மானு மென்ன. (சு)

சொன்னயமும் பொருணயமு மென்னயமும்
நன்னயமாத் துலங்கச் செய்தா
னன்னவன்யா ரெனின்மேற்சொல் வள்ளல்வளர்
பெரும்பதியி லமர்ந்து வாழ்வோன்
கன்னவிலுந் திணிதோளான் மலர்த்தாளா
ளொளிர்வாளான் கல்வி வல்லா
ரென்னுமுயர் கவுசுமியா சாஹிபு
பெரும்பெயரோ ரீன்ற பாலன். (எ)

தி ரி பு.

அடிமடக்குக் கற்பனைய மகந்திரிபு
சிலேடைதுறை யனைத்து நூலோர்
முடிமடக்கப் புகல்வாய னெனக்கினிமை
தருராஜன் முனிவில் தூய
னிடிமடக்க முறமுழக்கி யெதிர்த்துவந்து
சொல்வாத மியற்று வோர்தங்

துடிமடக்கிச் சயத்தம்ப நாட்டியிசை
காட்டியணி சூட்டி வாழ்வோன். (அ)

யமகங்கள்.

நிலைவணக்கந் தரவுலகிற் குறுநிலமன்
னவர்பதியாய் நிற்போ னிக்கு
நிலைவணக்கந் தரவுருவோ னெனநிலைத்த
தகைமையினு னெடிய மாதர்
நிலைவணக்கந் தரமுதலா யிசைவல்லோர்
நிகழ்த்துநல நெறியி னின்றோர்
நிலைவணக்கந் தரவிடையார் முலைபொருந்தும்
முலைபொருந்தும் நீர்மை சான்றோன். (கூ)

வந்திரவி பனிதெறலிற் பகைமுழுதும்
புறம்போக்கி வாழும் வாழ்க்கை
வந்திரவி பனிதோள னணிதாளன்
றிணியாளன் வாகை சேர்கை
வந்திரவி பனியெனவே யுலகறிந்த
ஞானியிவண் மன்னர் மன்சை
வந்திரவி பனிகழுமென் சிந்தைவலி
தடுத்தாண்ட மாட்சி யான்றான். (க0)

ஓம்பழக்க வினைமறவான் புலவர்குழா
மொருங்கேத்து முரிமை யுள்ளான்
ஓம்பழக்க வினைமறவா னெனைமறவான்
றனைமறவா னுறுதி தேர்ந்தான்
ஓம்பழக்க வினைமறவா விபுலீசு
செயுமாயை யொருங்கே வென்றான்
ஓம்பழக்க வினைதேற்றாச் சுகம்பெறுவா
னினமகிழ்வா னொளிர்த லேய்ந்தான். (கக)

கொளக்கவரும் பொருட்டாகச் சொற்ருக
வழுக்காறு குவிந்தா ருள்ளங்
கொளக்கவரும் பொருளுணாப்பா னருளுணாப்பான்
மையினன்மேற் குறைதீர் மேலோன்
கொளக்கவரும் பொருளுணாக்கக் குறிகொண்ட
வடியனெஞ்சங் குறிக்குஞ் சீர்த்தி
கொளக்கவரும் பொருளுடனே நிதிப்பொருளுங்
கதிப்பொருளுங் கொண்ட வேந்தன். (கஉ)

கருங்கனந்தம் புயவலியா னிலக்கணத்தே
னினிதொழுகக் கல்வி மான்கண்
கருங்கனந்தம் புயல்வயலா னவையுமெழிற்
காட்டுமெனுங் காட்சி மிக்கான்
கருங்கனந்தம் புயமனமேற் கவிபாடிக்
கனிதல்செயுங் கருத்தா ளன்ருங்
கருங்கனந்தம் புயங்கத்தார் தமைப்புரக்கு
மேன்மையினுன் கருணை சான்ருேன். (கங)

தீ ரி பு.

மாதிரச னுதிபதி களங்கமுரு
மதிவதனன் வடக்கென் ருேது
மாதிரச னுதிகனேர் பெரும்பொருளான்
பிரசங்க மதனி லேகீங்
காதிரச னுளும்வள ருணாயாளன்
றணாயாளங் கருத்தர் மெச்சுங்
காதிரச னுமணாக்கா னெனுநாம
வலனுளத்திற் கனிந்து செய்தான். (கச)

இச்சையுடன் படிப்பவர்க்கு நச்சினர்க்
கினியருரை யேமே லென்ன
வச்சமிலா தித்தலத்தோ ரறைவரிவன்
றனக்கெதிரி யாயி னாரும்
மெச்சுவரிவ் வுரையையெனில் விரும்பினர்தம்
பிரியமிதில் விளம்ப வேண்டா
பொச்சலிலா நாவலவீ ரிதுபெரிதோ
வதுபெரிதோ புகலு வீரே. (கரு)

வெண்பா.

குற்றங் கடிந்து குலாம்கா திறுக்கவிஞ
னுற்றங் கறிய வுரைசெய்தான் - பற்றங்கொள்
காதிரச னுமறைக்கான் காதிரச னுமறைக்கான்
காதிரச னுமரைக்கான் காண். (கசு)

முற்றிற்று.

பிஸ்மில்லாஹி.



# சீறா.

## நபியவதாரப் படலம்.

### உரைகடிலகம்.

காப்பு.

அருளருத்துமன்பினுயரகத்தார்க்குமைந்திரமேயறக்கற்றூர்க்கும்
தெருளருத்துஞ்சீறுவென்றமருயிர்பாலாண்டாண்டுஞ்சிறக்குநூலின்
பொருளருத்துநபிபெருமானவதாரப்படலவுரைபொருத்தற்காக
விருளருத்துமிபுலீசினியலறுத்தேயுண்ணிறையுமிறைவற்றூழ்வாம்.

### முகவுரை.

அறிவினாலும் வலியினாலும் மிக்க குறைவினனாகிய தமியேனையும் ஒரு பொருளென நன்குணர்ந்ததே யன்றி மாட்சிமை தங்கிய தீனுல்இஸ்லாம் எனும் மார்க்கத்திலே சேர்த்து விளக்குவித்த * அல்லா எனும் திருநாமத்திற்

* அல்லா என்பது மானுஷிக தெய்விகங்களுக்கு ஒருவாற்றானும் புலப்பாடின்றி யொப்பற்று ஏதுமோரேதுவன்றிக் காலங் கலவாது தன்னிற்றானாய்த் தன்னாற் றன்னைத் தனக்குத்தானே நன்கு விளங்கி எவற்றினு முதற்றாய் விளங்கும், "அநாதிமயம்" எனும் பொருடரு மொருசொல். அச்சொல் எமது வேதபாடையின் முதலட்சரத்தோடு இருபத்து மூன்றாவதட்சர மிரண்டும் இருபத்தேழாவதொன்றும் கூடிய நான்கெழுத்தா லமைந்ததாயினும், பதினைந்தாவது எழுத்திற்கும் அமைவுற்ற இருபத்துமூன்றாவ தெழுத்திற்கும் இடையா யொலிக்குமாறு நா குழைத்து நாவினுனியு மதன் பக்கங்களும்மேல்வாய்ப்பற்களை மெல்லவீவத் தொனித்தல்வேண்டு மென்பது வேதபோதகாசிரியர் கொள்கை:

குரிய வொப்பற்ற ஆண்டவனைப் புகழ்வாம். அவனே புக ழனைத்திற்கு முரியவன்.

நாயகத்துவத்திற்குச் சொந்தமாக்கப்பட்ட சந்நிதியிற் றகைமை பூண்ட வியல்புகளைக்கொண்டு வருணிக்கப்படும் அடிமை புரிதற்கு இன்றியமையாதவராய்த் தோன்றிய முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவ ரவர் கள்பேரில் மேற்கூறிய ஆண்டவன் ஒப்பற நிலைத்து விளங் குங் காலமெல்லாம் தனது அரிய கருணையையும் வரி சையையும் மென்மேலும் மலிவிப்பானாக:

அவர்கள் சந்ததியாரினும் மனத்தானன்றிச் சடத் தானுஞ் சம்பந்தராய் விளங்கிய மாண்பினரினு மப்படி யேயாக:

மானுஷிகத்துவத்தில் மிக்க குறைவினனாகிய யான் பால பருவத்தானுந் தந்தைய ராக்ஞாபனைக் கடங்குதலொன் றேபற்றிப் பாடசாலைக்குச் சென்றுள்ள பருவத்தானும் பாலிய பருவத்தானுஞ் சில வருஷங்களைப் போக்கித் தெளி வடைந்தபிற்றை மார்க்கப் பயிற்சி யடைதல்வேண்டுமென் று வேத போதகாசிரியர்மாட் டடைந்து சிற்சில பயின்று அவைகள் நிலைப்பாடுறும்பொருட்டு வேத தருக்கசாத் திர நூல் சில பயின்று வாராநின்ற காலத்திலே தமிழ் நூல் கசடறக்கற்ற வித்வான்களிற் சிலரைக் கண்ணுற்று அவர்களோடு கலந்தபோது அப்பயிற்சியினுஞ் சிலபயிலல் வேண்டுமென மனங் கவிந்தகாலத்துப் பயப்பித்துத்தரும் தக்க வித்துவான்கள் கிடைக்காமல் மிக்க கவலையோடி யானே சிலபயின்று அதற் கத்தாட்சியாய்த் "திருமணி மாலை" என்னு மோர் நூலும் சித்திரக்கவி பல கணக்கற் றூற்போல, உச - வது வயதிலே முடித்தும் உலகக்ஷே மத்திற்காக வேண்டிய வர்த்தக முதலிய காரியங்களின் மு யன்று அவற்றினு மென்போல்வாரால் ஒருகாலத்து முடி

வுருத காரியங்களை முடித்து நடப்பித்து வரும்போது எனது சிநேகிதர்களிற் பலர் அடியில் வருமாறு கேட்டுக் கொண்டனர்;—

"நண்ப! நுமதரிய கல்வித்திறனை நும்மகத்தடக்கி விளங்காது மறைத்திருத்தல் பொருத்த முடைத்தன்று; ஆகவே சில நூற்றாண்டுகளுக்குமுன் எட்டயாபுர சமஸ்தான வித்வானாக விளங்கிய மகத்தாகிய **உமறுப்புலவரவர்கள்** நமது **நபிகணாயகம் முகம்மது** ஸல்லல்லாஹு **அலைஹிவஸல்லம்** ஆண்டவரவர்களின் இயற்கை செயற்கைக ளடங்கிய **சீறா** எனும் வரையாப் பெருங்கடனீரி லோர் கைத்தனை யள்ளினாற்போலுஞ் சிறுகச் சில சரித்திரங்களைச் **சீறா** எனு மபிதானத்தினானே மதுரமூறிய கவிகளாற் புனைந்த புராணத்தி னவயவங்களி லொன்றாகிய நபியவதாரப்படலத்திற்கு உரை யமைத்துத் தரல்வேண்டும்" என.

இவ்வேண்டுதலுக்கு மறுத்துக்கூறி எனது சிநேகிதர்களின் முகமுறித்தற் கென்மனம் பொருந்தில தாயினும் அத்தகுதிக்குச் சற்றும் பாத்திர மல்லேன் எனும் வெருட்சியான் மயங்கி விலகியும் விடாது அக்காரியத்திற் பிடர்பிடித்தாற்போலப் புகுத்தப்பட்டிருக்கு மக்காலத்திலே நாகூர், வா. குலாம்காதிறு நாவலர் என்பவரால் செய்த "நபியவதாரப்படலவுரை" எனும் புத்தக மொன்று என் பார்வைக்குற்றுநோக்க அவ்வுரையாசிரியர் தமது கல்வியே கடலினும் பெரிதெனக் கொண்டு நூலாசிரியர், ஒருமைப் பன்மை யறியாதார் எனக் குற்றங்கூறித் தமதறிவிற் கிலக்காய்ச் செய்யுளைத் திருத்தித் தவறுரை வரைந் திருத்தலே பெரும்பான்மையும் புலப்பட்டன.

இவர் மஹானாகிய **உமறுப்புலவரவர்**களினும் மிக்க கற்ற வித்துவானென விக்காலத்துப் போலிப்புலவர்கள்

நினைப்பர்களெனுங் கருத்தினரா யங்ஙனஞ் செய்திருக்கின்றனர்.

இதுவேயுமன்றி, இவர்செய்த "சீறாப்புராண வசனம்" எனுங் கிரந்தத்தின் முகவுரையில்;—

"வெகுகாலத்திற்கு முந்தித் தென்னாட்டிற் சிறந்த வித்துவானாய் விளங்கிய புலவர்சிகாமணி உமறுப்புலவரவர்களால் "சீறாப்புராணம்" என்னு மபிதானத்துடனே ஒரு காப்பியம் செய்யப்பட்டது. அப்புராணம் மதுரமூறுங் கவிதைகளாற் சிறந்து எங்கும் பிரசித்த முள்ளதாய் வித்வான்களுக்கே எளிதில் பொருள்விளங்குந் தன்மையை யுடையதன்றி ஏனையோர்க்கு அவ்வளவாய் விளங்கக் கூடியது அல்ல"

எனக்கூறி, உடனே மறந்து;—

"அதன் ஒவ்வொரு கவிதையையும் மனங்கவிந்து, ஊன்றிப் பார்த்தாலொழிய உட்பொருள் விளங்குதல் வித்வான்களுக்குக்கூட மிக்க கஷ்டமே"

எனப்பிற்றையுங் கூறியவர், தாமே ஷைகவிதைகளை மனங் கவிந்து பாராது திருத்திப்போந்தார்போலும்.

மும்மலங்களுங்கழீஇ தேர்ந்து விளங்கிய மஹான்களின் செய்யுட்களைப் பலவாறு கலைத்துத் தமதறிவிற் கிலக்காய்க் குற்றங்கூறித் திருத்தி யிருக்கின்றமையால் எனக்கு மனஞ் சகியாது அம்மஹானாகிய உமறுப்புலவரவர்களின் நுண்ணியகருத்தினையும் குலாம்காதிறு நாவலரினது கவனமின்மையையும் ஒருவாறு எடுத் துலகப்பிரசித்தமாய்க் காட்டுதல் அத்தியாவசியம் எனக் கருதினே னாயினும் இடைக்கிடை எனக் குறுஞ் சாவகாச மின்மைபற்றி மிக்க சுருக்கமாய் வித்வான்களுக்கே எளிதில் விளங்கு மாற்றலுடையதாய் "நபியவதாரப்படலம் உரைகடிலகம்" எனு மபிதானத்தானே முப்பதாம் வயதிலே இக்கிரந்த மெழுதி முடித்தேன்.

இதுநிற்க; மகத்துவ முடைய **உமறுப் புலவரவர்கள்** எட்டயாபுர சமஸ்தானத்திலே வித்வாம்ஸத்திலே சிறந்து விளங்கித் தேவாரம், திருவாசகம், பெரியபுராணம், திரு விளையாடல், இராமாயணம், பாரதம் முதலிய நூல்களின் பிரசங்கத்திலே தேர்ச்சியடைந்துவிளங்கிவருங்காலத்தில் ஒருநாள் அம்மஹானது மனத்தின்கண் இந்துக்களின் புரா ணகதைகளிலேயே தேர்ந்தேமன்றி நம்மார்க்க சம்பந்த மான சரித்திரங்களிலே தேர்ந்தே மிலேயே, அன்றியும் அச் சரித்திரங்கள் பொதிந்த புராணங்களொன்றையுங்கண்டே மிலேயே, ஆ! இதென்ன விபரீதமென வையுற்றுத் திகைத் தேங்கி நாம் வாணாளை வீணாளாகச் செலவழித்தேமேயன்றி ஏதும்பயன் பயந்திலேம் ஆகலின், இதுகாறும் செய்த தோஷங்களைத் தொலைத்தலே அத்தியாவசிய மெனுங் கருத்தினராய் ஷை சமஸ்தானத்திலே தமக்குக் கிடைத்து வந்த வரிய செல்வப்பொருளையும் வேண்டாமென மறுத்து அந்நகர் விடுத்துத் தனித்தவராய்த் தமது மார்க்கப் பயிற்சியிற் றேர்ந்த வித்துவான்க ளமர்தரு நகர்தேடி நடந் து நீர்வள நிலவளங்களாற் சிறந்து, ஏக சோதியோ டொன் றுய்க் கலந்து ஒப்பற விளங்கும் ஒலிகளெனும் மஹான்க ளது பீடகாவல்கொண் டிராநின்ற வென்பதியாகிய **மஹழது பந்தரடைந்து**, குணத்தானும் நடை யுடை பாவனைகளா னுஞ் சிறந்துவிளங்கிய மாந்தர்களை நோக்கித் தம்மகத் துற்ற வரிய கொள்கை நிறைவேறுமிட மிஃதேயென நன் குணர்ந்து மகத்தாகிய வேதப்பயிற்சியிற் றேர்ந்தவரும் மார்க்கச் சட்டதிட்டங்களை வழாது நடப்பித்துவருவான் வேண்டி நியமிக்கப்பட்டவருமான எனது பிதிராகிய **மூகம் மதுநேய்னுலெப்பை** எனு மியற்பெயரினையும் **காலிமஹழது** எனுங் காரணப்பெயரினையும் உடைய வள்ளன்மாட் டடை ந்து, தமது கோரிக்கையை முறையிட்டபோழ்து, வள்ள லவர்கள்; புலவீர்! **நீவிர் நபிகணுயகம் மூகம்மது ஸல்லல்**

லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்களின் சரித்திரங் களைப்பாடு மத்தனைத் தகுதிக்குப் பாத்திரமல்லீர், என் னையோ? வெனின், நீவிர் நம்மார்க்க நிர்ணயங்களுக்கு விரோதமாய்ச் செம்மறிக்கடாக்களின் கொம்புபோன்ற முறுக்கிய மீசையுடையவராயுங் கதுப்புகளொழிய மற்றை யவிடங்களை வெறுமை செய்தவராயு மிருக்கின்றீர், ஆத லின். என மிக்கவன்மையாய்க் கூறக் கேட்ட புலவரவர்கள் திடுக்கிட்டேங்கியகன்று மார்க்கப் பொருத்தம்போல் செ ய்து மறுதினம் வள்ளன்மாட் டடைந்துநிற்கக் கண்ணுற்ற வந்நாயகமவர்கள், புலவீர்? நபிகணுயகமவர்களின் சரித்திர ங்களைத் தமிழ்க் கவிதைகளாற் புனைதல் செய்யுங் காலத்து நபிபெருமானு ரவர்களின் பெண்மக்களைத் தமிழியற்கொப் பப் பலவாறு வருணிப்பீர்; அன்றியும் மார்க்கப்பயிற்சி யில் அவ்வளவு தேர்ந்தவரென யாம் நினைக்கவுமில்லை. ஆக வே மேன்மைதங்கிய சரித்திரத்தை நும்மிடத்துக் கொடு க்க எம்மனம் பொருந்திலது, என்றாலும் நீர் கருதியபடி புராணஞ் செய்வதற்காக மகத்தாகிய கடவுளினது ஒப் பறுதலைக் குறித்த ஒரு கவிதைசெய்து வருவீராக வென ஆக்கியாபித்தபோது பலவாறு மதுரமூறிய கவிகளாற் கடவுளினது தன்மையைப்பற்றிப் புனைதல் செய்து பிரதி தினமும் நாயகரது சந்நிதியிற் கொடுவர ஒவ்வொரு கவி தைகளிலும் கடவுளுக்குத் தகுதியல்லாத சில தவறுகளைக் காண்பித்துக் கூடாதென மறுத்துவிடுவார்கள்.

இவ்வாறு அநேக கவிதைகளைச் செய்து யாதும் பயன் படாது போனதுபற்றிப் புலவரவர்கள் மனங்கலங்கி இக் காண்டத்திற்கு நாயகராய் விளங்கும் நாகூர் ஷாஹுல்ஹ மீது ஆண்டவ ரவர்களின் பாதமாட்டடைந்து தமது கோ ரிக்கை நிறைவேறும்வரை கிடப்பாமெனு மனத்தினராய்ச் சென்று பலநா ளங்ஙனமே வீற்றிருந்தும் தமது கோரிக் கை நிறைவேறக் காணமையான் ஒருநாள் சந்நிதானத்தி

னின்று, "நாயக! எமது கோரிக்கை நுமக்கும் பொருந்து மேல் எதிர்வரு மிரவிலே யாம் கருதிய புராணத்திற்கு முதலிலே வரைதற்காக மெய்யாகிய கடவுளினது ஒப்பறு தலைக் குறித்துப் புனையுங்கவிதைக்குத் தலைமொழியை எமக்கு வெள்ளிதா யறிவித்தல் வேண்டும். இல்லாவிடின் விடிந்தவுடனே இவ்வழியாக வெம்பதி யடைதல் திண்ணம்." எனக்கூறி யன்றிராதரித்துத் துயிலும்போது ஒலிகள் பிரானவர்களின் கிருபாகடாட்சத்தானே புலவர் நாயகமவர்களின் மனத் திருக்கறத் "திருவினுந் திருவாய்ப் பொருளினும் பொருளாய்" என்ற உருத்தோற்றமின்றிய ஒரு தொனியைக் கேட்டு ஆனந்தக் கடலிலே மூழ்கித் "தெளிவினுந் தெளிவதாய்ச் சிறந்த" எனத் தொடங்கி யெழுந்து "பெருந்தலம் புரந்த கருத்தனைப் பொருத்துதல் கருத்தே" எனச்செய்யுளை முடித்து ஒலிகள்பிரானவர்களை வணங்கி உடனே பிரயாணித்து மஹ்ழதுபந்தர் காலிமஹ்ழதவர் கண்மாட் டடைந்து நடந்தனவெல்லா நவிற்றிக் கடவுளினது ஒப்பறுதலைக் குறித்துச் செய்த செய்யுளைக் காண்பிக்க அதினுள்ளுரைப்பொருளை நன்குணர்ந்த நாயகமவர்கள் மிக்க மகிழ்வுகூர்ந்து புலவீர்! நபிபெருமானு ரவர்களின் சரித்திரத்தைத் தமிழ்ப் புராணமாய்ச் செய்தற்கு ஒலிகள்பிரானவர்கட்கும் பொருத்தமே யாகலின் எமக்கும் மிக்க பொருத்தமே. நும்மனத்துற் றடைந்தவாறு தமிழ்ப்புராணமாய்ச் செய்வீராகவென வுத்தாரமு முதனூலிற் சிலபாகமுங் கொடுத்தார்கள். பிற நிகழ்ந்தனவெல்லாநிகழ்ந்தன; உய்த்துணர்க.

இங்ஙனமாக, இன்னன சிறப்பிற்குரிய புலவர் நாயகமவர்களைக் குற்றங்கூறிக் கல்வித்திற மில்லார் என மதித்தல் பெருங்குற்றமே. ஆதலின் அக்கூட்டத்தாரில் யான் புகாது ஆண்டவனைக் காவல் கொள்வேன்.

ஆகவே வித்வான்கள் இக்கிரந்தத்தில் கூறப்பட்டுள்ளனவற்றை மனங்கவிந்து எழுத்தெண்ணி நன்குணர்ந்து மகத்தாகிய உமறுப்புலவரவர்களின் வித்துவத்துவத்தை இத்தன்மைத்தென வெள்ளிதாய்த் தெரிந்து கொள்ளுவராக.

யானும் இந்நூலாசிரியர்போன்ற மஹான்களின் கிருபாகடாட்சத்தானே உய்வாமெனு மாதரவினனு யிருக்கின்றனன். ஆண்டவனு மப்புடியே உதவிபுரிவானுக.

---

இங்ஙனம்

க. வு. காதிரசனு மனாக்காயர்.

பிஸ்மில்லாஹி.



# சீறா.

## நபியவதாரப் படலம்.

### உரைகடிலகம்.

(1.) பெருகிய கோடிசந் திரப்பிர காசமாய்
வருமொரு பெருங்கதிர் மதியம் போலவே
கருணைவீற் றிருந்தசெங் கமலக் கண்ணிணைத்
திருநபி வருமவ தாரஞ் செப்புவாம்.

இப்படலம் என்ன பெயர்த்தோ? வெனின், நபிபெருமானாரது அவதாரத்தை யுணர்த்துங் காரணத்தானே "நபியவதாரப்படலம்" என்னும் பெயர்த்து.

அது நபிபெருமானாரது அவதாரத்தை யுணர்த்தும் படலமென விரிக்க: அவதரித்தலி னிறுத்தமுறையான சரித்திரத்தை யுணர்த்து கையான் "அவதாரம்" என்பது ஆகுபெயர்.

இச்செய்யுள் என்னுதலிற்றோ? வெனின், இத்தன்மைத்தாய நபிபெருமானாரது அவதாரத்தி னுதலற்பாலன வெல்லாம் நுதலூஉம் எனும் துணிபுணர்த்துத னுதலிற்றென்க:

(ப - ரை.) பெருகிய - இவ்வளவெனப் படாது விரிவுற்ற, கோடி - புதுமையையுடைய, சந்திரன் - சந்திரனது, பிரகாசமாய் - சோதியாய், வரும் - வாரா நின்ற, ஒரு - ஒப்பற்ற, பெரும் - மாட்சிமை தங்கிய, கதிர் - கிரணங்களையுடைய, மதிஅம்

போல - அழகிய நிலவுபோன்ற, திரு - திரு மேனியையும், கருணை - கிருபையானது, வீற்று இருந்த-குடியிருக்கும்படியான, செம்-செம்மை யாகிய, கமலம் - தாமரைமலர்போலும், கண் இணை - உபய நோக்கங்களையுமுடைய, நபி - **நபிகள்பிரான் மூகம்மது ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம்** அவர்களினது, வரும்-யாண்டுமுயிர்த்து வாராநிற்கும், அவதாரம் - ஜனனமகோதயாக மத்தினை, செப்புவாம் - யாம்சொல்வாம், என்ற வாறு.

(போ-ரை.) இவ்வளவெனப் படாது விரிவுற்ற புதுமையை யுடைய சந்திரனது சோதியாய் வராநின்ற ஒப் பற்ற மாட்சிமைதங்கிய கிரணங்களையுடைய அழகிய நிலவுபோன்ற திருமேனியையும், கிருபையானது குடியிருக்கும்படியான செம் மையாகிய தாமரைமலர்போலும் உபய நோக் கங்களையுமுடைய **நபிகள்பிரான் மூகம்மது ஸல் லல்லாஹு அலைஹிவஸல்லம்** அவர்களினது யாண்டுமுயிர்த்துவாராநிற்கும் ஜனனமகோத யாகமத்தினை யாம் சொல்லுவாம் என்பதாம்.

பெருகிய என்னும் பெயரொச்சம் கோடி என்னும் அடையடுத்த சந்திரனோடு முடிந்தது. பெருகிய சந்திரன் என்னாது "பெருகிய கோடிசந்திரன்" என்றமையான் இவ்வுலகத்துச் சந்திர னிழிவின தென்னுங் கருத்தினராய்த் தூயபெருமானாரது வடிவத்திற்கு உவமித் தற் பொருத்தமுடைத் தன்றென்பதூஉம், படைப்பாதி புலன்களா லமைக்கொணுக் காரணப்பேற்றினவாய சந்திரனையேயொழிய கரு திலேம் என்பதூஉந் தோன்றச் சந்திரனைப் பிரித்தற்பொருட்டுக் கோடி என்னும் அடைகொடுத்தார்.

இதுபற்றியன்றே இவ்வுலகத்துமதி வளரயாது பெருகினவிடத்து மிழிபினவா மென்பதூஉம், பெருமானாரது வடிவிற்கு உவமப்

பொருத்த முடைத்தாய தோர்பொருள் படைப்பாதிகளி லில்லென் பதூஉம் பெறப்பட்டன. மாணுக்கர்க் கிஃதோர் விளக்கமோ ? எனின் கூறுதும் ; — இல்லாமையென்ப தொன்றில்லையாய்க், கடவுளாய்க், கடவுளது காட்சியுங் கடவுளேயாய்ச், சொல்லறக் கிடக்குந் தூயவந் நிலைமையிற் றன்னிற்றானே பிறந்ததோர் பேராநந்தமே அந்நிலையி னரியகாட்சியாய் அக்காட்சியே நபிபெருமானாரது வடிவாய்த்துலங்க அத்துலக்கத்தின் பயனாற்றலினானே அறுஷு முதலியனவெல்லாம் அடங்க அநாதிவடிவாய் ஓரோகாட்சியிற் கடவுளறிந்தானெனு மகத் துவம்பற்றிக் கடவுளது காட்சிக்கு நபிபெருமானாரது வடிவே சூரிய னென்ப வேதநூலா ராதலின், இவ்வுலகத்தின் சூரியனாகிய போலி வஸ்துவிற்கு எத்தனையோ மடங்கு தாழ்மிழிபினதாய இவ்வான்மதி, வளாயாது பெருகினவிடத்தும் இழிபொழியாவென்றும், பெருமானா ரது பெருமைபூண்ட வடிவத்திற்குப் படைப்பாதிகளி லுவமைப் பொருத்த முடையதோர் வஸ்துவு மில்லென்று மறிக:

இக்கருத்தே ஆசிரியர்க் குடன்பாடாகலினானே கூஙு - வது செய்யுளினும் "இங்கெழின் முகம்மதொளிவினிலென்ற லிவர்க்கெவை யுவமை சொல்லுவதே" என்றார் ; இதனானுமறிக. இங்ஙனமாயின் இழி பில்லெனவாய் வருவித்துரைக்கும் பொய்ப்பொருளாய மதி மெய்ப் பொருளாய பெருமானாரது வடிவத்திற்கு உவமித்தலூஉம் பொருத்த முடைத்தன்றெனின், அறியாதுசொல்லினாய்; நபிபெருமானாரதுவடிவு இத்தன்மைத்தென்பது மனுபான்மைக் கமையாதென்பது வெளி யாயினு மொருவா றமைத்துக் காட்டுவான் றொடங்கி மனுபான்மைக் கியைந்த சொற்பொருணயத்தான் இத்தன்மைத்தவர் எனுந் தோற் றம் நிகழும்பொருட்டுக் குறிப்பினான் வனைந்துகாட்டினார், ஆதலின் பொருந்துமென்க. இவ்வழக்குத் தொல்காப்பியம் பொருளதிகாரத் துள் விரிந்துள ஆண்டுக்காண்க.

"உயர்ந்ததன்மேற்றே யுள்ளுங்காலை"

என்றாராற் றொல்காப்பியனார் ஆகலின், உவமம் உவமேயத்தினுஞ் சிறந்த பொருளாதல் வேண்டுமன்றோ ! ஆகுமேல் ஆண்டுப் பிரானது வடிவே உவமேயமும் மதியே உவமமுமாய்ப் பிரானதுவடிவு இழிந்த பொருளாங் குற்றமாம் எனின் அற்றன்று; அண்ட புவன சராசரங்களி னடங்காக் காரணவடிவு இத்தன்மைத்தென ஒருவாறு மனுபான்மைக் கியைய வியைவித்துக்காட்டுவான் கருதி யுவமங் கோடலானுங் குறித்த

உவமம் ஓர் பொருளன்மையானும், தொல்காப்பியனுரோதிய சூத்திரம் பொருண்மேலுவமம் பற்றுங்கால் பொருந்துமெனவும் பயிற்றி அது கடாவாகாவென மறுக்க.

இதுவேயுமன்றிப், பெருகியகோடி சந்திரப்பிரகாசம்போல என்னுது "பெருகியகோடி சந்திரப்பிரகாசமாய், வருமொரு பெருங்கதிர் மதியம் போலவே" என்றமையாலும் பெருமானாரது வடிவின் வனையறை யாண்டு மடங்காமை குறித்தாரன்றோ? என்னே வருமொரு கதிர் மதியம் என்னுது வருமொரு பெருங்கதிர் மதியம்என ஈரடை கொடுத்துக் கதிரூஉ மித்தன்மைத் தெனப்படாது கூறலாயினாராக லின். இங்ஙனம் விரிக்கிற் பல்குமென நிறுத்தினும், உய்த்துணர்க:

இனி, கோடிஎன்பதை எண்ணுப்பெயராய்க்கொண்டு பெருகிய வென்னும் பெயரொச்சத்தை அவ்வெண்ணுப் பெயரோடு முடித்து "இத்தனைக்கோடியெனப் படாது பெருகிய பல கோடி சந்திரனது பிரகாசமாய்" என்றுரைப்பர் முதலுரை யாசிரியர்.

அஃது ஆசிரியர்க் குடன்பாடன்று. யாங் கூறியவாற்றாலறிக: அதுவன்றிப் பலவேறுபாடாய்ப் பலர்கூறுவனவெல்லாம் பொருந்தாமை யவருரையானே விளக்கினுர் ஆண்டுக்காண்க: கோடி சந்திரன், கதிர்மதி என்பன உருபும்பயனும் உடன்றொக்கதொகை. சந்திரப்பிரகாசம் என்பது வடசொற்புணர்ப்பு. பிரகாசமாய் என்புழிப் பிரகாசமெல்லா மொன்றாய்எனக் கொள்க:

ஆய் எனும் வினையெச்சம் வரும் என்பதோடு முடிந்தது. வரும் எனும் பெயரொச்சம் பெருமானாரது வடிவத்திற்கு மனுபான்மைக்காயதோர் உவமப்பொருத்த முடைத்தான பெருங்கதிர் மதியத்தினது பிரகாசத்தை யுணர்த்தி நின்றது.

இனி, அது "சந்திரனது தோற்றத்தை யுணர்த்தி யவதாரத்துக் குவமையாய் நின்றது" என்பர் முதலுரை யாசிரியர்.

அவதரித்தலி னிறுத்த முறையான சரித்திரத்தை யவதார மென்றுராதலி னது பொருந்தாதென மறுக்க: இதூஉம்;

பெருமானா ரித்தன்மைத்தெனவாய்ப் பூமியின்கண் தோற்றஞ் செய்தார்களென வெள்ளிடை மலைபோல் விளங்கக் "கோத றப்பழுத்து மதுரமேகனித்த" எனுந் தொடக்கத்தினை

யுடைய அசுவது செய்யுண்முதல் "இவர்க்கெதை யுவமை சொல்லுவதே" என்பதிறுவாய்க் கூறப்பட்டுள்ளன வெல்லாமாங்கே மறந்து இருளொழிய மதியம்வருவது போல **நபிறேனு** மிருளொழிய திருநபியெனும் மதியம் வருந்தோற்ற மென்பதே யாசிரியர்கருத்து, என்றுங் கூறுவர்.

இங்ஙனமாகுமேல் பெருமானாரது உதயம் நுதலுமிடத்தன்றோ நுதலுவர், அவ்வாறின்றிப் பெருமானாரது ஜனனகமஞ்சொல்லுவா மெனுந் துணிபுநுதலுமிடத்து ஆண்டுநுதலன் மரபாகாமையா லது ஆசிரியர்க் குடன்பாடாகா வென மறுக்க. இருளொழிய மதியம் வருவதுபோலக் **நபிறேனு** மிருளொழியத் திருநபிஎனும் மதியம் வருந்தோற்றஞ் சொல்லுவாம் என்று ராசிரியர்எனின் பொருந்து மென்பார்க்குத் தோற்றஞ் சொல்லுவா மென்றவிடத்துக் "கோதறப்பழுத்து" என்பது முதல் "இவர்க் கெதையுவமை சொல்லுவதே" என்பதீறாக நுதலுதன் மரபன்றிப் பிறவெல்லா மரபாகாவாகலின் பொருந்தா தென்க. அழகெனப் படுவதெல்லாம் பிறக்கும் நபிபெருமானா ரிடத்தானே என்ப வேத நூலாராகலின், அழகெனப் படுவதொன்றில்லை யவரேயொழிய வென்பதுவெளி. ஆகவே திருவென்றதாகுபெயராய் மேனியைக்குறித்து நின்றது. இணைக்கண்ணெனற்பாலது "கதிராயிரம்" என்பதுபோலக் கண்ணிணை என நின்றது. அது சங்கியோத்தர பத வெகுவிரீகி என்ப வடநூலார்.

போலவே என்புழி ஏகாரம் தமக்கொப்பு முயர்வுமில்லா நபி பெருமானாரது வடிவத்திற் குவமங்கூறுமிடத்து வந்தமையா லவ்வுவமப்பொருளாகிய மதியைச் சிறப்பித்து நின்றது. நபிபெருமானாரது அவதாரம் யாண்டும் வியப்புணர்த்துங் காரணத்தானே யப்பொருடோன்ற "வரும் அவதாரம்" என நிகழ்காலத்தானோதினர். ஆண்டு உயிர்த்து என்றசொல் செய்யுள் விகாரத்தாற் சிதைந்த வதனல் வருவித் துரைக்கப்பட்டது. இக்கருத்தறியாது முதலுரையாசிரியர் பிறரைப்போல மயங்கி யிடர்ப்படுவர், பிறர்மயங்கின வெல்லா மவருரையானே காண்க.

கண்ணிணை, திரு என்புழி உருபு மும்மையு மொருங்கே தொக்கன. மதியம் இரண்டாம் வேற்றுமைத்தொகை. செம்மை என்பதீறு கெட்டுச் செம் என நின்றது. கமலம் என்பது பொருளாகுபெயர். கமலக்கண் என்ப துவமைத்தொகை. மூன்றுகாலத்துமுளதாம் இயல்

பினையுடைய வெல்லாப் பொருளையு நிகழ்காலத்துப் பொருணிலைமை யுடைய செய்யும் என்னுஞ் சொல்லாற் கிளக்க என்பதற்கிலக்காய்க் கருணைவீற்றிருக்கும் என்னாது "கருணைவீற்றிருந்த" என்றதென்னோ வாசிரியர்? எனின் நபிபெருமானார் கடவுளிடத்துக் கிருபைமுழுவதும் பெற்றாரொனும் வேதபேரோதை மருச்செவியின ராகலின் அப்பொரு டோன்ற விறந்தகால வாய்ப்பாட்டாற் கிளத்தாரென்க: அது,

"ஏனையகாலமும் மயங்குதல்வரையார்"

என்றமையாற் காலமயக்கம்.

இனி திருநபி என்பது எழுவாய்வேற்றுமையென்றும் திருவென் பது தெய்வீகங்குறித்து நின்றதென்றும் அதுமேன்மை குறித்து நின்றதெனினு மமையுமென்றுங் கூறுவர் முத லுரையார்.

இவையெல்லாம் பொருந்தாமை யிவ்வையென விரிக்கிற் பல்கு மாகலின்யாங் கூறியவாற்ற லுய்த்துணர்க. கருணை என்பதெழு வாய்வேற்றுமை.

"எழுவாய்வேற்றுமைக் குருபேயின்று
பெயரோபயனிலைக் கொள்ளுந்தன்மையே
பயனிலைத்தன்னைக் கொண்டதன்மையே
வினைமுதலாதலே விகாரப்பெயரோ
பெயர்ப்பின்விகுதி பெறுதலேயாயவ
னனவனவா னகின்றவன்முத
லைம்பாற்சொல்லும் பெயர்ப்பின்னடைதலே
யுருபெனவெவ்வே றுரைத்தனர்பலரோ"

யாகலின் ஆனது என்பதெழுவா யுருபென்றறிக.

பெயர்களின் றகையானுஞ் சிறப்பானும் **நபி** என்பதினும் **றசூல்** என்பதளவறுமடங் கதிகமென்பான் விளங்க நபிகளடங்கலும் **றசூல்**க ளாகார்கள் என வேதநூ லலற்று மோதை யுருச்செவி யில்லெனத் தெளிந்த வாசிரியர் **நபி**பெருமானாரது அவதார மாதலின் **றசூ**லவதா ரஞ் செப்புவாம் என்னாது **நபி** யவதாரஞ்செப்புவாம் என்றதென் னையோ? வெனின் நன்றுகடாயினய்; அம்மகத்துவபிரான் றமக்கு நாற்ப தாண்டுற்றபோழ்து கடவுளினதாக்யாபனைக்குட்படிந்தும் நராதிகளை யவ்வாக்யாபனைக் குட்படச்செய்தும் வருங் காரணப் பட்டாபிஷேகம் பெற்றமையால் **றிஸாலத்தினும் நுபுவ்வத்தே** முதன்மைபற்றி யப் பொருடோன்ற நபி யவதாரஞ் செப்புவா மென்றார்.

இனி நபியென வழைக்கப்படுவா ரெல்லாம் பிரானது மெஞ்ஞானஸ்வரூப சோதியின் வரவைப்பற்றியகாரண மொன்றேபற்றிக் குறித்த சோதியை நபி யென்றுரா லாசிரிய ரென்பாருமுளர். நபி யென்பதறிவிக்கப் படுபவர் அறிவிப்பவரென்ற பொருள். றசூல் என்பது தூதர் என்ற பொருள். ஆகவே இவ்விருபாலருக் கிடை வேற்றுமையாதோ? எனின் நபிகள் கடவுளாற் பெறு முத்தரவிற்குத் தாமும் பிறரைப்போன் றுட்படிதற்குடன்படு மரபினர். றசூல்கள் கடவுளாற் பெறுமுத்தரவிற் கெல்லாமுடன்படு மரபினரன்று. இதுவே, தம்முள் வேறுபாடென் றுணர்க. போன்ற வெனற்பாலது போல வென இன்னிசைநோக்கித் திரிந்து நின்றது. செப்புவா மென் புழி. "யாம்" என்பது அவாய் நிலையால் வருவிக்கப்பட்டது. செப்பு வாம் என்பது தன்மைப்பன்மை முற்று. (க)

வே று.

(2.) கடியி ருந்தெழு கற்பக முஞ்சுடர்
வடிவி ருந்தம ணியும்வ னசமும்
படியுங் கார்முகி லேழும்ப ழித்துவிண்
குடியி ருத்துங்கொ ழுந்தடக் கையினர்.

இச்செய்யுண்முதல் "வரபதியுல கெலாம் வாழ்த்து மக்கமாபுர பதிக்கு" என்ற திருவாய் நபி பெருமானரது தந்தை இத்தன்மைத் தவர் என்பதூஉம் அவர் திருநாம மிஃதென்பதூஉ நவலுவான் றொடங்கினர்.

(ப - ரை.) சுடர் - பிரகாசமே, வடிவு - தமக்கு உருவாய், இருந்த - விளங்காநிற்கும், மணியும் - இரத்தினங்களையும், வனசமும்-முண்டகாசனையையும், பழித்து - இகழ்ந்துபேசி, கடி - வாசனை, இருந்தெழு - குடியிருந் தோங்காநிற்கும், கற்பகமும்- வேண்டிற்றெல்லாந் தரும் விருக்ஷத்தினையும், கார்படியும் - சூன் முதிர்ந்திராநிற்கும், முகிலேழும் - ஏழு மேகங்களையும், விண் - வானுலகின்கண், குடியிருத்தும்-குடிபடுத்தும்படியான, கொழும் - செழிய, தடம் - பெருமைதங்கிய, கையினர் - கையையுடையவர், எ-று.

(பொ-ள.) பிரகாசமேதமக்கு வடிவாய் விளங்காநிற்கும் இரத்தினங்களையு முண்டகாசனையையும் இக ழ்ந்துபேசி வாசனை குடியிருந்தோங்காநிற்கும் வேண்டிற்றெல்லாந் தரும்விருக்ஷத்தினையும் சூன்முதிர்ந்திராநிற்கும் ஏழு மேகங்களையும் வானுலகின்கண் குடிபடுத்தும்படியான செ ழிய பெருமைதங்கிய கையினையுடைய ரென் பதாம்.

கற்பகம், மணி, வனசம், முகில் என்பன விரண்டாவது தொக்கு நின்றன. வடிவிருந்த என்புழி ஆய்என்ற ஒருசொல் வருவித் துரைக் கப்பட்டது. மேகங்களேழனுள் ஐந்து முதலுள்ள மூன்றுமேகங் களும் முறையே மண், கல், தீ பொழியுமியற்கைய வாகலின் முகில் நான் கென்னுது ஏழென்ற தென்னையோ வாசிரியர்? எனின் பொழி தற் றெழிலொன்றே பற்றிமுதலாகிய தம்பொருட்கேற்ற கார் என் னும் அடைகொடுத்து முகிலை ஏழெனவிரித்துக் கூறினர். அல்லதூஉம்

"வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணறற் பாற்று"

என்றவள்ளுவரான் முகிலே, கற்பகம், மணி, வனசம் இம்மூன்றினு முலகப்பேற்றின்மிக்க சிறந்ததென்பதாயிற் றென்கவே முகில், முன் னிருத்தற் பாலதாயினும் பொழிதற்றெழி லொன்றே கருதினமை யான் முகிலையேழென வெண்ணி அவற்றின் பின்வைத்தார், இதனுனு மறிக.

'கற்பகம்' மணி, வனசம் இவ்விரண்டினுஞ் சிறந்ததாகலின் அவற் றின் முன்வைத்தார்; வனசமென்பது ஆசனையாகிய தம்பொருளை விட் டுத் தன்னிடத்திலுள்ள சீதேவியை யுணர்த்துகையான் விட்ட ஆகு பெயரென்க.

மணி பெற்றூர்க்கு மதித்தற்கரும்பொரு டருமாயினு மதித்தக்கா லிருவித குறைபாட்டிற் கிடனுமாகலானும், முண்டகாசனை சார்ந்தார் மாட்டு நிலையாதலையு மிழிபுடையதாதலானும் பழித்து என்றும், கற்பகம் காலமிடையுறுது உடனே கொடுத்தபோதினுங் கொடுத்தற்கு வேண்டப்படுந் தன்மையும் வேண்டப்படுவ தொன்றே தருந்தன்மையு மாகிய குறையுடைமையானும், முகிற்குத் தன்னிற்றுனே பொழியுந் தகை யிலாமையின் குறையுடைமையானும் எம் மெதிரிலிருத்தற்

பொருத்தமுடைத்திரல்லீர் என்பது தோன்ற விண்குடி யிருத்து மென்றுங் கூறினர்.

இங்ஙனமாகுமேல், அப்துல்லா எற்றாற் சிறந்தாரோ? எனின் லோக காருண்ய கருணையங்கடவுளை யிப்பூமண்டலஞ் சிறப்பக் கோடற்றகை யுடைத்தா யிருந்தமையாற் சிறந்தாரென்க. ஈண்டுக் கற்பகமுதலியன கொடுக்கும்பொருளிவையென்பதூஉம் அப்துல்லா கொடுக்கும் பொருள் பிரான் என்பதூஉங் கருத்தான் விளக்கிக் காரியமாகிய கொடுத்தலைக் காரணமாகிய கையின்மேலேற்றிக் கூறினாரென்றறிக.

கொழுமை என்ப தீறுகெட்டுக் கொழும் என நின்றது. படியும் என்புழிப் பூமண்டலமும் எனக்கொண்டு அதூஉம் பழிப்புறுமென் பாருமுளர். இச்செய்யுண் மாட்டிலக்கணத்தான் முடிந்தது.

இனி, ஆற்றுநீரொழுக்குப் பொருட்கோளதாய்க் கொண்டு முதலுரையார் மயங்கிக் கூறுவன வெல்லா மாசிரியர்க் குடன்பாடாகா வென்ப தியாங் கூறியவாற்றா னன்குணர்க. என்னை? மணி, வனசம் முறையே தேவமணியென்றும் வனச உருவாய்க்கிடக்கும் பொன்னென்றும் கூறுவதால் தேவமணி, வனச உருவாய்க் கிடக்கும்பொன் இத்தன்மைத் தாய பொருளென்பன தெற்றெனத் தோன்றாமையானுந் தோற்றுவிக்காமையானும் பிறவெல்லாம் வருமுறை கெடு மாகலானும் பொருள்வியந்து முடியாவென வறிக.

இங்ஙனம் விரிக்கிற் பல்குமாகலி னிறுத்தினும், உய்த்துணர்க.

வே று.

(3.) விண்டொடு கொடுமுடி மேரு வீறழித்
தெண்டிசைக் கிரியொடு மிகலுங் கொங்கையர்
கொண்டமா மயலொடு மனமுங் கூர்விழி
வண்டொடு வண்டுறை மாலை மார்பினர்.

(ப - ரை.) விண் - தேவலோகத்தை, தொடு - பிடிக்கும் படியான, கொடுமுடி-சிகரத்தையுடைய, மேரு- பொன்மா மலையினது, வீறு - பெருமையை, அழித்து - கெடச்செய்து, எண் திசை - அட்ட

திசைநிலைகொண்ட, கிரியொடும் - மலைகளோடும், இகலும் - விம்மலாற் பகைக்கும், கொங்கையர் - தனபாரங்களையுடைய பெண்களானவர்கள், வண் - தெளிவை, தொடு - உண்ணலால், கொண்ட - அடைந்த, மா - பெரிய, மயலொடு- மயக்கத்தினுல், மனமும் - சிந்தையும், கூர்விழி- நுண்மையாகிய நோக்கமும், உறை - தங்கும்படியான, வண்டு - தேனீக்களலம்பும், மாலை - வெற்றிமாலையணிந்த, மார்பினுர்-மார்பையுடையவர், எ-று.

(போ-ரை.) தேவலோகத்தைப் பிடிக்கும்படியான கொடுமுடியினையுடைய பொன்மாமலையினது பெருமையைக் கெடச்செய்து அட்டதிசை நிலைகொண்ட மலைகளோடு விம்மலாற் பகைக்கும் படியான தனபாரங்களை யுடைய பருவப் பெண்க ளானவர்கள் தெளிவை யுண்ணலாற் கொண்ட பெரிய மயக்கத்தினுலே அவர்களது சிந்தையும் நுண்ணிய நோக்கமும் தங்கும் தேனீக்களலம்பும் வெற்றிமாலை புரளாநிற்கும் மார்பினையுடையார் என்பதாம்.

விண், வீறு, வண் என்பன விரண்டாவது தொக்குநின்றன. தொடும் என்ப தீறுகெட்டுத் தொடுவென நின்றது. விண்தொடு என்புழி வானத்தைத்தொடு மென்பினும் மேகத்தைத்தொடு மென்பினு மமையும்.

இனி அதை விண்டு ஒடு வெனப்பிரித்துப் பிற பருவதங்களோடு மேருவினது வீற்றையு மழியச்செய்து எனக் கூறலும் பொருந்து மென்பது முதலுரையார்க் குடன்பாடுபோலும்; அது பொருந்தாது. என்னை? மேருவு மெண்டிசைக்கிரியும் கூறியபிற்றைப் பிற பருவதங்களையுமென வேறெடுத் தோதற் பயனில்கூற்ரும்; ஆகலினென்க.

இகலும் என்றமையான் அதற்கேற்ற விம்மலென்றசொல் வருவித் துரைக்கப்பட்டது. தனம், பொன்மாமலையினது வீற்றை எங்ஙனங் கெடுக்குமோ? எனின், பொன்மாமலை அடுத்தற்கா லருளுகிற மொன்றிற்கே யுரியதாதலின் கண்டோர் கண்ணினும் மனனினுங் கலையாவண்ண நிலையுங் காரணப்பேற்றினதாய கொங்கை வீறழிக்குமென்க. அட்டகிரிகளை மங்கையர்மார்பு விம்மலின் மிகையாவாயினும் நிகர்க்குமென்பான் இகலுமென்றார். இதைப் புனைந்துரையி லடக்குக.

"கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண்."

என்றார் வள்ளுவருமாகலின் புருஷாட்களின் புலாதிகளைக் கவர்தற்குரிமை பெண்கட்கே யுடைமையென்பதைத் தெற்றென மறந்து **அப்துல்லா**வினது மார்பு மங்கையர் மனனுங் கண்ணுந் தங்கற் கிடமென்றுரா லாசிரியர் எனின் அற்றன்று;—ஆவேவில் **அப்துல்லா**வினது சிறப்பும் மகவேவி லாமினுவினது கற்பும் இத்தன்மைத்தென்பது தோன்ற அவரது மார்பு பெண்களது மனனுங் கண்ணுந் தங்கற் கிடமென்றும் ஆமினு கற்பாற் சிறந்திருத்தலோடு தமது தலைவரும் இத்தன்மைத்தாயவழி யங்ஙாயகி பிறபுருடனை யாண்டும் வேண்டாளென்பதூஉந் தோன்ற வங்ஙனங் கூறியவாறென் றறிக. பருவத்தை யடைதலா னிகழுமின்பத்தை "வண்" என்றும் அதை யநுபவித்தலைத் "தொடு" வென்றுங் கூறினர். தொடு என்பது முதனிலைத் தொழிற்பெயர்.

இனி, "கூர்விழிவண்டொடு வண்டுறைமாலைமார்பினர்" எனக் கிடந்தவாறேகொண்டு கூர்விழியாகிய வண்டுகளோடு தேனுகர்வண்டினங்கள் உறையு மாலையையுடைய மார்பினுனென உருவகப்பொருட்டாய்க் கொள்வர் முதலுரையார். இங்ஙனமாகுமேல் மாலையின் சிறப்பன்றித் தலைமகன் சிறப்பாகாமையானும், அங்ஙனந் தலைமகன் சிறப்பே கூற லாசிரியர்க் குடன்பா டாகலானும் அவருரை பொருள்வியப் பின்றி முடிந்ததாதலி னது பொருந்தாதென மறுக்க.

உறைமார்பினர் என்புழி உறையு மழகினையுடைய மார்பையுடையானென விரிக்க. உறையென்பது வினைத்தொகை. மயலொடு என்புழி ஒடு என்பது ஆல் உருபின் பொருண்மைக்க ணின்றது.

"யாத னுருபிற் கூறிற் ருயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்"

என்ற சூத்திரத்தானு மறிக.

"ஆறறி வதுவே யவற்றொடு மனனே"

என்னும் விதியான் மனமும் புலாதிகளி லொன்றென்பான் மனமும் என்றார். மங்கையர் எழுவாய்வேற்றுமை.

வேறு.

(4.) கொன்னுனை வெண்ணிறக் கோட்டு வாரணச்
செந்நிறக் குருதியிற் றிமிர்ந்து வாய்கழீஇ
மின்னவிர் கணமணி விளங்கு மாமுடி
யொன்னல ருயிரைமேய்ந் துறங்கும் வேலினர்.

(ப - ரை.) வெண் - வெண்மையாகிய, நிறம் - ஒளியையும், கொல் - கொலைவிளைக்கும், நுனை - கூர்மையையுமுடைய, கோடு-கொம்புள்ள, வாரணம்-யானைகளினது, செம் - செம்மையாகிய, குருதியில் - நிணத்தினால், வாய் - வாயை, கழீஇ - சுத்திச்செய்து, மின் - பிரகாசத்தை, அவிர் - விளக்காநின்ற, கணம்-திரட்சிபொருந்திய, மணி - மணிகளின், நிறம் - ஒளியானது, விளங்கும் - பிரகாசியாநிற்கும், மா - மகத்துவம்பொருந்திய, முடி - மகுடம்புனைந்த, ஒன்னலர் - சத்துருக்களினது, உயிரை - ஆத்துமங்களை, மேய்ந்து - அருந்தி, திமிர்ந்து - திமிர்கொண்டு, உறங்கும் - துயிலாநிற்கும், வேலினர் - வேலாயுதத்தினை யுடையார், எ-று.

(போ-ரை.) வெண்மையாகிய ஒளியையும் கொலைவிளைக்குங் கூர்மையையுமுடைய கொம்புள்ள யானைகளினது செம்மையாகிய நிணத்தினால் வாயைச் சுத்திச்செய்து பிரகாசத்தை விளக்காநின்ற

திரட்சிபொருந்திய மணிகளின் ஒளியானது பிரகாசியாநிற்கும் மகத்துவம் பொருந்திய மகுடம்புனைந்த சத்துருக்களினது ஆத்துமங்களை மேய்ந்து திமிர்கொண்டு துயிலாநிற்கும் வேலாயுதத்தினையுடையா ரென்பதாம்.

கொல் என்பது முதனிலைத்தொழிற்பெயர். ஆண்டு உருபும் உம்மையு மொருங்கே தொக்கன. நிறம் என்பதூஉ மது. குருதியில் என்புழி இல் என்பது கருவிப்பொருளுணர்த்தும் ஆல் உருபின்பொருளில் நின்றது. வாய்கழீஇ என்னு மிலேசான் ஒன்னலர் என்புழிச் சிம்மவேறுக ளஞ்சும் பலாட்டியமுள்ள வரசர்களென்பதூஉம் உயிரை மேய்ந்து என்புழி அத்தகுதிபூண்ட வரசர்களையே யொழிய போரில் விரும்பா ரென்பதூஉம்,

"பொருளதிகார முன்னமுத்தி"

என்ற விதியானே கருத்தென் றறிக.

அருந்துமுன் வாயலம்பு மரபானே "வாரணக்குருதியில் வாய்கழீஇ ஒன்னலருயிரைமேய்ந்துறங்கும்" என்று ராசிரியர்.

இஃதறியா முதலுரையார் "ஒன்னலருயிரைமேய்ந்து வாரணக்குருதியில் வாய்கழீஇ உறங்கும்" என மாற்றிக்கூறி யிடர்ப்படுவர். அங்ஙனம் படுமிடர் என்னையோ? எனின், வாயலம்பி யருந்துமரபானே அருந்திய பிற்றையு மலம்புமென்பது இலேசான் பெறும். அருந்தியபிற்றை யலம்புமென்றவழி யருந்து முன்னரு மலம்பு மென்பது தெற்றெனப் படாமையானென்க.

வாய், மின், வேல் என்பன விரண்டாம் வேற்றுமைத் தொகை.

இனி கணமணி என்புழி மணிக்கண மென்றும் அவை நவமணி என்றும் கூறுவர் முதலுரையார்; அவை பயனில் கூற்றும்; என்னை? மணியென்ற பொதுமையான் நவமணியென்பது தோன்றி கணம் என்பது அவற்றின் திரட்சியை யுணர்த்தி வியந்த பொருள் பயவாமையா னென்க.

அவிர் என்பது வினைத்தொகை. திமிர்த்தென்பது திமிர்ந்தென மெலிந்து நின்றது. வேலினர் என்புழி இன் சாரியை.

(5.) முடங்கலங் கைதைமுள் ளெயிற்று வெண்பணிப்
படங்களா யிரத்தினும் பரித்த பாரெலா
மிடங்கொள்பூ தரப்புயத் திருத்தி யேதிலார்
மடங்கலே றெனுமன வலியின் மாட்சியார்.

(ப-ரை.) கைதை - தாழையினது, முடங்கல் - மடங்குதலாகிய, அம் - அழகிய, முள் - முட்போலும், வெண் - வெண்மைபொருந்திய, எயிறு - விடப்பற்களையுடைய, பணி - ஆதிசேடன், படங்கள் ஆயிரத்தினும் - தன் படாமுடிக ளாயிரத்தானும், பரித்த - சுமந்திராநின்ற, பார் எல்லாம்-பூலோகமெல்லாம், இடங்கொள் - விசாலம் பொருந்திய, பூதரம் - மலைபோலும், புயத்து-தமதுபுயத்தின் வலியை, இருத்தி - நிலைநிறுத்தியவர், ஏதிலார் - அன்றியும் மதங்கொண்ட யானைகளையொத்த பகைவர்களுக்கு, மடங்கல் ஏறு எனும் - ஆண்சிம்மமென்று சொல்லும்படியான, மனம் வலியின் - மனவன்மையையுடைய, மாட்சியார் - பெருமை பொருந்தியவர் எ-று.

(போ-ரை.) தாழையினது மடங்குதலாகிய வழகிய முட்போலும் வெண்மைபொருந்திய விடப்பற்களையுடைய வாதிசேடன் தன்படாமுடிக ளாயிரத்தானுஞ் சுமந்திராநின்ற பூலோகமெல்லாம் விசாலம்பொருந்திய மலைபோலுந் தமதுபுயத்தின் வலியை நிலைநிறுத்தியவர், அன்றியும் மதங்கொண்ட யானைகளையொத்த பகைவர்களுக்கு ஆண்சிம்மமென்று சொல்லும்படியான மனவன்மையையுடைய பெருமை பொருந்தியவர் என்பதாம்.

முள்ளெயிறு, பூதரப்புயம் என்பன வுவமைத்தொகை. ஆயிரத்தின் என்புழி இன் சாரியை. ஆண்டு ஆலுருபுதொக்கது. அப்துல்லாவினது பெருமை லோகத்தினும் பெரிதென்பான் கருதி "பணிபடங்களாயிரத்தினும் பரித்தபாரொலாம்" எனப் படத்தைவிரித்தும் புயங்களென்னுது புயத்து என்றும் ஓதினர். புயத்திருத்தி என்புழிப் புயத்தின் வலியை இருத்தி யென்பது கருத்து, அது புயத்திற் கணிகலமாதலின். ஈண்டுப் பாரொலா மென்பது உயிர்மேனின்றது.

> இனி, முதலுரையார் பாரொலாம் என்புழி எலாம் என்பது பொதுப்படுத்தவந்த உரிச்சொல் லென்பர். இதூஉம் பாரொலாம் புயத்திருத்தி என்புழிப் பூமிமுழுவதையும் புயத்தின்கண் ணிருத்தியவ னென்றும் வாளாக் கூறுவர்.

ஏதிலார் மடங்கலேறு என்றமையான் ஏதிலார் என்புழிச் சத்துராதிகளாகிய யானையென்ரும். அது ஏகதேசஉருவகம். ஏதிலாரென்பது பகைமைப்பொருளிடத்து வந்த நான்காம்வேற்றுமைத்தொகை. இனி வேற்றுமையுருபுக ளிடையிலே தொக்குமென்ருராயினும் அவை விரிந்துநிற்குமிடத்து எப்பொருட்படுமோ அப்பொருட்படுமிடத்தே தொக்குநிற்கப்பெறும், அப்பொருட்படா விடத்தே தொக்குநிற்கப் பெரு வென்ற மரபை யுடன்மறந்து ஆங்கு ஏதிலார் மடங்கல் எனப் பொருண்மயங்கக் கூறினு ராசிரியரெனக் குற்றங்கூறுவாரு முளர். அவர் அவை வருமிட மிவையென வறியாவறிவிலிக ளென்க. இருத்தி என்பதனை முதலுரையார் விரித்தார்; ஆண்டுக் காண்க.

பரித்த என்புழி முன்னுரைத்தாங் குரைக்க. மனவலி யென்பது ஒருசொன் னீர்மையது.

(6.) மாக்கட னெடும்புவி வளைந்த வன்கலி
நீக்கிய வெண்குடை நீழ லோம்புவோர்
வீக்கிய கழலடி வேந்தர் பொன்முடி
தாக்கிய மறுச்செழுங் கமலத் தாளினர்.

(ப - ரை.) மா - பெருமைபொருந்திய, கடல் - கடல் சூழ்ந்த, நெடும் - பெரிய, புவி - பூலோகத்தை, வளைந்த - நெருங்கிய, வன் - வலிய, கலி - பகைவர்களின தச்சத்தை, நீக்கிய - தொலைக்கும்படி

யான, வெண்குடை - வெள்ளியகவிகையினது, நிழல் - பெருமையால், ஓம்புவோர் - காப்பாற்று பவராகிய, கழல் - வீரப்பூண்களை, அடி - பாதத்தின்கண், வீக்கிய - அணிந்திராநின்ற, வேந்தர்- வேந்தர்களினது, பொன்முடி - பொன்னாலாகிய மகுடங்களை, தாக்கிய - உதைத்த, மறு - தழும்பையுடைய, செழும்-செழிய, கமலம் - தாமரை மலர்போலும், தாளினர் - பாதத்தினையுடையார், எ-று.

(போ-ள.) பெருமைபொருந்திய கடல்சூழ்ந்த பெரிய பூலோகத்தை நெருங்கிய வலிய பகைவர்களினது அச்சத்தைத் தொலைக்கும்படியான வெள்ளிய கவிகையினது பெருமையாற் காப்பாற்று பவராகிய வீரப்பூண்களைப் பாதத்தின்கண் அணிந்திராநின்ற வேந்தர்களினது பொன்னாலாய மகுடங்களை யுதைத்த தழும்பையுடைய செழிய தாமரைமலர்போலும் பாதத்தினை யுடையார் என்பதாம்.

பூமி அளத்தலருமையவாகலின் நெடும்புவியென்றும் அதைச் சூழக்கிடத்தலின் கடலை மாக்கடலென்றும் கூறினர். வளைந்தவன்கலி என்புழிப் பகைவர் அவாய்நிலையான் வருவிக்கப்பட்டது. கலி, கழல், முடி யென்பன விரண்டாம் வேற்றுமைத்தொகை. வெண்குடை என்பது இராஜசின்னத்தி னொன்று. குடை, வேந்தர் என்பன ஆறுவது தொகை. நிழல் என்புழிக் கருவிப்பொரு ளுணர்த்தும் ஆல் உருபு தொக்குநின்றது. ஓம்புவோர் எனுங் குறிப்புமுற்றுப் பெயரெச்சப் பொருளி னின்றது. அது: —

"தொழிற்பெயர் வினைமுதல் செயப்படு பொருளே
கருவி யிடம்பெய ரெச்சமுற் றாகலு
மிருவகை முற்றுமீ ரெச்ச மாகலு

மிருவகை யெச்சமு முற்றே யாகலு
முளவென மொழிப வொரோவழிப் புலவர்"
என்றதனு னறிக.

நெடும், வன், வெண், செழும் என்பன வீறுகெட்டு நின்றன. அடிவீக்கிய என்புழி ஏழாவது தொக்குநின்றது. பொன்முடி என்புழிப் பொன்னு னியன்ற முடியெனினு மமையும்; கமலம் ஆகுபெயர்.

இனி வளைந்தவன்கலி என்புழிப் "பூமியைவளைந்த வலியவறுமை" என்றும், வெண்குடைநீழ லோம்புவோர் என்புழி "அப்பஞ் சத்தை வெள்ளைக்குடையினது நீழலால் காப்பவரும்" என்றும் பொருட்கொண்டு வாளாமயங்கி யிடர்ப்படுவர் முதலுரையார், என்னையோவிடர்? எனின் பஞ்சத்தை நீக்குதல் தியாகத்தினது இயற்கையேயன்றி வீரத்தின தியற்கை யன்றென்பது வெளி. ஆகவே ஈண்டு அப்துல்லாவினது வீரத்தையே கூறியுள்ளமையான் கலியென்பதைப் பகைவரது வலிய அச்சமென்றும் ஓம்புவோ ரென்பதைக் கழலடி வேந்தரொடு படுத்தி யித்தன்மைத்தாய வேந்தரினது பொன்முடியை யுதைக்குங் கழலினுரென்றும் முடியும் பொருள்வியப்பை யாங்கே மறந்துபோதலே என்க. பிற வருவனவெல்லா முய்த்துணர்க.

(7.) வரபதி யுலகெலாம் வாழ்த்து மக்கமா
புரபதிக் கதிபதி யென்னும் பூபதி
பரபதி யரசர்கள் பணிந்தி றைஞ்சிய
நரபதி யப்துல்லா வென்னு நாமத்தார்.

(ப - ரை.) வரம் - ஆசீர்வாதத்தையுடைய, பதி - தலங்களமைந்திராநின்ற, உலகெலாம் - எல்லா உலகங்களும், வாழ்த்தும் - புகழும், பரம் பதி - பரமண்டலத்து, அரசர்கள் - தலைவர்களும், பணிந்து - தாழ்ந்து, இறைஞ்சிய - வணங்காநிற்கும், மக்கம் - மக்காவென்கிற, மா - மாட்சிமைப்பட்ட, புரம் பதிக்கு - (நகரமாகிய) விராஜதானிப் பட்டணத்திற்கு, அதிபதி யென்னும்-

தலைவர்களென்று சொல்லும், பூபதி - அரசர்கட்கும், நரர் - நராதிகட்கும், பதி - ஒளிவு போலும், அப்துல்லாவென்னும் - அப்துல்லாவென்றுவழங்கும், நாமத்தார் - பெயரையுடையவர், எ-று.

(போ-ள்.) ஆசீர்வாதத்தினையுடைய தலங்களமைந்திராநின்ற வெல்லாவுலகங்களும் புகழும் பரமண்டலத்துத் தலைவர்களும் தாழ்ந்து வணங்காநிற்கும் மக்கா வென்கிற மாட்சிமைப்பட்ட விராஜதானிப் பட்டணத்திற்குத் தலைவர்க ளென்று சொல்லும் அரசர்கட்கும் நராதிகட்கும் ஒளிவுபோலும் அப்துல்லாவென்று வழங்கும் பெயரையுடையவர் என்பதாம்.

அறுஷு, குறுஸு, பைத்துல்மஅழூர், காபா, கௌஸைஸன், பைத்துல்முகத்தஸ், இல்லியீன் முதலியனவெல்லாம் ஆசீர்வதிக்கப்பெற்ற தலங்களாகலின் வரபதி யென்றும், இவைகள் வானலோகத்தினும் சுவர்க்கலோகத்தினும் பூலோகத்தினு மமைந்திருத்தலினானே உலகெலாம் என்றுங் கூறினர். வரபதி உருபும்பயனு முடன்றொக்க தொகை. பரபதி யரசர்கள் என்பது ஈண்டு ஜிபுறியீல், மீக்காயீல், இஸ்றபீல், இஜ்றயீல், றிலுவான் முதலினோரை யுணர்த்திநின்றது. இவர்கள் எல்லா உலகத்தாராலும் புகழப்படுதலின் "வரபதியுலகெலாம்வாழ்த்தும் பரபதியரசர்கள்" என்றார். உலகம் என்பது ஆகுபெயராய் உயிர்கண்மே னின்றது. அரசர்களும் என்புழி உயர்வுபற்றி வந்த சிறப்பும்மை விகாரவகையாற் றொக்கது. இறைஞ்சிய என்பது காலமயக்கம். மக்கம் ஜிபுறியீல் முதலாயினோராலும் யாண்டும் பிரதக்கணஞ் செய்யப்பட்டுவருதலின் "மாபுரபதி" என்றார்; ஆகவே மக்கத்தின் சிறப்பை வரையாமை கூறினாரெனக் கொள்க.

மக்கம் எற்றா லியாவற்றினுஞ் சிறக்குமோ? வெனின், லோககாருண்ய கருணையங்கடவுளின் உதயத்திற்கு ஏதுவாதலி னென்க. "மக்கமா" என்புழி எனும் என்ற ஒருசொல் வருவித்துரைக்கப்பட்

டது. பூபதி, நரர் என்புழித் தகுதிகுறித்துநின்ற நான்கனுருபு மும்மையு மொருங்கே தொக்கன.

மக்கத்தார் பிறநகரரரிலெல்லாம் சிறந்தாரொன்பதூஉம் பெருமானூர் உதயஞ்செய்யாநின்ற குடும்பமோ அவரொல்லாரினுஞ் சிறந்ததென்பதூஉம் வேதாகம வளவையால் விளங்குமாகலின் பெருமானுரினது தந்தையோ நரராதிகளுக்கெல்லாம் சிறப்புடையாரொன்பது வெள்ளிடைமலைபோல் விளங்குமாகலின் இந்நூலாசிரியர் அதுனன் குடும்பத்தாரை "மக்காபுரபதிக் கதிபதியென்னும் பூபதி" யென்றும் அக்குடும்பத்தாரினும் **அப்துல்லா** மிக்க சிறப்புடையா ரொன்பது தோன்ற "பதி" என்றுங் கூறினர். நரரொன்பது மனுஷப்பொதுப் பெய ராகலின் அதினுமிழிந்த ஜின்னுதிகளு மடங்குமென்க. பதி, அப்துல்லா என்ப துவமத்தொகை.

இக்கருத்தறியாது முதலுரையார் "உலகெலாம் வாழ்த்தும் வரபதிமக்கம்மா புரபதிக்கதிபதி யென்னும் பூபதிபரபதியரசர்கள் பணிந்திறைஞ்சிய நரபதி அப்துல்லா வென்னுநாமத்தார்" எனப்பிரித்து "உலகமுழுவதும் வாழ்த்தாநிற்கும் வரபதியாகிய மக்காவென்னும் பெரிய விராஜதானிநகரத்திற்கு அதிபரொன்றுசொல்லும் பூமிபதியும் பலநகரங்களின் அரசர்களுந் தாழ்ந்துவணங்கும் மனிதபதியும் **அப்துல்லா** வென்று சொல்லும் பெயரினையு முடையவர்" எனப் பொருள்வரைந்தார். இவர் பூமிபதி மனிதபதி என்பதனுனே யுறும் இடரறியாது வாளாமயங்கிப் புத்தகமுடிவதொன்றே முடிபெனப் போந்தார்போலும். இதூஉமன்றி முதற்செய்யுளொழிந்த இச்செய்யுள்வரையுள்ள செய்யுட்களைக் குளகமென்பர். பிற வருவனவெல்லா மூய்த்துணர்க.

(8.) செழுமழை முகிலென வமுதஞ் சிந்திட
வழிகதிர் நபியென வகுத்த பேரொளி
பொழிகரத் தப்துல்லா விடத்திற் பொங்கியே
யெழிறரு திருநுத லிடத்தி லங்குமே.

(ப - ரை.) வழி - மிகுதலால் வடியாநிற்கும், கதிர் - பிரகாசத்தையுடைய, நபியென - முகம்மதுநபி

யென்று, வகுத்த - ஒப்பறப் பிரிக்கப்பட்ட, பேரொளி - (முதற்பாட்டிற்கூறிய) பிரபையானது, செழும் - செழிய, மழை முகிலென - மழையைப் பெய்யாநிற்கு மேகங்களைப்போல, அமுதம் - முத்தியை, சிந்திட - சிதையுற, பொழி - ஈகின்ற, கரம் - கையினையுடைய, அப்துல்லா - அப்துல்லாவினது, இடத்தில் - உள்ளத்தின்கண், பொங்கி - சென்று பிரவாகித்து, எழில்தரும் - அழகு விளங்காநிற்கும், திரு - தெய்வீகத்துவ, நுதலிடத்து - நெற்றியினின்று, இலங்கும் - பிரகாசிக்கும், எ-று.

(போ-ரை.) மிகுதலால் வடியாநிற்கும் பிரகாசத்தினையுடைய முகம்மதுநபி யென்று ஒப்பறப் பிரிக்கப்பட்ட (முதற்பாட்டிற்கூறிய) பிரபையானது செழியமழையைப் பெய்யாநிற்கு மேகங்களைப்போல முத்தியைச் சிதையுற வீகின்ற கையினையுடைய அப்துல்லாவினது உள்ளத்தின்கண் சென்று பிரவாகித்து அழகுவிளங்காநிற்குந் தெய்வீகத்துவ நெற்றியினின்று பிரகாசிக்கும் என்பதாம்.

மழையானு முலகிற்கு இழவுறுமென்பது வெளியாகலின் மழைமுகி லென்னுது பயனளித்துச் சேடங்காற்பட்டுக் கடற்சாரப்பெய்யுந் தகுதியுடையது வென்பது தோன்ற "செழுமழைமுகில்" என்றும் அதற்கொப்ப நன்மைபயந்து வழியுமாறு ஈதற்பற்றி "அமுதஞ்சிந்திடப் பொழிகரத்து" என்றும் முகில் உவமமுங் கரம் உவமேயமுமாய்க் கூறினர். அது பயவுவம மென்க:

அமுதம் இரண்டாம் வேற்றுமைத்தொகை. சிந்திட வென்பது பகுதிப்பொருள்விகுதி. வழி, பொழி யென்பன வினைத்தொகை. முகிலென .வென்புழி என என்ப துவமையுருபு. மிகக்கொடுத்தலால் சிந்திட பொழிகரத் தென்றார்.

இனி, பொழிகரத் தப்துல்லாவிடத்திற் செழுமழை முகிலென வமுதஞ் சிந்திடப் பொங்கி எனக்கூட்டி "நிதியைச்சொரியுங் கைகளையுடைய **அப்துல்லா**விடத்திற் செழியமழை மேகம்போல வமுதத்தைச் சிந்தாநிற்பப் பொலிந்து" எனப் பொருள்கொள்வர் முதலுரையார். இவற்றில் செழுமழைமுகி லுவமமும் பிரானதுஜோதி யுவமேயமுமாய் **அப்துல்லா**வினது பொழிதலுக்கு உவமை யின்மையான் அவரதுகரம் ஒப்பற்றதுமாய் முடிந்து பொருள்சிறப் பிழவுபடுமாகலி னவருரை போலியா மென்க.

**அப்துல்லா** உயர்திணையிற் சிறந்தவராதலின்,

"ஈயென் கிளவி யிழிந்தோர் கூற்றே"

என்றற் றிலக்காய்ப் பொழிகரத்து என்புழி ஈயாநிற்குங் கரத்து என்ரும். இல்வாழ்வானென்பான் என்ருற்போல வகுத்த பேரொளி யென்பது படுசொலற்றுப் படுபொருளேற்று நின்றது. "வழிகதிர் நபியென வகுத்த பேரொளி" என்புழி அப்பொருட்கேற்ற ஒப்பற வென்ற ஒருசொல் அதிகாரவகையான் வருவித்துரைக்கப்பட்டது. நபிபெருமானுர் கடவுளன்றி யறிதற்கமையாத் தவப்பேற்றினையும் ஒப்பின்றி யெவற்றினுங் கலவாத் தூய்மையுமுடையவராய்ப் பிரிக்கப் பட்டவரென்பது தோன்ற வகுத்தபேரொளி யென்ருர். படைக்கப் பட்டனவும் படைக்கப்படுவனவும் அவர் இன்றியமையா வென்பதனுனு மறிக.

இக்கருத்தறியாது வகுக்கப்பட்ட பேரொளியானது வகுத்தற் கிடமாயதோர் வஸ்துவைப்பற்றியல்லது வாராது; ஆகவே அத்தொழில் நிகழற்கிடமாய வவ்வஸ்து பேரொளிவிற்கு ஆதியாயும் அப்பேரொளியினுஞ் சிறப்புடையதாயும் ஆகுமன்றே? ஆதலினுலே யப்படி நபிபெருமானினுஞ் சிறப்புறுவது கடவுளேயொழிய பிற யாவுள? எனக்கருதி யவ்வஸ்துவே கடவுளாதல் வேண்டுமெனுந் தவறுளம்பற்றி வகுத்தபேரொளி என்பதைக் கடவுள் தன்னொளியினின்று பிரித்த ஒளியென வேதநூலோடு முழுதுஉ முரணுரைவரைந்து யிடர்ப்படுவர் முதலுரையார். அங்ஙனங் கூறிற் படுமிட ரென்னையோ? எனின் கூறுதும்:—

கடவுள் பிரிக்கப்படுமேல் பிரித்தற்கேதுவாய், அளத்தற்கமைவாய், வடிவிற்குரித்தாய், தலத்திற் பொதிவாய், குணத்திற்பலவாய்,

காலத்திற்கலப்பாய், பிறவுமுளவாய் முடிவன். ஆகலானும் யாங் கொள்ளுங் கடவுள் கூறப்படு மிழியனவொன்றும் பொருந்தாஞகலானு மவர்கூற் றிடர்ப்படு மென்க.

அப்துல்லாவிடத்து என்புழி இடம் என்பது அவரது ஐம்புலன் களையு முணர்த்தி ஆறுவதாகிய மனத்தோடு நின்றது.

இனி அதை அப்துல்லாவின துடல்முழுதும் எனக்கொள்வர் முதலுரையார். அது பொருந்தாது. என்னையோ? எனின், உலகெலாஞ் சிறந்தா னென்புழிப் பாழ்ந்தலங்களினுஞ் சிறந் தானென்பதன்று. பொழிலுந் தொழிலும் மனையுங்கொண்ட மானிடாதிகளைப் படைத்தவிடத்திலே சிறந்தா னென்பது போல அப்துல்லாவை யுலகம்போற்கொண்டு அதிற்சிறந்த புலாதிகளைப்பற்றி அப்புலாதிகளிற் சிறந்த வுள்ளத்தைக் குறித்துநின்றதென்க. அவ்வாறுகொள்வதிற் சிறப்பென்னை யோ? வெனின், மதித்தற்கரிய மாட்சிபூண்ட கிருபாகரக் கடவுளைத் தகையோடு அறிதற்கு மனமொன்றே யுரித்தன் றிப் பிற யாவுள? ஒன்றுமில்லையாகலின் மனமே சிறந்த தென்க. இக்கருத்தேபற்றி யாசிரியர் புராண முதற்பாட் டில் "பெருந்தலம்புரந்தகருத்தனை" என்று ரதனுனு மறிக.

அங்ஙனமாகவே மனமாகிய பேரிடத்தி னிறைந்தபேரொளி நுத லிடத்திலங்கும் என்ற தெற்றிற்கோ? எனின், புலாதிகளிற் சிறந்த மனத்தின்க ணிறைந்து மடங்காத பெருமானுரது ஒளி யித்தன் மைத்தென்பது வெளியாயுந் தோன்றவேண்டுமென விறைவன் கருதி ஜடத்திற் சிறப்புடைய நுதலின்கண்ணு மிலங்கச்செய்வித்தா னென்க.

பொங்கியே, இலங்குமே எனு மேகாரங்கள் முறையே விசை நிறையும் ஈற்றசையு மெனக்கொள்க. பிற வருவனவு முய்த் துணர்க.

(9.) அயிலுறை செழுங்கரத் தப்துல் லாவெனும்
பெயரிய களிறுக்கோர் பிடியும் போலவ
ருயிரென விருந்தசைந் தொசிந்த பூங்கொடி
மயிலெனு மாமினு வென்னு மங்கையே.

இச்செய்யுண்முதல் "குணிப்பறுங்குறைஷியங் குலமென்றோங்கிய" என்ற செய்யுளிறுவாய் ஆமினு அப்துல்லாவினது மனைவியென்பதூஉ மவ ரித்தன்மைத்தவ ரென்பதூஉங் கூறுவான் றொடங்கினர்.

(ப - ரை.) அயில் - வேலாயுதம், உறை - ஒழியாதிருக்கும், செழும் - செழிய, கரத்து - கையினையும், அப்துல்லா வெனும் - அப்துல்லா வென்று சொல்லும், பெயரிய - பெயரினையுமுடைய, களிறுக்கு - ஆண்யானைக்கு, ஓர் - ஒப்பற்ற, பிடியும் போல் - பெண்யானைபோலவும், அவர் - அவரது, உயிர்என - உயிர்போலவும், இருந்த - கலந்திருந்த, ஒசிந்து அசைந்த - உலாவித்துவளாநிற்கும், பூ - அழகிய, கொடி - கொடிபோலுமிடையினையுடைய பெண்ணனவர், மயிலெனும் - சாயலில் மயில்போலும், ஆமினுவெனும் - ஆமினுவென்று சொல்லும், மங்கை - மூன்றாம் பருவத்தை யுடையவர், எ-று.

(போ-ரை.) வேலாயுத மொழியாதிருக்குஞ் செழிய கையினையும் அப்துல்லா வென்றுசொல்லும் பெயரினையுமுடைய வாண்யானைக்கு ஒப்பற்ற பெண்யானை போலவும் அவர துயிர்போலவுங் கலந்திருந்த உலாவித் துவளாநிற்கும் அழகிய கொடிபோலு மிடையினையுடைய பெண்ணனவர் சாயலின் மயில்போலு மாமினு வென்று சொல்லும் மூன்றாம்பருவத்தை யுடையவர் என்பதாம்.

உள்ள, உண்ண, உறங்க அயிலொழித லொன்றேயன்றி யொழியாக்கரத்தின ரென்பதுதோன்ற உறைகரத்தென்றார். உறை வினைத்தொகை. செழுமை ஈறுகெட்டுநின்றது. ஓர்பிடியும்போல் என்புழி ஓர் என்பதை எண்ணுப்பெயராய்க் கொள்வர் முதலுரையார்; ஆமினுவை அப்துல்லாவுக் குயிரொன்றமையானும்

பிறவாற்ருனும் அது ஆசிரியர்க் குடன்பாடர்காவென மறுக்க. பிற வருவனவெல்லாங்கூறுது மாண்டுக் காண்க.

"பிடியென் பெண்பெயர் யானை மேற்றே"

என்றவிதியான் ஆமினுவைப் பெண்யானையென்ருும். அவர் என்னுஞ் சுட்டுப்பெயர் அப்துல்லாவை புணர்த்திநின்றது. பிடியும் என்புழி

"எச்சஞ்சிறப்பே"

என்றவிதியா னிறந்தததழீஇயதாதலின் உயிரென என்புழியுஉ மும்மை பெறப்பட்டது.

"புகழ் புரிந் தில்லிலோர்க் கில்லை"

என்றுற்போல அவருயிரெனவிருந் தசைந்தொசிந்த என்புழி இருந்த வென்னும் பெயரெச்சத்து அகரம் விகாரவகையாற் ருெக்கது. இருந்த என்புழிக் கலந்த என்ற ஒருசொல் செய்யுள்விகாரத்தாற் பெறப்பட்டது. பூங்கொடி என்பது உவமைநிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை. "மயிலெனுமாமினு"மெய்யுவமம். அசையுமென்பது அசைந்த வெனத் திரிந்துநின்றது. களிறுக்குப் பிடி என்றமையான் ஆமினு மனைவியென்பதும் அவருயிர் என்றமையான் ஆமினுவையே ஒழிய அப்துல்லா "பிறப்பெண் விரும்பில" ரென்பதுங் கருத்தாயிற்று. ஆகவே ஆமினுவுமது வென்பது வெளி. இது ஒற்றுமை அங்ஙனமாகு மேல் அப்துல்லா முதற்றே இல்வாழ்க்கை யிழந்தனராகலினுனே உயிர் உடம்பில்லாது நிலையாதென்பார் ஆமினு பிறநாயகன் விரும்பு மென்ருலோ? வெனின், அறியாது கடாயினுய்; உயிர்தானே விளங்கப் பிறதலம்வேண்டாது தன்னிற் ருனுய் நிலைத்துப் புலாதிகட் கோர் முதற்காரணமாய் அளத்தலமையாது விளங்கும் வஸ்துவே ஆவி, உயிர், ஜீவன் எனப் பொருட்படுவதானும் காலம், திசை, தலம் வேண்டி உயிராது விளங்காவடிவிற்கே மெய், உடல், உடம்பு எனப் பொருட்படுமாகலானும் உடம்பே உயிராது நிலைக்காதெனவும் உயிர் தானே நிலைக்கு மெனவுங் கூறி அது கடாவாகாவென மறுக்க. இதூஉம் தமிழாசிரியரும் உயிரொன்றும் மெய்யென்றும் எழுத்து வகைப்படுத்தி உயிரை தானேவிளங்கி யொலித்துப் பொருட்படவும், மெய்யை அதற்கெதிரிடையாகவு மமைத்து உயிரே மெய்யினையியக்கித் தாமே அருவாய் வடிவின்றி நிற்றலின் உயிராயின வென்றும் மெய் இனத்தென்பது தோன்ற வளைமாத்திரை ஒலி கொடுத்தாராயினும்

உயிரோடியைந்து வருமாயின் உயிரளவே யொலிக்குமென்றும் விதித்தார். இதுபற்றியே தொல்காப்பியனர்,

"உயிரில்லெழுத்தும்"

எனச் சூத்திரம்வகுத்து அம்மெய்யிற்குப் பெயர்கொடுத்தானெனவுங் கூறி மறுக்க.

இனி,

"எழுத்தெனப் படுப அகரமுதல் னகரவிறுவாய்"

என்ற விதியான் புள்ளிவடிவிற்கும் எழுத்தெனும் பொருள் சிறக்கின்றதே எனின், அற்றன்று. உயிரிழந்து அசைவற்றுக் கிடக்கும் உருத்தோற்றத்திற்கு உலகவழக்கான் பிணமெனும்பொருட் சிறக்குமாறு அகரமுத லென்றமையான் அகரமாகிய உயிரெழுத்தின் சிறப்புப்பற்றி அதையடுத்துவரூஉ முருத்தோற்றத்திற்கு மொற்றுமைவகையான் எழுத்தென்று ரொன்க.

இதுகாறு முயிர் தனித்தியலுமென்று யல்லது மெய்யோடு பொருந்தாதெனக் கூறிற்றிலேயாகலின் உயிர் பலவகைப்பட்ட மெய்யோடு மியையுமாறு ஆமினுவாகிய உயிர் பலவகைப்பட்ட மெய்யோடு மியையுமென்றுலோ? வெனின், அறியாது கடாயினுய்; ஆண்டு அவருயிர் என்றமையான் அப்துல்லாவினது உயிரொன் றடங்குமல்லது பொதுவாய் உடற்கெலா முயிரொன்றுகா. இதூஉமன்றி ஒருடம்போடுடன்பட்ட உயிர் பிறவுடம்பு வேண்டாவென்பதூஉம் வேதாகமவிதி. அன்றியும் உயிர் தனித்தியலு மாற்றலுடைமையான் மெய்யோ டியைபுவேண்டாது உயிரோடுயிர் தனித்துநின்று ஆ ஓ என வொலித்துப் பசுவோவெனப் பொருட்பட்டு வருதல் வெளியேயாயினும் ஆசிரியர் சிலகாரணம்பற்றி உயிரோடுயிர்க்கு மயக்கவிதி கூறுமையாய் அவ்வோசைக் கியைந்த மெய்யொன்றை யுருவடிவாயெழுதி யம்மெய்யின் மேல் வருமுயிரையேற்றி ஆவோ என வெழுதல்வேண்டு மென்றூர். அதுபோல ஆமினுவாகிய உயிர்க்கேற்ற வுடம்பு அப்துல்லாவேயெனக் கொள்ளுகையான் பிறவுடம் பாங்கனம் வேண்டிற்றிலே யென்றுங் கூறி மறுப்பாரு முளர். இச்செய்யுளான்,

"அதுவே தானே அவளே"

என்ற விதிபற்றி வந்த காந்தருவமண மிணைத்தென்பது கூறினூராகலி னறிந்தடங்குக.

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு."

என்ற வள்ளுவரான் உயிர் பிறவுடம்பு வேண்டுமென்றுலோ? எனின், அது கூடாதென்பதை யவ்வள்ளுவரானே யெடுத்துக்காட்டற்குங் கூடுமாயினு மவ்வழக்கறுத்தற்பொருட் டிங்ஙன மியாங் துணிந்திலே மென மறுக்க.

(10) இற்புகுந் தெழுமதி யிலங்கு மாமணி
விற்புரு வக்கடை மின்க ணுயகம்
பொற்பெலாம் பொதிந்தபொற் கொடிநற் பூவையர்
கற்பெலாந் திரண்டுருக் கொண்ட கன்னியே.

(ப - ரை.) நல்-(அவ்வாமினுவெனுமங்கை) நலமே பயின்று விளங்காநிற்கும், பூவையர் - அரம்பைகளினது, கற்பெலாம் - பத்தினித்துவமெலாம், திரண்டு - ஒன்று சேர்ந்து, உருகொண்ட - தோற்றம் படைத்த, கன்னி - கன்னியானவர், இல் - மனை யின்கண், எழும் - உதயமாகி, புகுந்து - அம் மனையின்கண்ணே யடைந்து, இலங்கும் - பிர காசியாநிற்கும், மதி - சந்திரனுனவர், மாமணி- மாணிக்கமானவர், வில் - வில்லினை, கடை - கடைசெய்யும், புருவம் - நுதலையுடைய, மின் கள் - பெண்களுக்கு, நாயகம் - தலைவியானவர், பொற்பு எலாம் - அழகெல்லாம், பொதிந்த - பொதிந்திராநின்ற, பொன்கொடி - பொன்னு னியன்ற கொடியானவர், எ-று.

(போ-ரை.) அவ்வாமினுவெனும் மங்கையானவர் நலமேபயி ன்று விளங்காநிற்கும் அரம்பைகளினது பத்தி னித்துவமெல்லா மொன்று சேர்ந்து தோற்றம் படைத்த கன்னியானவர், மனையின்க ணுதய மாகி அம் மனையின்கண்ணே யடைந்து பிரகா

சியாநிற்குஞ் சந்திரனுனவர், மாணிக்கமானவர், வில்லினைக் கடைசெய்யும் நுதலினை யுடைய பெண்களுக்குத் தலைவியானவர், அழகெல்லாம் பொதிந்திராநின்ற பொன்னுனியன்ற கொடி யானவர் என்பதாம்.

இல் ஏழாவது தொக்கது. கீழ்த்திசைக்கட லுதயங்கொண்டு ஆகாயத்தே விளங்கி மேற்றிசைக்கட லஸ்தம்படைக்கும் வான்மதி யோடு ஆமினுவுக்கு வேறுபாடில்லென்பான் அவரை "மதி" யென்றும் இல்லிடத்தே யெழுந்து நகரத்தே விளங்கி அவ்வில்லினிடத்தே மறையு மியற்கை யொன்றே வேறுபாடென்பான் "இற்புகுந்தெழு" மென்றுங் கூறினுர்.

இனி மேகத்தின்கண் புகுந்தெழுஞ் சந்திரனைப்போல மனை யின்கண் புகுந்தெழுஞ் சந்திரனென்ன வதனேடு ஒற்று மைதோன்றக் கூறினு ரென்பர் முதலுரையார். அக்கூற்றில் ஒற்றுமை தெற்றெனப்படாமையாற் பொருந்தாதென்க.

வில், புருவம் இரண்டாம் வேற்றுமைத்தொகை. புருவக்கடை என்புழிச் செய்யும் எனுமொருசொல் வருவித்துக் கடைசெயும் புருவ மென மாற்றிக்கொள்க.

இனி விற்புருவம் என்புழி உவமத்தொகையாய்க்கொண்டு வில் போலும் புருவக்கடை யென்பாருமவர்; கடையென்பது பொருளின்றிக் கடைப்படுவதான் அதூஉம் பொருள்வியப் பன்றென மறுக்க.

நன்னீரால் விளங்கு அரத்ந வர்க்கங்களில் மாணிக்கஞ் சிறப்பு டைய தென்பதுபோலக் கற்பால் விளங்கும் பெண்களில் ஆமினு வா கிய பெண் சிறப்புடைய ரென்பான் "மாமணி" என்ருர். மதி, மா மணி யென்பன வாகுபெயர்கள். பொற்கொடியென்பதூஉ மது.

ஆமினு, என்றுங் கன்னித்துவ முடையா ரென்பான் கருதி "கன்னி" என்ருர். இதூஉமது. என்றுங் கற்புடைய மகத்துவம் அரம்பையர்க்கே யுடையவாகலின் அவரது கற்பினு மிக்குள்ள கற் புடையார் ஆமினுவென்பதே தமக் குடன்பாடென்பது தோன்றப் பூவையர்க்கு "நல்" என்ற வடைகொடுத்தார். ஆகலின் பெண்பாலுக்

குரிய பூவையென்னும் பெயர் அரம்பையைக் குறித்துநின்றது. நற் பூவையர் என்புழி "கற்புடையமகளிர்" என்பர் மூதலுரையார்.

அது அத்தனைச் சிறப்பன்றாகலின் உய்த்துணர்க:

நாயகம் உபசாரவழக்கு. ஏகாரம் ஈற்றசை.

(11) அறத்தினுக் கில்லிட மருட்கோர் தாயகம்
பொறுத்திடும் பொறுமையிற் பூமிக் கெண்மடங்
குறைப்பெருங் குலத்தினுக் கொப்பி லாமணி
சிறப்பினுக் குவமையில் லாத செல்வியே.

(ப - ரை.) அறத்தினுக்கு - தருமத்துக்கு, இல்லிடம்-இருப் பிடமானவர், அருட்கு - கிருபைகளுக்கு, ஓர் - தனித்த, தாய் அகம் - தாய்வீடானவர், பொறு மையில் - சகிக்குந் தகைமையில், பூமிக்கு - பூமண்டலத்திற்கு, எண்மடங்கு - எட்டுப்பங் கதிகமாக, பொறுத்திடும் - சகிக்கும், உறை - இடமானவர், ஒப்பில்லா - உவமை யில்லாத, பெரும் - பெருமைதங்கிய, குலத்தினுக்கு-அது னனென்னுங் குடும்பத்திற்கு, மணி - கண்மணி யானவர், உவமையில்லாத - நிகர்சொலற்கரிய, சிறப்பினுக்கு - தகுதிக்கு, செல்வி - இலட்சுமி யானவர், எ-று.

(பொ-ரை.) தருமத்துக் கிருப்பிடமானவர், கிருபைகளுக் குத் தனித்த தாய்வீடானவர், சகிக்குந் தகை மையிற் பூமண்டலத்திற் கெட்டுப்பங் கதிகமா கச் சகிக்கு மிடமானவர், உவமையில்லாத பெருமைதங்கிய அதுனனென்னுங் குடும் பத்திற்குக் கண்மணியானவர், நிகர்சொலற் கரிய தகுதிக் கிலட்சுமியானவர் என்பதாம்.

தூபியென்னுந் தீய வறுமையால் வருந்து மனுடாதிக ளுய்யுமாறு தீன் பயிரோ விளைத்தருத்துந் தகுதியும் எவராலு மாதரிக்கப்படா

தமைந்த பெரும்பாவிகளை யாதரிக்குங் கருணையுங் குடிகொண் டெ ழுந்த பெருமானு ரவர்களுக்குத் தாயாதலின் ஆமினுவை முறையே "அறத்தினுக் கில்லிடம், அருட்கோர் தாயகம்" என்றுங் கூறினர்.

அசுத்த பகரவீகாரம் போல்வனவற்றின் பாசங்களைத் தன் னுடம்பாலறப் போர்த்துப் பிறர்மாட்டுப் பழிப்படாது காக்கும் பொ றுமை யொன்றிற்கே பூமியுடையது, ஆகலின் தனு கரண புவன போகங்களா லமைந்த வெவ்வித பாவங்களையுந் தந் நன்மையாற் றம் மினத்திற் பிறராகிய தேவர்மாட்டுப் பழிப்படாது காக்குஞ் சிறப் புள்ள பொறுமையங்கடவு ளமர்ந்து இருத்தலின் ஆமினுவை "பொ றுமையிற் பூமிக் கெண்மடங்கு பொறுத்திடு முறை" என்ருர். ஆகலி னச்சிறப்பைப் பெருமானுரோடு படுத்தி அவ ருறையுமிடம் ஆமினு வெனக் கொள்க. எண்மடங் கென்பது ஈண்டு மிகுதிகுறித்து நின்றது.

இனி பொறுத்திடும் பொறுமையில் பூமிக் கெண்மடங்கு எனச் செய்யுள் கிடந்தவாறே கூட்டி "பொறுக்கத்தக்கப் பொ றுமையிற் பூமிக் கெட்டுப்பங் கதிகமானவர்" எனப் பொ ருண்முடித்து, அங்ஙனங் கூறில் பிறர்செய்யுங் குற்றத் தைப் பூமி எங்ஙனம் பொறுத் தியாது செய்யுமோ ? எனத் தமக் கியைந்தவாறு கடாகிகழ்த்தி "யகழ்ந்து சேருக்கி யும் வருத்து வார்க்கும் நல்வினை வளித்தலே சான்று" என விடைகொடுத்தும் அதற் குதாரணமாய்,

"அகழ்வாரைத்தாங்குநிலன்"

எனுங்குறளை வரைந்துந் தம தறியாமையை விளக்குவர் முதலுரையார் ; அவையெல்லா மாசிரியர்க்குடன்பா டாகா வென்க. என்னை ?

பொறுக்கத்தக்க பொறுமையில் என்புழிப் பொறுக்கத்தகாத பொ றுமையும் உள என்பது அருத்தாபத்தியாற் பெறுதலின் அத்துணை யாம் பொறுமையினரல்லர் என்பது தோற்று மாகலானும் பூமி அகழ்ந்து சேருக்கி வருத்தாதார்க்குப் பிரதிவறிதே யளித்தலின் அகழ்தலே யதற்கு இனிதென்பார் அக்குறட்பா விங்ஙனம் பொருந் தாதென்ப ராகலானும் அவர் கூற்று பயனில்கூற்ரும் என்க. விரித் துக் கூறிற் பல்குமாகலி னிறுத்தினும்; ஆய்ந்தறிக.

இல்லிடம், தாயகம், மணி, உறை, செல்வி என்பன வாகுபெயர்கள். ஆண்டுப்பூமிக் கெண்மடங் கென்பதில் அதிகம் என்ற ஒரு சொல் வருவிக்கப்பட்டது அவாய் நிலையா லென்க. உறைபெறும் என்பது எதுகை யின்பம்பற்றிப் பகரமெய் யிரட்டித்து வந்தது. அறத்தினுக்கு, குலத்தினுக்கு, சிறப்பினுக்கு என்புழிநின்ற உகரங்கள் சாரியை. பெறும், என்ப தீறுகெட்டு நின்றது. பிற வருவன வெல்லா முய்த்துணர்க.

(12) குணிப்பறுங் குறைசியங் குலமென் றோங்கிய
மணிப்பெருங் கடலிடை வளருஞ் செல்வமே
தணிப்பிலா தெடுத்தெறி தரங்க மேனடுப்
பணிப்படா தெழுந்தசெம் பவளக் கொம்பனார்.

(ப - ரை.) நடு - பூமியின்கண், பணிப்பு - படிதலை, அடாது - உண்டுபண்ணாது, எடுத்து - தாங்கி, எறி - வீசுகின்ற, தரங்கமேல் - அலைகளையுடைய கடலின்மீது, தணிப்பு இலாது - எவ்விதத்தாலுங் குறைவின்றி, எழுந்த - ஓங்கிநிற்கும், செழும் - செழிய, பவளக்கொம்பு அனார் - பவளக்கோட்டினைப்போன்ற ஆமினா வானவர், குணிப்ப - மதிப்பிடற்கு, அரும் - அருமையாகிய, மணி - நன்மையையுடைய, குறைசிகுலமென்று - குறைசிகுடும்பமென்று, ஓங்கிய - பிரபலங்கொண்ட, பெரும் - பெருமைதங்கிய, கடலிடை - சமுத்திரத்தின்கண்ணே, வளரும் - தேரும்படியான, செல்வம் - பாக்கியப் பொருளானவர், எ-று.

(போ-ரை.) பூமியின்கண் படிதலை யுண்டுபண்ணாது தாங்கி வீசுகின்ற அலைகளையுடைய கடலின்மீ தெவ்விதத்தாலுங் குறைவின்றி யோங்கிநிற்குஞ் செழிய பவளக்கோட்டினைப்போன்ற ஆமினா வானவர் மதிப்பிடற் கருமையாகிய நன்மை

யையுடைய தறைசிக் குடும்பமென்று பிரப லங்கொண்ட பெருமைதங்கிய சமுத்திரத்தின் கண்ணே தேரும்படியான பாக்கியப் பொரு ளானவர் என்பதாம்.

குணிப்ப அரும் என்பது ஈறுதொக்கு குணிப்பரும் என நின் றது. அரும், செம், பெரும் என்பன வீறுகெட்டு நின்றன. தறைசி யங்குலம் என்புழி அம் சாரியை.

நபிபெருமானர் தறைசிக்குலத்தி லுதயஞ்செய்த காரணத்தா னே மணியைக் குறைசி என்பதனேடு படுத்தி, நன்மையாகிய தறைசி யெனக் கொள்க.

மறுவொன்றுமில்லா தெழுந்து தன்னிற்ருனைப் பெருமையி லளத்த லடங்காக் கிடக்குங் குறைசிக் குலநடுமுளைத் தெழும்புகழ் ஆமினு வுக்கே யுரித்தாதல்போலத் தன்னே டேன்படாதனவற் றைத் தன்னிற் பொருந்தாதெறிந்து தடத்தி லளத்த லடங்காக் கிடக் குங் கடனடு முளைத்தோங்குந் தகுதி பவளக்கொம்பிற்கே யாதலி னுனே யப் பவளக்கோட்டை யொரோவழி, ஆமினுவுக் குவமித்தல் பொருத்த மென்பான்கருதி "பவளக்கொம்பனர்" என்ருர். நபிபெரு மானு ரமைவுற் றிருந்த காரணம்பற்றி ஆமினுவைச் "செல்வம்" என்ருர். ஈண்டு அது ஆகுபெயரென்க.

இனி இச்செய்யுளை "அகன்று பொருட்கிடப்பினும்" என்ற விலக்கணவிதியாற் பொருள்கொள்ளாது யாற்றுநீரொழுக் குப் பொருட்கோளதாய்க் கொண்டு "மதிக்கரிய குறைசிக் குலமென் றுயர்ந்த முத்துக்களையுடைய பெரிய கடலின்கண் வளர்கின்ற செல்வத்தைத் தணிவின்றி யெடுத்து வீசும் அலைகணடுவே தாழ்வடையாது முளைத் தெழுந்த செம்பவ ளக் கொம்புபோன்றவர்" என வாளாக்கூறுவர் முதலுரை யார். என்னை? குறைசிக்குலத்தைக் கடலென்புழி அக் கடலின்கண் வளர்கின்ற செல்வம், மணி, அலை யிவ்வையெ னப் படாமையாற் பொருட்சிறப் பிழவுபடு மாகலி னென்க. பிற வருவனவு முளவாயினும் விரிக்கிற் பல்குமென நிறுத்தி னும். ஆருய்ந்தடங்குக.

நடு ஏழாவது தொக்கது. எறி என்பது வினைத்தொகை. அன்னு ரொன்பது அனுரொனக் குறைந்து நின்றது. செல்வமே என்புழி ஏகாரம் இசைநிறை. அது ஆமினுவைச் சிறப்பித்தற்பொருட்டு வந்ததெனினும் அமையும்.

(13) இத்தகைக் குலமயி லாமி னுவெனு
முத்தவெண் ணகைக்கனி மொழியு மோகனச்
சித்திர அப்துல்லா வென்னுஞ் செம்மலு
மொத்தினி தமுதமுண் டுறையு நாளினில்.

(ப - ரை.) இதகை - (பன்னிரு செய்யுட்களானுங் கூறப்பட்டுள்ள) இவ்வித பெருமையையும், மோகனம் - மயக்கத்தைத்தரும், சித்திரம் - பேரழகையுமுடைய, அப்துல்லா எனும் - அப்துல்லாவென்று சொல்லும், செம்மலும் - பெருமையிற் சிறந்தவரும், முத்தம் - முத்தைப் போலும், வெள் - வெள்ளிய, நகை - பற்களையும், கனி - கனிபோலும், மொழியும் - இனியசொற்களையுமுடைய, ஆமினுஎனும்-ஆமினு வென்று சொல்லும், குலம் மயில் - ரூபத்தில் சாதிமயில்போன்றவரும், ஒத்து - ஓரேமனத்தினராய்க் கலந்து, இனிது - இனிமையான, அமுது - காமாநுகூலத்தை, உண்டு - அநுபவித்து, உறையும் - பேறுபெற்றிருக்கும், நாளினில் - காலத்தில், எ-று.

(போ-ரை.) பன்னிரு செய்யுளானுங் கூறப்பட்டுள்ள இவ்வித பெருமையையும் மயக்கத்தைத்தரும் பேரழகையு முடைய அப்துல்லாவென்று சொல்லும் பெருமையிற் சிறந்தவரும் முத்தைப்போலும் வெள்ளிய பற்களையும் கனிபோலு மினிய சொற்களையு முடைய ஆமினுவென்று சொல்

லும் ரூபத்திற் சாதிமயில்போன்றவரும் ஒரே மனத்தினராய்க் கலந்து இனிமையான காமாநு கூலத்தை யநுபவித்துப் பேறுபெற்றிருக்குங் காலத்தில், என்பதாம்.

இன்னிசை பயிற்றுவான் "இத்தகைக் குலமயில் ஆமினு" வென்றதல்லது அவளை அப்துல்லாவினு முன்வைத்தல் பொருத்த முடைத்தென்பதன்று. அது அருத்தாபத்தியானும் முன்பின் னிகழுஞ் செய்யுளானு மறிக. இத்தகை என்புழி இ எனுஞ் சுட்டுப் பொதுவாய்ப் பன்னிரு செய்யுளேயுங் குறித்து அப்துல்லா ஆமினு விருபாலருக்கும் பொதுவாய் நின்றது.

இக்கருத்தறியா முதலுளையார் இத்தகை என்பதை ஆமினுவுக்கே யுரித்தாக்குவர். அதிற் பொருள் வியப்பின் ருதலின் ஆசிரியர்க் குடன்பா டாகாவென மறுக்க.

தகை, சித்திரம், நகை என்புழி உருபும் உம்மையு மொருங்கே தொக்கன. மோகனம் இரண்டாம் வேற்றுமைத்தொகை. ஆண்டுத் தரும் என்ற ஒருசொல் அவாய்நிலையான் வருவிக்கப்பட்டது. குலமயில் என்புழி ஈண்டு மயில்குலத்தி லொப்பற்ற மயிலென்பது கருத்து. செம்மலும் என்ற உம்மையான் குலமயில் என்புழியூஉமும்மை பெறப்பட்டது. முத்தம், கனி என்பன வுவமத்தொகை. வெண்மை ஈறுகெட்டு வெள் என நின்றது. மொழியும் என்ப திரண்டாம் வேற்றுமைத் தொகை. அமுதமென்ப தாகுபெயராய்க் காமாநுகூலத்தை யுணர்த்தி நின்றது. அது ஆடூஉ மகடூஉவினு னிகழும் மனனறிவன்றி அறியப்படா வோர்வகை யின்பத்தைக் குறிக்குமென் றறிக. அது பற்றியே "இனிதமு" தென்ருர்.

"எல்லா வுயிர்க்கு மின்ப மென்பது
தானமர்ந் துவரு மேவற் ருகும்"

என்ற விதியானுங் காமம் இனி தென்பதறிக. அப்துல்லா ஆமினு விவ் விருபாலரும் பிரிவின்றிக் கலந்த மனத்தாரெனவும் கற்பின்வரை கண்டாரெனவுங் கூறுவான் "ஒத்து" என்ருர். அது ஈண்டு அவ ரிவ ரெனும் பிரிவிலாதிருத்தலே யுணர்த்திநின்றது. ஆகலின் காந்தர்வ மணமினைத் தென்றவாறென்றறிக. அதன் விதி முன்னர்க் கூறினும்.

காமம் மனனறிவானன்றி அறியப்படா வரிய வஸ்துவாதலின் அதைக் குடித்து எனற் பொருந்தாதெனின்,

"உண்டற் குரிய வல்லாப் பொருளை
யுண்டெனப் போலக் கூறலு மரபே"

என்ற விதியாற் பொருந்துமென்க. நாளினில் என்புழி இன் சாரியை.

இனி இச்செய்யுளூ உம் ஆற்றுநீர்ப் பொருட்கோளென மயங்கிப் பொருட்கொண் டிடர்ப்படுவர் முதலுரையார். அன்றியும் குலமயில்போலும் ஆமினுவென்று சொல்லும் முத்தைப் போலும் வெள்ளிய பற்களையும் கனியைப்போலு மின் சொல்லை யுடையவரும் என வாளாப் பொருள்கூறுவர். அவரது அறியாமையை யாண்டாண்டு விரித்துக் காட்டு மேல் மிகப் பல்குமாகலின் சிற்சில விடங்களி லிவ்வாறு தொகைபடக் காட்டுவாம்; உய்த்துணர்க.

வேறு.

(14) வீசு தெண்டிரைக் கடன்மலை யடங்கவெண் குடைக்
மூாசி லாதசிங் காசனத் திருந்தசிக் கந்தர் [கீ
காசி னிக்கர சியற்றுதுல் கறுனையின் கால [ம்.
மாசி லாக்கணக் கெட்டுநூற் றெண்பத்தோர் வருட

இச்செய்புண்முதல் இரண்டாவதாகிய "கனைத்தமின்றெளித்து" என்ற செய்யுளிறுவாய் நபிபெருமானுரது பேரொளி ஆமினுவினது கர்ப்பத்தி லமைந்தகால மிவையென நுதலுவான் றொடங்கினுர்.

(ப - ரை.) சிக்கந்தர் துல்கறுனையின் - சிக்கந்தர் என்கிற வியற்பெயரையும் துல்கறுனையி னென்கிற காரணப்பெயரையு முடைய சக்கரவர்த்தியானவர், வெண்குடைக்கீழ் - தமது வெள்ளிய குடையி னீழலின்கண், தெண் - தெள்ளிய, திரை - அலைகளை, வீசும் - எறியாநிற்கும், கடல் - சமுத்திரங்களும், மலை - மலைகளும், அடங்க - உட்படிய, காசினிக்கு - பூமியின்கண், ஆசு இலாத - குற்றமென்பதே யணுகாத, அரசியற்று - இரா

சாங்கம் நடத்த, சிங்கம் - மடங்கல்போலும், ஆசனம் - பீடத்தின்கண், இருந்த - உட்கார்ந்த, காலம் - தினந்தொடங்கி, கணக்கு - எண்ணிக் கையிலே, மாசு இலா - சந்தேகமறக் கண்ட, வருடம் - வருஷங்கள், எட்டு நூற்று எண்பத்து ஓர் - எண்ணூற்றெண்பத்தொன்று, எ-று.

(போ-ரை.) சிக்கந்தரென்கிற வியற்பெயரையும் **துல்கறு னையி**னென்கிற காரணப்பெயரையு முடைய சக்கரவர்த்தியானவர் தமது வெள்ளிய குடையி னீழலின்கண் தெள்ளிய வலைகளை யெறியாநிற் குஞ் சமுத்திரங்களு மலைகளு முட்படிய பூமி யின்கண் குற்றமென்பதே யணுகாத விரா ஜாங்க நடாத்த மடங்கல்போலும் பீடத்தின் கண் உட்கார்ந்ததினந் தொடங்கி எண்ணிக் கையிலே சந்தேகமறக் கண்ட வருஷங்க ளெண்ணூற் றெண்பத் தொன் றென்பதாம்.

வீசும் என்ப தீறுகெட்டு வீசு என நின்றது. தெண்மை யீறுகெட் டது. திரைகடல் என்புழி உருபும் பயனும் உடன் றொக்கத்தொகை. கடன்மலை உம்மைத்தொகை. கடன்மலை, காசினி என்பன வாகுபெய ராய் அவற்றின் வாழ்பலவகை யுயிர்கண்மே னின்றது. இனி காசினி என்புழிப் பலவகை யுயிர்களு மடங்கு மாதலின் கடன்மலை யெனல் வேண்டாவெனின் அற்றன்று. அரசு என்றவதனுன் உலகுவழக்குப் பற்றி மக்களையே யுணர்த்துமாதலின் உயிரெனப் படுமனைத்து மடங் கக் கூறுதல் கடன்மலையெனவிரித்துக் கூறுதல் வேண்டுமென்க. வெண்குடையென்ப திராஜசின்னத்தினென்று. **சிக்கந்த**ரெனுஞ் சக் கரவர்த்திக்கு உயிருள்ளனவேயுமன்றி உயிரில்லனவு மடங்கிற்றென் பது வேதாகமம்.

**சிக்கந்த**ரென்ற சக்கரவர்த்தியின் நுதலிடத் தமர்ந்த விரு கோட்டானே **துல்கறுனையி**னென்றது காரணப்பெயரென்க. அல்ல தூஉம் **கறன்** என்பது இருபதாண்டிற்கும் நூறாண்டிற்கும் பொது வாதலானும் **ஐயின்** என்பது இரு என்பதொன்றே குறிக்குமாதலா

னும் நாற்பதுவருட மரசியற்றியவனென்பார்; **துல்கறுனையின்** என்றது காரணப் பெயரென்றும், இருநூறுண் டரசாண்டா ரென்பார் அப்பெயர் காரணப் பெயரென்றும் இன்னும் பலவாற்று லது காரணப்பெயரென்றுங் கூறும் வேதநூ லாகமங்கள். இப்பொருள் வேறுபாடுகள் வேதபாடைப் பொருண் மாறுபாட்டா னென்க. **சிக்கந்தர் துல்கறுனையி**னென்பது எழுவாய்வேற்றுமை. "மடங்க லாசனத் தமர்ந்த கணக்" கென்றமையான் அக்காலத்து நிகழ்ந்தவவ் வாண்டு **சிக்கந்தர்** முடிபுனைந்தநாள் தொடங்கி எண்ணப்பட் டுள்ளனவென்க. இக்கருத்தறியாது,

"தமது வெள்ளிய குடையின்கீழ் எறிகின்ற தெள்ளிய திரைகளையுடைய கடலு மலையு மடங்கும்படி குற்றமில்லாத சிங்காசனத்தின்கண் வீற்றிருந்த சிக்கந்தரெனுஞ் சக்கரவர்த்தியானவர் பூமிக்கு அரசுசெய்யும் காலத்தின் குற்றமில்லாத கணக்கிலே எண்ணூற் றெண்பத் தொருவருடம்" என்றுவாளாக் கூறுமுதலுரை. என்னை? கடன்மலையடங்க வாசன மிருந்த சிக்கந்தரென்றோதி, யாங்கேமறந்து "பூமிக் கரசியற்றுங் காலத்தின் கணக்கு" என்றமையா லாசனம் வீற்றிருந்தகாலத்தி லரசியற்றல் ஒழிவுற் றிருந்தாற்போலே கிடந்து தெற்றெனப் பொருட்படாமையானும் அரசு செய்யுங்காலத்தின் கணக்கு என முக்காலத்திற்கும் பொதுவாய்ப்பாட்டாற் கிளத்தலின் வருடமெண்ணற்கு முதற்கால மிஃதெனத் தோற்றாமையானும் அக்கூற்றுப் பாலர் கூற்று மாகலி னிடர்ப்படு மென்க.

காசினிக்கு என்னும் நான்கனுருபு ஏழாவதன் பொருண்மைக்கணின்றது. சிங்காசனம் வடசொன்முடிபு. ஆண்டு உவமவுருபு தொக்கது. ஆசனம் ஏழாம் வேற்றுமைத்தொகை. இய்ற்ற வென்னும் வினையெச்சத்தி னீற்று அகரவுயிர் உகரமாய்த் திரிந்துநின்றது. பிறவருவனவெல்லா முய்த்துணர்க.

(15) கனைத்த மின்றெளித் தெழுத்தெனச்
சிறக்குமக் காவி
னினைத்த கார்க்குலந் திரண்டெனக்
களிறுக ணெருங்கி

யிரைத்த டர்ந்துமும் மதங்களை
வாரிநின் றிறைத்து
வரைக்கு லங்கள்போல் வந்ததற்
கொருமுதல் வருடம்.

(ப - ரை.) கரைத்த - (கட்புலன தாற்றற்கு இயைந்தவாறு தம துருத்தோற்றத்தைத்) தேய்த்துக் காட்டா நிற்கு மியற்கையையுடைய, மின்-பிரகாசத்தை, தெளித்து - தெளியச்செய்து, எழுத்தென - எழுதியசித்திரம்போல, சிறக்கும் - அரியகாட்சி படைக்கும், மக்காவில் - மக்காவென்ற நகரத் தின்கண், கார்க்குலம் - இருள்கூட்டங்களான வை, திரண்டு என - ஒன்றுகூடினாற்போல, வரை போல் - மலையைநிகர்த்த, களிறுகள் - யானை களினது, குலம் - கூட்டமானது, நிரை - ஒழுங் காய், நெருங்கி - ஒன்றோடொன்று மிடைந்து, இரைத்து - ஆரவாரித்து, மும்மதங்களை - கன் னம் கபோலம் கோசமென்ற மூன்றுமதங்களை யும், வாரியிறைத்து - அள்ளிப்பொழிந்து, அட ர்ந்து - பின்னுறாது முன்னேயேறி, வந்ததற்கு - வந்துசெய்த கலகத்திற்கு, ஒருமுதல்வருடம் - முதலாகிய வவ்வருடத்தில், எ-று.

(பொ-ரை.) கட்புலன தாற்றற் கியைந்தவாறு தமதுருத் தோற்றத்தைத் தேய்த்துக் காட்டாநிற்கு மியற்கையையுடைய பிரகாசத்தைத் தெளியச் செய்து எழுதிய சித்திரம்போல வரிய காட்சி படைக்கும் மக்காவென்ற நகரத்தின்கண் ணிருட் கூட்டங்களானவை யொன்றுகூடினாற் போல மலையைநிகர்த்த யானைகளினது கூட்ட மானது ஒழுங்காய் ஒன்றோடொன்று மிடைந்

து ஆரவாரித்துக் கன்னங் கபோலம் கோச மென்ற மூன்றுமதங்களையு மள்ளிப் பொழிந்து பின்னுருது முன்னே ஏறிவந்து செய்த கலகத் திற்கு முதலாகிய அவ்வருடத்தி லென்பதாம்.

கட்புல னுணர்த்துமகிமை யொளிவிற்கே யாகலின் அவ்வொளி யுரு இனைத்தென வுணர்தற்கு அரிதென்பான் "கனைத்த மின்" என்றார். பார்வையினது வலியீனத்தானே கனைத்த மின் என்றாரல்லது மின் னினதியற்கை அன்றென்க. கட்புல னுணர்த்தற்கு ஒளியே காரண மாதலின் அவ்வொளியை யினைத்தெனக் கண்ணறியாதென்பது வெ ளியாயினும் அப்புலத்தா னறிந்தவழிச்சென்று வஸ்துவின் முடிபு இனைத்தென மதிக்குந் தகுதி மனத்திற்கே யுரித்து. அவ்வாறு மன னறிவினு மது இனைத்தென மனுபாஷையின் குறியிட் டுரைத்தற் கியலாவாய்விடும். இங்ஙனமாக, மின்னின துருத்தோற்றத்தை இத் தன்மைத்தென மனக்கண்ணு னறிந்து அதினுந் தெளிக்கப்பட் டுள்ள தெனின், அம்மின் எனைத்துணையதா மென்பது கருத்தான் விளங் குக: கனைத்தமின் என்புழி,

"பொருளதிகார முன்னமுத்தி"

என்ற விதியான் பொருள் காரணமாக சொற்பொருளுரைத்தாமென் றுணர்க.

இனி கனைத்தமின் என்புழிக் கனைக்கப்பட்ட மின் எனப் பொ ருட்கூறி மயங்குவர் முதலுரையார். இங்ஙனமா மயக்க மென்னையோ? வெனின், வனைந்த குடம் என்புழி வனை தற் றொழிலாலாய பயன் குடமாதல்போல மின் கனைத் தற் றொழிலாலாய பயனன்று; ஆகவே யஃதோர் முதற் காரணப் பொருளாதலி னவருரை மயக்கமென்க. இதூஉம் பிரகாசத்தை எழுத்தென்னுங் காரியத்திற்குக் கனைத்தற்றொழிலாலாஞ் சாயமென்னும் காரணம்போற் கொண்டு அஃதா னெழுதிய சித்திரமென்னும் பொருட்படக் கூறுதல் வேண்டுமாயின் "கனைத்தமின் றெளித்தெழுத் தெனச் சிறக்கும்" என் றிருத்தற் பொருந்தாது. என்னை? கனைத்தமின் என்புழி மின்னின தியற்கைக் கனைக்கப்பட்

டதா யிருத்தல் வேண்டும்; அப்படி யஃதோர் கரைக்கப் பட்ட வஸ்துவன்று. கரைக்கப்பட்டதென்றால் அதற்கோர் முதற்காரணமாய வஸ்து அவசியமாம். ஆகலின் அங்ஙன முதற்காரண மிஃதெனப் படாமையா னவருரை போலியா மென்க. இதுவேயுமன்றித் தெளித்து என்பது தெளித்த என்னு மிறந்தகாலப் பெயரொச்சத் தகரவொற் றின்மே னின்ற அகரவுயிர் உகரமாய்த் திரிந்து,

"புகழ்புரிந் தில்லிலோர்க்கில்லை"

என்றாற்போ னின்றதென்றுங் கூறி வாளாப்போவர். இவ்வாறு கூறலினு மவர்க்கு இவ் விலக்கண மியாமறிந் தவற்றுளில்லை எங்குள்ளதோவென் றையுற் றடங்குதல் எளிதாமெனக்கூறி யவ் விலக்கணமுந் தவறெனமறுக்க.

எழுத்து என்ப தாகுபெயராய்ச் சித்திரத்தை யுணர்த்தி நின் றது. தெளித்து என்புழி அத் தெளிவாலென்பது சொல்லெச்சமாய் நின்றது. எழுத்து என்புழி எழுதிய என்பது,

"பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை"

என்ற வள்ளுவர்க்குமொழி வருவித்தாற்போல வருவித் துரைக்கப் பட்டது. திரண்டால் என்பது திரண்டென நின்றது. எனவென்பன வுவமையுருபுகள். மதங்கள் என்புழி ஆண்டு வேண்டிய முற்றும்மை விகாரவகையாற் றொக்கது.

இச்செய்யுள் சிக்கந்தராண்டின்வரை, யானைக் கலகத்தின்பிற்றை நிகழ்ந்தில வென்பதூஉம் அவ்வாண்டு நிகழ்ந்தகாலம் இம்மட்டென் பதூஉம் புதியவோராண்டு நிகழ்வதற்கு இவ்வானைக் கலகமே ஆதி யென்பதூஉம் நுதலிற்று. "வந்ததற்கொருமுதல்வருடம்" என்புழி ஈண்டு பிரானவர்க ளவதரித்த அவ் வருடமுடியுமுன் யானைக்கலகம் வந்ததென்பது கருத்து.

இனி "யானைக்கலகநிகழ்ந்த வைம்பத்தோராந்தினம் நபிநாயக மவர்கள் பிறந்ததனால் அவர்கள் கருவாய்த் தரித்தது அக் கலகத்துக்கு முந்தியாதலின் ஒரு முதல்வருடம் என்ப தற்கு ஒருவருடத்துக்கு முந்தி என்பதே கருத்து" என்று கூறி,

"மறப்பெனும் பகைவன் வாரிக் கொண்டனன்"

என்றற் கிலக்கா யாங்கே மறந்து "முதல் என்பது ஆதியாக லானும் முதலுதல் ஆதியாகலானும் அவ்வருடத்தையே யானைக் கலகத்துக்கு முதலாம் வருடமெனக் கொண்டு இங்ஙனம் உரைகூறினும்" என்றுங் கூறுவர் முதலுரை யாசிரியர். ஆகவே அவர்கூறியனவெல்லா முடன்பாடென் பது தமக்குங் கருத்தன்றென வெள்ளிடைமலைபோல் விளங்குமாகலி னவர்கூற்றெல்லாம் போலியாமென்க.

வந்த என்பது காலமயக்கம். ஒரு என்பதும் முதல் என்பதும் ஒரேபொருளிடத்து வந்தமையான் இரட்டுற மொழிதலெனுங் குற்ற மாகா. அவ்வாண்டி னுறுதியை யித்தன்மைத்தெனச் சிறப்பித்து நின்றதென்க. அது,

"ஒருபொருட்பன்மொழி"

யென்றவிதியானறிக:

(16) திங்க ளாமிற ஜபுமுதற் றேதிவெள் ளியிராத்
துங்க வார்கழன் முகம்மது பேரொளி துலங்கி
யெங்க ணுயக ரப்துல்லா நுதலிடத் திருந்து
மங்கை யாமினு வயிற்றினிற் றரித்தன வன்றே.

(ப - ரை.) றஜபு-மேலேகூறிய அவ்வாண்டிலே றஜபென்று வழங்கவந்த, அம் - அழகிய, திங்கள் - மாதத் தின், முதல்தேதி - முதல்நாளான, வெள்ளி - வெள்ளிக்கிழமையினது, இரா - இரவிலே, எங் கள்நாயகர்-எங்கட்குத்தலைவராகிய, அப்துல்லா- அப்துல்லாவினது, நுதல் இடத்து இருந்து - நெற்றியின்கண்வீற்றிருந்த, துங்கம் - பரிசுத்த மும், வார் - நேர்மையுமான, கழல் - பாதத்தினை யுடைய, முகம்மது - முகம்மதவர்களின், பே ரொளி - பெரிய ஒளியானது, துலங்கி - தமது மாட்சிமையோடு பிரகாசித்து, மங்கை - மூன் றும் பருவப்பெண்ணாகிய, ஆமினு - ஆமினு அவர்களினது, வயிற்றினில் - கர்ப்பமாகிய

உயர்ந்த சுவர்க்கத்தின்கண், தரித்தன - தரிக்கப்பட்டன, எ-று.

(போ-ரை.) மேலேகூறிய அவ்வாண்டிலே றஜபென்று வழங்கவந்த வழகிய மாதத்தின் முதனுளான வெள்ளிக்கிழமையினது இரவிலே எங்கட்குத் தலைவராகிய அப்துல்லாவினது நெற்றியின் கண் வீற்றிருந்த பரிசுத்தமும் நேர்மையுமான பாதத்தினையுடைய முகம்மதவர்களின் பெரிய ஒளியானது தமது மாட்சிமையோடு பிரகாசித்து மூன்ரும் பருவப்பெண்ணுகிய ஆமினு அவர்களினது கர்ப்பமாகிய வுயர்ந்த சுவர்க்கத்தின்கண் தரிக்கப்பட்டன வென்பதாம்.

பிறவாகி வழங்கவரும் திங்களுமுளவாதலின் இறஜபென வழங்கவருந் திங்களென்ருர். ஈண்டுத் திங்களென்ப தொன்றேயாயினும் நிலைமாறுகையானும் உலகுவழக்கு நடத்தற்பொருட்டானுந் திங்களின் பெயர் பலவாறென்க. வெள்ளி என்பதினு மிவ்வாறே கூட்டுக. அம் என்பது செய்யுணேக்கி ஆம் என முதனீண்டது. கருணையங்கடவுள் மனோதாரத்தமைதற்கும் படைப்பாதிகளால் ஒருவாற்ருனுஞ்சொல்லுதற்கும் நினைத்தற்கும் அமையாப் பெருவழிதொலைத்து ஆங் குற்றன வெல்லாம் பெறுதற்கும் அம்மாதமே இடைகிடந்தமையா னழகிய திங்களென்ருர். அறுசேறுபரிசுத்தமும் வழிபிழையாது நடத்து நேர்மையும் உடைய பாதமென்பான் "துங்கவார்கழல்" என்ருர். இரா ஏழாவது தொக்கவேற்றுமைத் தொகை. நுதலிடத்து என்புழி அத்து அசைநிலை. தம்போல்வாரையுங் கருதிப் புலாதிக ளொன்றுபட்டமைந்த உவப்பினுன் "எங்கணுயகம்" என்ருர். தரித்த என்பது தரித்து எனத் திரிந்து நின்றது. * பேரொளி என்பது தமக்கு ஒப்பும் உயர்வு மில்லாது உலகெல்லாந் தம்முள் ளமைத்து ஒன்ருய்நின்ற ஒளி. அவ்வொளி யொன்றேயாயினும் பயனுற் பலவா மாகலானும் ஞானதிர்ஷ்டையானேக்கும் ஞானிகட்கு நோக்கநோக்கப் புதிதாய்

---

* உயர்திணை அஃறிணை யிரண்டிற்குங் கருவாய்க் கடவுள் தன்மையதாகலினதை உயர்திணையாயே அமைத்துக்கொள்க.

அவரவர் தகைமைப்படி வரையாது காணப்படுமாகலானும் "தரித் தனவன்றே" எனப் பன்மையாற் கூறினர். அது,

> "ஏதிலார் போல பொதுநோக்கு நோக்குதல்
> காதலர் கண்ணே யுள"

என்ற வள்ளுவரில் நோக்குதற்றொழி லொன்றேயாயினும் இருவர் கண்ணு நிகழுதலானும் ஒருவர்கட்டானும் குறிப்புவேறுபாட்டாற் பலவா மாகலானும் உள எனப் பன்மையாற் கூறப்பட்டதுபோலும் என்க.

இக்கருத்தறியாத முதலுரையார், நூலாசிரியர் ஒருமை பன்மை யறியாதாரெனக் குற்றங்கூறித் தரித்தனவன்றே என † இருவாற்றானும் இன்புறக்கிடந்த செய்யுளைத் தரித்தது வன்றே எனக் கைப்புறக் கலைத்து வரைந்து தமது சிற்றறி விற்கேற்ப "பேரொளியென்னும் ஒருமைக்கிளவி தரித்தன வென்னும் பன்மையோடு முடித லியலாமையான் தரித்தது வன்றே எனச் செய்யுளைத் திருத்தினும்" எனக் காரணங் கூறியும் போந்தார். இப்போலியறிவினர் இவ் விலக்கண மெங்குள்ளதோ! யாமறிந்தவற்று ளில்லையென் றடங்காது தம்மதமே பெரிதெனப்போத விழுக்காமென்க: அதுவேயு மன்றிப் பேரொளியென்பதனை உம்மைத் தொகையாக்கிப் பேரும் ஒளியும் தரித்தனவென முடித்தாலோ வெனத் தமக் கியைந்தவாறு கடாநிகழ்த்திப் பேரொளி என்பதற் குப் பெரிய ஒளி என்பதே பொருளாகலானும் வகுத்த பேரொளியென முன்னுங் கூறினமையானும் ஆசிரியர்க் கது கருத்தன்றென்க வென்றும் கூறியவர் ஒருமையைப் பன்மையாற் கூறலும் ஆசிரியர்க்குக் கருத்தாகாதென விளங்குந் தமது நுண்ணறிவை "மறவியினைய" என்றற் கிலக்காய் மறந்தார்போலும். இதூஉம் இன்னும் பலவிடத் திவ்வாறே ஒருமை பன்மை யிழுக்கியுள்ளனவென்றுந் தொல்காப்பிய சொல்லதிகாரம் எச்ச இயல். 65-ம் சூத்திரம்,

"ஒருமைசுட்டிய"

† பொருளானும் சொல்லானும் இன்பமென்றறிக.

என்பதனுன் ஆண்டாண்டுத் திருத்தி யிருக்கின்றும் என்றும் அதுபற்றி யெம்மை யிகழற்கவென்றுங் கூறினர். அச் சூத்திர மிவரை இச் செய்யுளைத் திருத்தென் றேவிற்றுபோலும். இவர்கூற்றெல்லாம் போலியென்ப தியாம் முன்னர்க் கூறியவாற்ருனறிக: செய்யுட்கிடந்தவாறே யுரையமைத்துக் கோடல் உரையாசிரியர்க் கியற்கையேயன்றித் திருத்திக் கோடலன்று திருத்திக்கோடல் வேண்டுநூற்கு உரைகோடற்க ஆங்கே புதுநூலோதுகவென்க. பிறவருவனவெல்லா மாண்டாண்டமைத்துக்கொள்க: அன்று அசைநிலை; ஏகாரம் ஈற்றசை.

(17) திருத்தும் பொன்னக ரமரரோ
திரண்டவா னவரோ
கருத்தி னுண்மகிழ்ந் தெவ்வையு
மலங்கரித் திடுமின்
வருத்த மென்றிலா முகம்மதை
யாமினு வயிற்றி
லிருத்தி னேனென வுரைத்தன
னியாவர்க்கு மிறையோன்.

(ப - ரை.) திருத்தும் - திருத்தமாகச் செய்யப்பட் டிருக்கிற, பொன்னகர் - சுவர்க்கத்தினது, அமரரோ - மலக்குகளே, திரண்ட - கூட்டமாகிய, வானவரோ - பிறவாகுமலக்குகளே, முகம்மதை - எம் தன்பாகிய முகம்மது என்பவரை, ஆமினுவயிற்றில் - ஆமினுவின துயர்ந்த சொர்க்கமாகிய கர்ப்பத்தின்கண், இருத்தினேன் - பிரயாணப் படுத்திவைத்தே னுகலின், கருத்தினுள் - அகத்தில், மகிழ்ந்து - மகிழ்ச்சிபூத்து, எவ்வையும் - நரகமுதலி யாவற்றினையும், வருத்தமென்று - துன்பமென்று சொல்லப்படுவேது, இலா - இல்லாத, அலங்கரித்து இடுமின் - சிங்காரிக்கக் கடவீர்கள், என - என்று, யாவர்க்கும் - எல்லா

உயிர்களுக்கும், இறையோன் - கடவுளானவன், உரைத்தனன் - ஆக்ஞாபித்தனன், எ-று.

(போ-ரா.) திருத்தமாகச் செய்யப்பட் டிருக்கிற சுவர்க் கத்தினது மலக்குகளே கூட்டமாகிய பிறவாகு மலக்குகளே எம தன்பாகிய முகம்மதென்ப வரை ஆமினாவின துயர்ந்த சுவர்க்கமாகிய கர்ப் பத்தின்கண் பிரயாணப் படுத்திவைத்தேனாக லின் அகத்தில் மகிழ்ச்சிபூத்து நரகமுத லியா வற்றினையும் துன்பமென்று சொல்லப்படுவது இல்லாது சிங்காரிக்கக் கடவீர்கள் என்று எல்லாவுயிர்களுக்குங் கடவுளானவன் ஆக்யா பித்தனன் என்பதாம்.

பொன்னகர் திருந்த செய்யப்பட்டு முடிந்தனவாக வேதம் ஓது மாகலின் அது இத் தன்மைத்தென்பது தோன்ற "திருத்தும் பொன் னகர்" என்றார். ஆகவே சுவர்க்கம் திருத்தற்கேதுவாங் குறைபாட் டிற் குடைத்தன் றென்பதும் பெறப்பட்டது. ஆகலின் இனி திருத் தப்படும் பொன்னகரென எதிர்காலத்தாற் பொருள்கொள்ளல் பொ ருந்தாதென்க: பொன்னக ரமரரோ என்றது ஈண்டு, ரிலுவான்முத லிய சுவர்க்கத்து மலக்குகளை யுணர்த்திநின்றது. திரண்ட வானவரோ என்புழித் திரண்ட என்பது வானவரின் றொகை வரையாதென்பதூஉம் வானவரோ என்பது அறுசு குறுசு முதலிய சிறந்த தலங்களிலுள்ள வெல்லா மலக்குக ளென்பதூஉங் கருத்து. முகம்மதை என்புழி எம தன்பாகிய வென்றசொற்கள் ஆற்றலாற் பெறப்பட்டது. முகம்மது இத்தன்மைத்தவரென்பது தோன்ற "இருத்தினேன்" என விறைவன் றன் வினையாற் கூறினன். ஆகலின் என்பது செய்யுள் விகாரத்தால் வருவித் துரைக்கப்பட்டது. தேவர்கள் மனுஷாபிதாவைப் படைக்கப் பொருந்தில ராயினும் மனுஷா விரோதிக ளல்லரென்பான் "கருத்தி னுண்மகிழ்ந்து" என்றான். இது இறைவன்கூற்று. இவை என்பது இவ்வை என விரிந்து நின்றது. எவ்வையும் என்ற பொதுமையான் அலங்காரத்திற் கேதுவாங் குறைபா டுடையனவும் அக்குறைபா டில் லாதனவும் பிறவும் அடங்கி "துன்பமென்றிலா" என்றமையான் நரகங்

களையும் அவற்றின் துன்பங்களற வமைத் தலங்கரிமின் என்பது மாயிற்றென்றறிக: அலங்கரிக்குங் குறைபாடில்லா வஸ்துக்கள் **அறுசு துறுசு இல்லியீன்** போல்வன பிறவுமென்க: **நபி**பெருமானுராகலின் திருந்த வலங்கரிக்கப்பட் டுள்ளனவெல்லா மவரது அவதாரத்திற் காகப் பிற்றையு மலங்கரிக்கப்பட்டனவென்க: இங்ஙனமாயின்;

திருந்த வலங்கரிக்கப்பட்டனவற்றைப் பிற்றையு மலங்கரித்தா ரென்முல் இவ் வலங்காரத்தை யவ் வஸ்துக்கள் முன் னிழந்திருந்தன வாகத் தோன்றிப் பொருள் இழுக்குறுமெனின் நன்றுகடாயினுய்; அங்ஙனங் கூறிய வலங்காரம் புதுப்பித்தலேயன்றி வேறல்லவென் றறிக.

"வருத்தமென்றிலா" என்பதை **மூகம்ம**தோடுபடுத்தி வருத் தமென்ப தொன்றுமில்லாத முகம்மது எனக்கூறுவர் முதலுரையார். அது பொருந்தாது, என்னை? படைப்பாதி கள் துன்புருது காத்தலும் துன்புற்றவழிப் பிழைப்பித் தலுமாகிய கருணைகூர்ந்து இப்பூமண்டலத்தின்கண் வரா நின்ற பிரானவர்களை யவ்வாறு சிறப்பித்தல் பொருத்த முடைத்தன்று. வருத்தங்களுக் கேதுவாய படைப்பாதி களி லொன்றைப் பிரித்து "வருத்தமென்றிலா மன்னன்" எனக் கூறுதலான் வருத்தத்திற் கேதுவாய வம்மன்னன் அதினின்றும் பிழைத்தா னென்றக்கால் அம் மன்னனுக்குச் சிறப்பேயாம் பிரானவர்களுக்கு அங்ஙனஞ் சிறப்பாகா வென்க:

அமரரோ, வானவரோ என்புழி ஏகாரங்கள் விளிப்பொருளிடத்து நின்றன. வருத்த மென்றும் இலா என்னுது வருத்தமென்றிலா என் றமையால் நரகங்களின் வருத்துங் குண மவ்விடத்து மீளுமென்பது கருத்தாயிற்று.

(18) பரந்த வாய்க்கொடும் பாந்தளும்
விடங்கொள் பஞ்சரமும்
கரிந்து பொங்கிய குழிகளுங்
கனற்பொறி கதுவ
வெரிந்து செங்நெருப் பொழுகிய
நரகங்க ளேழும்

விரைந்த வித்தடைத் திடுகவென்
றனன்முதல் வேந்தன்.

இச்செய்யுளான்மேலே "வருத்தமென்றிலா" என்றது இனைத்தென விரித்துக்காட்டுவான் றொடங்கினர்.

(ப - ரை.) பரந்தவாய் - விரிந்த வாயினையுடைய, கொடும்- கொடுமை தங்கிய, பாந்தளும் - சர்ப்பநாகங்களும், விடம் - தேள்களும், கொள் - பற்றுதலான, பஞ்சரமும் - தலங்களையும், கரிந்து - கனன்று, பொங்கிய - சீறும்படியான, குழிகளும் - பாழாகிய இடங்களையும், கனல் - வெப்பத்தின், பொறி - அடையாளங்களாகிய தீயணுக்கூட்டங்களை, கதுவ - வெளிப்படுத்தாது, எரிந்து - சுவாலித்து, ஓழுகிய - உயர்ந்திராநின்ற, செந்நெருப்பு - சிவந்த அக்கினிகளையுமுடைய, நரகங்களேழும் - ஏழுநரகங்களையும், விரைந்து - அதிசீக்கிரத்தில், அடைத்து - கொடுமைகளைத் தடுத்து, அவித்திடுக-கெடுத்துவிடுவீர்களாக, என்றனன் - என்றுசொன்னான், முதல்வேந்தன் - மேலேகூறிய ஆண்டவன், எ-று.

(பொ-ரை.) விரிந்த வாயினை யுடைய கொடுமை தங்கிய சர்ப்பநாகங்களும் தேள்களும் பற்றுதலான தலங்களையும் கனன்று சீறும்படியானபாழாகிய விடங்களையும் வெப்பத்தி னடையாளங்களாகிய தீயணுக்கூட்டங்களை வெளிப்படுத்தாது சுவாலித்து உயர்ந்திராநின்ற சிவந்த வக்கினிகளையுமுடைய வேழுநரகங்களையும் அதிசீக்கிரத்தில் கொடுமைகளைத் தடுத்துக் கெடுத்துவிடுவீர்களாக வென்று சொன்னான் மேலேகூறிய ஆண்டவன் என்பதாம்.

இச்செய்யுள் "திருத்தும்பொன்னகர்" என்ற செய்யுளின்கண் கிடந்தனவற்றையே கூறுதலின் கூறியது கூறலெனுங் குற்றமா மெனின் அற்றன்று,

"சிறப்பீனுஞ் செல்வமு மீனும் அறத்தினூஉங்
காக்க மெவனோ உயிர்க்கு"

என்றவர்தாமே,

"அறத்தினூஉங் காக்கமு மில்லை"

என மேலே கூறியனவற்றையே பின்னுங் கூறினாற்போலே இச்செய்யுள் செய்தவதனுன், அநுவதித்தலென்க: அது யாதேனுமோர் நிமித்தத்தால் ஒன்றனை முற்கூறி வேறோர் நிமித்தத்தால் அதனையே பின்னுங் கூறுதலென்க: இங்ஙனமாயின் இச்செய்யுள் ஏதுநிமித்தங் கூறினரோவெனின் திருத்தும்பொன்னகர் என்ற செய்யுள் நரக மித்தன்மைத்தென விரித்துக் கூறுமையான் பொருளுணாக்கவும் கேட்கவுங் கூடாவாய்க் கேடுறுமாகலின் இச்செய்யுள் வேண்டிற்றென்க: விடம் என்புழி எண்ணும்மை விகாரவகையாற் றொக்கது. யாரோனு மடுத்தபோது கனலுமாற்றல் நரகத்துக் குடைமையாதலின் கரிந்து என்றார். நரகத்தீ கருநிறத்த தாதலின் செந்நெருப்பெனல் பொருந்தா தென்பாருமுளர். நரகப்பயன்படுவார் கருநிறத்தராதல்பற்றி நரகத்தீ கருநிறத்ததென்பர் சிலரல்லாது அத்தீ கருநிறத்ததன்றென்க:

முதலுரையாரு மத்தீ கருநிறத்ததென்றே கொண்டு வாளா மயங்குவர். கொடும் என்பதை விடத்தோடுங் கூட்டுக: நரகத்தின் வெப்பம் இடைக்கிடை மலிவென்பதே கருதிக் "கனற்பொறிகதுவ" என்றார். திருத்தும் பொன்னகமென்ற செய்யுளைச் சுவர்க்கத்தோடு படுத்தி இச்செய்யுளை நரகத்திற்கே யுரித்தாய்க் கொள்வர் முதலுரையார்; அது பொருந்தாமையாங் கூறியவாற்றா னறிக:

(19) விற்கெ ழுமறு சொடுகுறு சந்தரம் விளங்கச்
சொர்க்க வாயிலுந் திறந்தலங் கரித்தனர் துன்ப
வர்க்க வாரிபாழ் நரகங்க ளடைத்தனர் வானோர்
கற்கு மாமறை முதலவன் விதித்தகட் டளைக்கே.

(ப - ரை.) வானோர் - மலக்குகளானவர்கள், கற்கும்-யாவர்க்கும் பயில்தலின்றியமையா, மா - மாட்சிமைதங்

கிய, மறை - வேதத்தினையுடைய, முதலவன் - முதற்பொருளாகிய ஆண்டவன், விதித்த - ஆக்யாபித்த, கட்டளைக்கு - உத்தரவின்படிக்கு, அந்தரம் - ஆகாயலோகமும் அதுபோல்வன பிறவும், வில்கெழும் - பிரகாசிக்கும், அறுசுகுறு சொடு - **அறுசு துறுசு**களையொப்ப, விளங்க - பிரகாசிக்கவும், சொர்க்கவாயிலும் - சொர்க்கத்தினது கபாடங்களையும், திறந்து - நிர்ப்பந்தனஞ்செய்தும், வாரி - கடல்போலும், பாழ் - பாழாகிய, நரகங்கள் - நரகங்களினது, துன்ப வர்க்கம் - துன்பத்துக்கேதுவாய வஸ்துக்களையெல்லாம், அடைத்தனர் - தடைபடுத்தியும், அலங்கரித்தனர் - சிங்காரித்தனர், எ-று.

(போ-ரை.) மலக்குகளானவர்கள் யாவர்க்கும் பயில்தலின்றி யமையா மாட்சிமைதங்கிய வேதத்தினையுடைய முதற்பொருளாகிய ஆண்டவன் ஆக்ஞாபித்த உத்தரவின்படிக்கு ஆகாயலோகமும் அதுபோல்வன பிறவும் பிரகாசிக்கும் **அறுசு துறுசு**களை யொப்பப் பிரகாசிக்கவும் சொர்க்கத்தினது கபாடங்களையும் நிர்ப்பந்தனஞ்செய்துங் கடல்போலும் பாழாகிய நரகங்களினது துன்பத்துக் கேதுவாய வஸ்துக்களை யெல்லாம் தடைபடுத்தியுஞ் சிங்காரித்தனர் என்பதாம்.

**அறுசு, துறுசு** பிரகாசவடியாய்க் கிடக்கும் ஓ ரரிய வஸ்துக்களாகலின் அப்பொருட்கேற்ற விற்கெழும் என்ற அடைகொடுத்தார். அவைகள் ஈண்டு இனத்தென்றற் கமையா அனுதி வடிவென்க: சுவர்க்கங்களைப்போலவே **அறுசு துறுசும்** திருத்தற் கேதுவன் முகலின் அறுசொடு குறுசு என்புழி ஒப்புப் பொருளிடத்துவந்த ஒடு உருபை யவ்வசனத்தின் கடைபடுத்தி அறுசு குறுசொடு அந்தரம் விளங்க வெனக்

கூட்டி அறுசைப் போலவும் குறுசைப் போலவும் அந்தர முதலியன வெல்லாமுந் தோற்றுமாறு அலங்கரிமின் என்பது கருத்தெனக் கொள்க: "சொர்க்கவாயிலுந்திறந்து" என்ற உம்மையான் **பைத்துல் குத்ஸ், பைத்துல்மஅமூர்**, காப, கௌஸைன் முதலியன பிறவும் பெறப்பட்டன. அவைகளுந் திருத்தப்பட்டு ஒப்பறக் கிடக்கும் வஸ்துக்களென்றறிக. திறந்து என்றமையான் கபாடம் ஆற்றலால் வருவிக்கப்பட்டது. அந்தரமும் என்புழி எச்ச உம்மை விகாரவகையாற் றொக்கது. ஆகலின் அலங்கரித்தற் பொருத்த முடையனவெல்லா மமையுமெனக்கொள்க: நரகத்தி னுட்படுவார் அதினின்று கழைப்படுதல் அரிதென்பான் "வாரி" என்றார். ஆண்டு உவமையுருபு செய்யுள் விகாரத்தாற் றொக்கது. மக்கள் நரகத்திற் குரித்தாதல் அவரது செயற்கையாலேயேயன்றி இயற்கையாலன்றென்பது வெளி. ஆகலின் செயற்கை நன்மையாயின் நரகம் இத்தன்மைத்தென்பான் "பாழ்நரகு" என்றார். "விளங்க திறந்து" என்புழி உம்மைகள் விகாரவகையாற் றொக்கன. "அடைத்தனர்" என்னும் வினைமுற்று வினையெச்சப் பொருளினின்றது. ஆண்டு வேண்டிய உம்மையும் விகாரவகையாற் றொக்கது. "கற்கும்" என்புழி யாவர்க்கு மென்பது அவாய் நிலை. மறை, சுவர்க்கம், நரகம் என்ற பொதுமையான் நான் கென்பதும், எட்டென்பதும், ஏழென்பதும் முறையே பெறப்பட்டன. வேதம் அரும்பொருட் கரும்பொருள ளுதிவசனமாய் ஒப்பறக் கிடக்கும் பொருளாதலின் "மாமறை" என்றார். அப்பொருண் மெய்ப் பொருள் இவையென விளக்கி யட்சர வொலிவடிவாய்க் கிடந்து ஆண்டாண்டுப்பயின்று வரும் ஒப்பற்ற நூலேயே வேதமென்றும் முதனூலென்றுஞ் சொல்லப்படும். "கட்டளைக்கு" என்புழி குவெழுத்து நான்கனுருபன்று,

"வேற்றுமையுருபுக ளல்லாதனவும்"

என்ற விதியானுமறிக: ஏகார மீற்றசை.

இனி முதலுரையாரும் மற்றும் அவர்போல்வனச் சிலரும் இங்ஙனம் மிக்க மலைவர். அம்மலைவுகளெல்லாம் இனைத்தென விரித்துக் கூறிற் பல்குமென விரித்திலேம். உய்த்துணர்க:

(20) அந்தண் பொன்னக ரடங்கலு மலங்கரித் ததுவும்
வெந்த பாழ்நர கங்களை யடைத்தபல் விதமுஞ்

சந்த திண்புய முகம்மது நபிதரித் ததுவு
மிந்த வாறுக ளனைத்தையு மறிந்திபு லீசு.

(ப - ரை.) திண் - வலியினது, சந்தம் - வடிவாகிய, புயம்- புயத்தினையுடைய, முகம்மதுநபி - **முகம்மதுநபி** ஸல்லல்லாஹு அலைஹிவஸல்ல மவர்கள், அம் - அழகிய, தண் - குளிர்ந்த, பொன் - சிதேவித் துவம்பொருந்திய, நகர் - வீட்டின்கண், தரித் ததுவும் - தரிக்கப்பட்டதுவும், வெந்த - வெப்ப முற்ற, பாழ் - பாழாகிய, நரகங்கள் - நரகங்க ளின், அடைத்த - கொடுமைகளைத்தடுத்த, பல் விதமும் - பலவிதங்களையும், அடங்கலும் - ஆகாயத்தின்கண்ணும் பூமியின்கண்ணும் அலங் கரித்தற் கேதுவாய யாவற்றையும், அலங்கரித் ததுவும் - சிறப்பித்ததுவுமான, இந்தவாறுக ளனைத்தையும் - இவ்வித புதிய காட்சிகளையெல் லாம், இபுலீசு - இபுலீசென்கிற பெயருக்குரிய மூதேவியானவன், அறிந்து - கண்டு, எ-று.

(போ-ரை.) வலியினது வடிவாகிய புயத்தினையுடைய **முகம் மதுநபி** ஸல்லல்லாஹு அலைஹிவஸல்ல மவர்கள் அழகிய குளிர்ந்த சிதேவித்துவம்பொருந்திய வீட்டின்கண் தரிக்கப்பட்டதுவும் வெப்ப முற்ற பாழாகிய நரகங்களின் கொடுமைகளைத் தடுத்த பல விதங்களையும் ஆகாயத்தின்கண் ணும் பூமியின்கண்ணும் அலங்கரித்தற் கேது வாய யாவற்றையுஞ் சிறப்பித்ததுவுமான இவ் வித புதிய காட்சிகளையெல்லாம் இபுலீசென் கிற பெயருக்குரிய மூதேவியானவன்கண்டு என்பதாம்.

**நபி**பெருமானர் அமைவுற்ற இடம் சுவர்க்கத்தினுஞ் சிறந்ததென் பான் வயிற்றைப் பொன்னகரென்றது "அந்தண் பொன்னகர்" என்ருர். அது ஆகுபெயராய் வயிற்றைக்குறித்துநின்றது. "அடங்கலும்" என்றது ஈண்டு வானத்தினும் பூமியினும் அலங்கரித்தற் கேதுவாய வஸ்துக்கள், அலங்கரித்தற் சிறப்புவாய்ந்த மேன்பாட்டினை யுடைய தலங்களன்றி, மலையும், பாலையும், கானமும், பிறவு மன்றென்றறிக. நரகம் இத்தன்மைத்தென்பது தோன்ற "வெந்த பாழ்நரக" மென் ருர். அடைத்த என்புழிக் கொடுமையை என்பது செய்யுணோக்கத்தால் வருவித் துரைக்கப்பட்டது. நரகத் துன்பங்கள் இனைத்தென வரை தற்கு அமையாவெனும் மலைவுதோன்ற "பல்விதமு" மென்ருர். "சந்ததிண்புயம்" என்புழி வலியினது பேற்றைப் புயத்தின்மேலேற் றிக் கூறியது. ஆண்டு ஆகிய என்ற ஒரு சொல் பெறப்பட்டது. "அறிந் திபுலீசு" என்பதில் அறிந்து என்னும் பொதுமையால் காட்சி யானோ செவியானோ அறியலாயினன் இபுலீசு? என்னுங் கடாநிகழு மென்பான் "இந்தவாறுக ளினைத்தையு" மெனச் சுட்டிக் கூறினர். ஆகலின், அக் கடாநிகழாமைக்குக், கண்டு எனப் பொருள் கூறினும். **இபுலீசு** என்னும் பெயர் உயிர்கொ ளுடம்பிற்கு அமைத லிழுக் கெனவும் அப்பெயருக் கவனே யுரியனெனவுந் தோன்ற "அப்பெய ருக்குரிய மூதேவி" என்ரும். அலங்கரித்தநுவும், தரித்தநுவும் என் புழி வகரமெய்கள் விகாரவகையால் வந்தன. பிற வருவனவெல்லாம் உய்த்துணர்க:

(21) நடுங்கி வாயினீர் வறந்திட
நாவுலர்ந் துடல
மொடுங்கி யைம்பொறி மயக்குற
நெஞ்செலா முடைந்து
புடங்கொள் வங்கம தாய்நினை
வுருகினன் புலம்பத்
துடங்கி னடிக் கடிபெரு
மூச்சொடு சுழன்றே.

(ப - ரை.) உடலம் - அக்கொடிய னிபுலீசினது தேகமா னது, நடுங்கி - திடுக்கிட்டு, ஒடுங்கி - வதங்குத லாய், ஐம்பொறி - ஐயறிவுகளும், மயக்குற -

நிலைகுலைய, நெஞ்செலாம் - மனமெல்லாம், உடைந்து - சமையலழிந்து, நினைவு - அங்குள நோக்கங்கள், புடம்கொள் - புடம்பற்றிய, வங்கமதாய் - ஈயத்தைப்போன்று, உருகினன் - கரைந்து, சுழன்று - பிர்மித்து, அடிக்கடி - அடுத்தடுத்து, பெருமுச்சொடு - எறிந்த பெரிய மூச்சுகளோடு, வாயினீர்-வாயின்கண்ணதான சலப்பிரளயமும், வறந்திட - காய்தர, நாவுலர்ந்து - சருகென நாக்குலர்ந்து, புலம்பத் துடங்கினன்- பலவாறு பிதற்றத் துவக்கினன், எ-று.

(பொ-ரை.) அக்கொடிய ஙிபுலினது தேகமானது திடுக்கிட்டு வதங்குதலாய், ஐயறிவுகளும் நிலைகுலைய மனமெலாஞ் சமையலழிந்து அங்குள நோக்கங்கள் புடம்பற்றிய வீயத்தைப்போன்று கரைந்து பிர்மித்தடுத்தடுத்து எறிந்த பெருமூச்சுகளோடு வாயின்கண்ணதான சலப்பிரளயமுங் காய்தரச் சருகென நாக்குலர்ந்து பலவாறு பிதற்றத் துவக்கினன் என்பதாம்.

மனுடாதிகளுக்கு இன்றியமையாப் பேற்றினை யிழவுறுத்துந் தொழிலொன்றையே இன்பப்பொருளாய்க்கொண்டு விளங்குவ ஙிபுலி சாகலின் அத்தொழில் வேரறுக்கு மகத்துவ நபிபெருமான் வருதற்காய காலம் எதிர்நோக்கிற்றென்னும் காட்சியா ணிகழுமவலத்தீயிற் பிறந்த மாருதத்தினன் அவனுடல மதிர்ந்ததென்பான் "நடுங்கி" என்றும், நடுக்குற்றவழி யுறும் பய னிஃதென்பான் "ஒடுங்கி" என்றும், அவ்வொடுங்குதலுற்றவழி உடலம் நிலைகுலையு மென்பான் "ஐம்பொறி மயக்குற" என்றும், அவ்வறிவுக ளொருங்கே மயங்கின விடத்து மனம் நிலையாதென்பான் "நெஞ்செலாம் உடைந்து" என்றும், அஃதுடைந்தவிடத்து அங்குற்றன வெல்லாங் கேடுறுமென்பான் "நினைவு உருகினன்" என்றும், இவ்வாறு கேடுற்றவிடத்து உணர்வற்றான் என்பான் "சுழன்று" என்றும், இங்ஙனமாக மூச்

சையொன்றே நிலையுமென்பான் "அடிக்கடி பெருமூச்சொடு" என்றும், பிற்றைச் சற்றே தெளிந்து பிரானவர்களின் வரவைத் தம்மக்கட்கும் அறிவிப்பான் றொடங்கினன் என்பது தோன்ற "புலம்பத்துடங்கினன்" என்றுங் கூறினர். இவ்வாறு முறைப்படாது வழீஇ சொற்கள் முன்பின்னய் நின்றன; செய்யுளாகலின் என்க:

"பெருமூச்சொடு நாவறந்திட" என்றமையான் புலம்புதற் கியலாதிருந்தும் ஒருவாறு புலம்பின னென்பது கருத்து. ஈண்டு நினைவென்பது பிறர்பால் கேடுறுத்தும் எண்ணத்தை. வங்கமதாய் என்புழி ஆய் என்பது உவமைப் பொருளிடத்துவந்தது. வங்கமது என்பது பகுதிப்பொருள் விகுதி. புடங்கொள் என்பது எழுவாய்த் தொடர். மனமெலாம் என்பதில் எலாம் என்பது வியசனப் பொருளிடத்து வந்தது. வாயினீர் என்புழி வேண்டிய சிறப்பும்மை விகாரவகையாற் றொக்கது. அடிக்கடி என்பது மிகுதி குறித்து நின்றது. உருகினன் என்புழி நரகங்க ளடைத்தனனொன்றற் குனைத்தாங் குனைக்க: ஐம்பொறிக ளாவன; மெய், வாய், மூக்கு, கண், செவி.

இனி மெய், வாய், கண், மூக்கு, செவி, என வாளா முறைபடுத்துவாருமுளர். இம்முறையே முதலுனையார்க்குமுடன்பாடு.

"ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனெடு நாவே
மூன்றறி வதுவே அவற்றெடு மூக்கே"

என்றவிதி யறிந்திலர்போலும்.

"வறந்திட வுலர்ந்து" என்றமையான் அதற்கேற்ற சருவென்ற சொல் நாவுக் குவமையாய் வருவித் துரைக்கப்பட்டது. என்றென்றும் வற்ருப் பெருகும் பெருமை வாயினீர்க்காகலின் பிரளயமென்ரும். இச்செய்யுள் விரித்தற் கேதுவாய பலபொருட் பாட்டிற் கிடனயினும் விரிக்கிற் பல்குமென் றஞ்சி விரித்திலேம் உய்த்துணர்க:

(22) கரைவ னேங்குவன் மலங்குவன்
கலங்குவன் கதறி
யிரைவன் கன்னத்திற் கையைவைத்
திருந்தெழுந் திருப்பன்

றரையின் மேல்விழுந் தெனக்கிலை
யினிசிங்கா சனமென்
றுரை மறந்திடக் கிடந்தன
னிருகணீ ரொழுக.

(ப - ரை.) கரைவன் - இபுலீசானவன், கதறி - தன் மக்க ளைக்கூப்பிட்டு, இனி - இதற்குப்பிற்றை, எனக்கு - உங்கள்தகப்பனுகிய எனக்கு, சிங்காசனம்- உகப்பான கெடும்பேருகிய வதிகாரம், இலை என்று - அழிந்திற்றென்றுசொல்லி, இரைவன்- சப்திப்பன், கன்னத்தில் - தன்னிரண்டு கதுப்பி னிடத்தும், கையை வைத்து - கரங்களைச் சேர்த்து, இருகண் நீர் ஒழுக - இரண்டு கண்க ளாலுஞ் சலப்பிரளயமாகுமாறு சிந்த, ஏங்குவன் - அழுவன், மலங்குவன் கலங்குவன் - மிக்க துயரப்படுவன், தரையின்மேல் - தனக்குரிய தலத்தின்மீது, விழுந்திருந்து - வீழ்ந்து சற்றே தரிப்புற்றிருந்து, எழுந்திருப்பன் - பிற்றை வீழ்ச்சியொழிவன், உரைமறந்திட - சொற்க ளிழவுற, கிடந்தனன் - சோர்வுற்றுக் கிடப்பன், எ-று.

(பொ-ரை.) இபுலீசானவன் றன்மக்களைக்கூப்பிட்டு இதற்குப்பிற்றை உங்கள் தகப்பனுகிய வெனக்கு உகப்பான கெடும்பேருகிய வதிகார மழிந்திற் றென்றுசொல்லிச் சப்திப்பன் தன்னிரண்டு கதுப்பினிடத்துங் கரங்களைச்சேர்த்து இரண்டு கண்களாலுஞ் சலப்பிரளயமாகுமாறு சிந்த அழுவன் மிக்க துயரப்படுவன் தனக்குரிய தலத்தின்மீது வீழ்ந்து சற்றே தரிப்புற்றிருந்து பிற்றை வீழ்ச்சியொழிவன் சொற்களிழவுறச் சோர்வுற்றுக்கிடப்பன் என்பதாம்.

லோககாருண்ய கருணைத்தோற்றமாகிய பிரானவர்கள் உதயஞ் செய்வான் எழுந்தருளினர்களென் றறிந்தபோதே லோககேடாகிய **இபுலீ** சென்பவன் றன தாற்றலானும் தொழிலானும் தோற்றத்தானும் குன்றுவன் என்பது தோன்றக் "கனைவன்" என்றார். ஆகலின் அது காரணப் பெயரென்க: உலககேடாகிய இபுலீசு உளன் என்பது தோன்றப் பிரானவர்களை யாண்டாண்டும் லோககாருண்ய கருணைப் பிரான் எனக் குறியிட்டுக் கூறுவாம்.

இக்குறியீடு எங்ஙனம் பயின்றானே? வெனின் இப்படல முதற் பாட்டிற் கிடந்த "கருணை வீற்றிருந்த" என்ற சொல்லாற் பயின்றானென்க: "கதறி" என்புழி மக்களென்பது அவாய்நிலை. மக்களென்னும் முறையான் இபுலீசு தகப்பனென்றும்.

இனி கதறி என்புழி யானையென்னும் அவாவால் சுற்றத்தானையென்றும், தனையின்மேல் என்புழிப் பூமியின்மேல் என்றும், இருந்து எழுந்திருப்பன் என்புழி உட்கார்ந் திருந்து தரிப்பின்றி எழும்புவன் என்றும் கூறுவர் முதலுரையார். அவையெல்லாம் பயனில் கூற்றாமென்க: என்னை? சுற்றமி **புலீசுக்** கின்மையானும் அறிவழிந்த மன்னவன் என்ற செய்யுளின்கண் மக்கள்வந் தடைந்து என்று கூறினமையானும் பூமியினும் விசும்பினும் மற்றிடங்களினும் இபுலீசின தியற்கையின் பேதமின்மையான், குறித்த பூமி விசும்பு முதலியனவற்றில் அவனுறையுமிட மிஃதெனக் குறிப்பின்மையானும் ஒருவாறு மனுவியற்கைக்கேற்ற பொருடோன்றத் தனையின்மே லென்றாரல்லது பூமியின்மேல் விழுந்தானென்னுங் கருத்தினரல்ல ராகலானும் உட்காருதலாகிய வினையின் முடிவை உட்கார்ந்து என்றும் யாதொரு வினையும் ஆண்டு நிகழ்விலா திருத்தலை இருந்து என்றும் கூறுதலான் உட்கார்ந்திருந்து என்புழி உட்கார்ந்து சற்றே தரித்து என்பதே கருத்தாகலானும் அறிக:

சுற்றமென்பது தகப்பன், தாய், அவர்களுடன் பிறந்தார் முதலாயினார். **இபுலீசுக்** கிம்முறையா ரில்லையென்பதறிக: "சிங்காசன" மென்பது இபுலீசினது கெடுதற்றொழிலுக்குரிய பட்டத்தை யுணர்த்தி நின்றது. அது ஆகுபெயர். "எனக்கிலை இனிச் சிங்காசன"மென்புழி வழிக்கேடு நேர்வழிமுன் கெடும் என்பதுவும், இனி பிரானவர்களுக்

கே சிங்காசன மென்பதுவுங் கருத்தென்றறிக: இலை என்பது இழ வுப்பொருள் தந்து நின்றது. கன்னத்தில் கையைவைத்தென்பது அவ லங்குறித்து நின்றது. மலங்குவன் கலங்குவன் என்னுஞ் சொற்கள் ஓரோபொருள் குறித்தனவாதலின் ஒன்று மிகுதி குறித்தது. தனை என்பது மாகுபெயர். இலை, கணீர் என்பன இடைகுறைந்து நின்றன.

(23) அறிவ ழிந்தமன் னவன்றனை மக்கள்வந் தடைந்து
குறியுந் துன்பமும் வந்தவா றேதெனக் கூறி
நிறையு மக்களோ டுறும்வர லாறெலா நிகழ்த்தி
யுறையு மில்லிட மிவணிலை நமக்கென வுரைத்தான்.

(ப-ரை.) வந்தடைந்து - மேலேசொன்னபடி இபுலீசினது கூப்பிடுதலுக் கொழுகிவந்து சேர்ந்த, மக்கள் - பிள்ளைகளானவர்கள், அறிவழிந்த - அறிவு களை யிழக்கப்பெற்ற, மன்னவன்றனை - தகப் பனைநோக்கி, குறியும் - வேற்றுமையாகிய இவ் வடையாளங்களும், துன்பமும் - கிலேசமும், வந்தவாறு - உமக்குற்றவழி, ஏதென - எது வெனக்கேட்க, கூறி - இவையென மேலே கூறப்பட்ட செய்யுட்களில் கிடந்தனவெல்லாம் விளக்கிச்சொல்லி, நிறையுமக்களோடு - பிற்றை யும் வரையாதுவந்து நிறைந்துகொண்டே இரா நின்ற தன் பிள்ளைகட்கெல்லாம், உறும் - இனி மேல் சம்பவிக்கும், வரலாறெலாம் - எல்லாக் காரியங்களையும், நிகழ்த்தி - சொல்லிக்காண் பித்து, நமக்கு - நம்மவர்கட்கு, உறையும் - தங் குதற்கேதுவாகும், இல்லிடம் - இருப்பிடமா னது, இவணிலை - இவ்வானுலகின்கண் கிடைக் கப்படமாட்டாது என்று, உரைத்தனன் - ஆர வாரித்துச் சப்தித்தான், எ - று.

(போ-ரை.) மேலேசொன்னபடி இபுலீசினது கூப்பிதடு லுக் கொழுகிவந்து சேர்ந்த பிள்ளைகளானவர்

கள் அறிவுகளை யிழக்கப்பெற்ற தகப்பனை நோக்கி வேற்றுமையாகிய இவ்வடையாளங்களும் கிலேசமு முமக்குற்றவழி எதுவெனக் கேட்க இவையென மேலேகூறப்பட்ட செய்யுட்களிற் கிடந்தனவெல்லாம் விளக்கிச்சொல்லிப் பிற்றையும் வரையாது வந்துநிறைந்து கொண்டே இராநின்ற தன் பிள்ளைகளுக்கும் இனிமேற் சம்பவிக்கு மெல்லாக் காரியங்களையும் சொல்லிக் காண்பித்து நம்மவர்கட்குத் தங்குதற் கேதுவாகு மிருப்பிடமானது இவ்வானுலகின்கண் கிடைக்கப்படமாட்டாதென்று ஆரவாரித்துச் சப்தித்தான், என்பதாம்.

அறிவென்னும் பொதுச்சொல் ஆறையுங் குறித்து நின்றது. அவ்வறிவழிதல் பிரானவர்களின் அவதாரத்தாலுறும் பயனெனக. மன்னவனென்பது தலைமைகுறித்து நின்றது. இபுலீசு எவரினுங் கடையனுயினுந் தீயகுணத்தவருக்கெல்லாம் தலைவனென்பதொன்றே யவனுக்குரிய தலைமைத்தன மெனக் கொள்க. மக்கள் எழுவாய் வேற்றுமை. அடைந்தவென்னும் பெயரெச்சத் தகரவொற்றின்மேனின்ற அகரவுயிர் உகரமாய்த் திரிந்து அடைந்து என நின்றது. ஏதென என்புழி, கேட்ட என்றசொல் செய்யுள் விகாரத்தால் சிதைந்து நின்றது. கூறி என்றமையான் மேலே கூறிய செய்யுளிற் கிடந்தனவெல்லா மென்பது அருத்தாபத்தியாற் பெறப்பட்டது. இபுலீசின் பிள்ளைகள் வரையா தடுத்துவந்துகொண்டே யிருந்தாரெனக் கருதி யப்பொருடோன்ற செய்யுமென்னும் முக்காலத்திற்கும் பொதுவாய்ப்பாட்டால் "நிறையுமக்கள்" என்றார். மக்களோடு என்புழி ஓடு உருபு நான்கன் பொருளிடத்து வந்தது. இபுலீசு மூன்று காலங்களினிகழ்வனவெல்லாம் வானத்திற் செல்லுகையா லறிந்து மாக்கள்பால் நிகழ்த்திப் பேறுபெற்றிருந்து பிற்றை யவ்வாறு செல்லுதற் கமையாது கடைபட்டமையான், "உறையு மில்லிடம் இவணிலை" என்புழி, இவண் எனுஞ் சுட்டு வானத்தை யுணர்த்தி நின்றதென்றறிக.

இனி இவணெனுஞ்சுட்டுப் பூமியைக் குறித்து நின்றதென்பர் முதலுரையார். அவர்க்கு இபுலீசு இப்பொழுது வானத்தி

விருக்கின்றானென்பதே யுடன்பாடு போலும் அது வேத விரோதமென்பது பின்னர்க் கூறுதும்.

இனி தான் வானத்திற் செல்லலாகா தென்பதையும் பிரானவர்க ளித்தன்மைத்தவராய் வேதப் பிரமாணத்தைப் பூமியின்கண் ணிரப்புவர் என்பதையும் தன்போல்வார் செல்வாக்குருது இழுக்கி யுறுவார் என்பதையும் **இபுலீசு** கூறினான் என்பதுதோன்ற "உறும் வரலாறெலாம் நிகழ்த்தி" என்றார். தன்போல்வாரையெல்லாங் கருதி "நமக்" கெனப் பன்மையாற் கூறினான். உறும் வரலாறெலாம் நிகழ்த்தி என்றமையான் ஈண்டு வாராக்காலத்து நிகழ்வனவெல்லாம் **இபுலீசு** அறிவனென்பது பெறப்பட்டது.

இச்செய்யுளில் முதலுரையார் முழுதும் வாளாப் போயினர்; அவருரையானே காண்க.

(24) இந்த வாசகங் கேட்டலு மக்களெல் லோருந்
தந்தை யேயிதற் கென்செய்வோ மெனத்தடு மாறிப்
புந்தி நொந்துநொந் தவரவர் திசைதிசை புகுந்தார்
சிந்தை நொந்திபு லீசுவுந் திகைத்திருந் திடைந்தான்.

(ப - ரை.) இந்தவாசகம் - **இபுலீசுல்லஈன்** சொல்லிய இவ்விதமான வசனத்தை, மக்களெல்லோரும் - அவன் புத்திரர்களெல்லவரும், கேட்டலும் - கேட்டவுடனே, தந்தையே - தந்தாய், இதற்கு- இவ்வாறுற்ற ஆபத்துக்கு, என் செய்வோம் என-நாம்செய்யுமுபாயமொன்றுமில்லையேஎன, புந்தி-மனமும், தடுமாறி-நிலைகுலைந்து, நொந்து நொந்து - மிக்க துயரங்கொண்டு, அவரவர் - **இபுலீசி**னது மக்களி லொவ்வொருவரும், திசை திசை - அவரவர்வந்த திசைகள்தோறும், புகுந்தார் - போயினர், இபுலீசுவும் - கொடுமைதங்கிய **இபுலீசெ**ன்பவனும், சிந்தைதிகைத்து - மனத் தடுமாற்றங்கொண்டு, நொந்து - துக்

கித்து, இடைந்து - வசக்கேடுற்று, இருந்தான்- தன்னிடத்தின்கண் மேவியிருந்தான், எ-று.

(பொ-ரை.) இபுலீ சுல்லாஉன் சொல்லிய இவ்விதமான வசனத்தை அவன் புத்திரர்களெல்லவருங் கேட்டவுடனே றந்தாய் இவ்வாறுற்ற ஆபத்துக்கு நாம் செய்யு முபாயமொன்றுமில்லையே என மனமும் நிலைகுலைந்து மிக்க துயரங்கொண்டு இபுலீசினது மக்களி லொவ்வொருவரும் அவரவர்வந்த திசைகடோறும் போயினர்; கொடுமைதங்கிய இபுலீசென்பவனும் மனத் தடுமாற்றங்கொண்டு துக்கித்து வசக்கேடுற்றுத் தன்னிடத்தின்கண் மேவி யிருந்தான், என்பதாம்.

தந்தையே எனு மேகாரம் விளியின்கண் வந்தது. இதற்கு எனுஞ் சுட்டு ஆபத்தைக் குறித்து நின்றது. அந்தண் பொன்னகர் என்ற செய்யுண்முதல் இச்செய்யுளிறுவாய் இபுலீசினது தன்மைகூறி இனி பிரானவர்கள் கருத்தரித்ததுமுதல் அவதாரகாலம்வரை நிகழ்ந்தவை யிவை எனக் கூறுவான் றொடங்குவர்.

(25) தரித்தி டுமுதற் றிங்களிற் றரைபுக ழாத
முரைப்ப ராமினு கனவினி லுன்றிரு வுதரத்
திருக்குஞ் சந்ததி வலிமையை யுடையதிவ் வுலகத்
தருக்க ளெப்பல நாமமு கம்மதென் றகன்றார்.

(ப - ரை.) தரித்திடும் - நபிகணாயக மவர்களின் சோதி அப்துல்லாவினது திருநுதலிடத்திருந்து மாதுசிரோமணி ஆமினுவினது மேலான சுவர்க்கமாகிய கர்ப்பத்தின்கண் மனிதாவதாரமா வருவான் வேண்டிக் கருவாகத்தரித்த, முதல்-முதலாம், திங்களில் - மாதத்திலே, தரை - பூலோகமும் வானலோகமும், புகழ் - புகழாநிற்கும், ஆதம் - மூலபிதாவாகிய ஆதம் அலைஹிஸ்ஸலா

மவர்கள், கனவில் - ஆமினுவினது நித்திரையில் வந்து, ஆமினு உன் - ஆமினுவுனது, திரு - மேன்மை தங்கிய, உதரம் - வயிற்றின்கண், இருக்கும்-அமைவுற்றிருக்கும், அத்து-செம்மை யாகிய, அருக்கன் - சூரியனைப்போலும், சந்ததி- மகனுக்கு, இவ்வுலகு - இவ்வுலகங்களெல்லாம், ஒப்பல - ஒன்றுகூடினும் ஒப்பாகா, வலிமை யை - சர்வாதிகாரமுடைய கடவுளை, உடை யது - தமக்குரித்தாய்க்கொண்டவர், நாமம் - அவர்பேரானது, முகம்மது என்று - மூகம்ம தாகும்என்று, உரைப்பர் - சொல்லி, அகன் ருர் - போயினுர்கள், எ-று.

போ-ரை.) நபிகளுயக மவர்களின் சோதி அப்துல்லாவி னது திருநுதலிடத்திருந்து மாதுசிரோமணி ஆமினுவினது மேலான சுவர்க்கமாகிய கர்ப் பத்தின்கண் மனிதாவதாரமாய் வருவான் வேண்டிக் கருவாகத்தரித்த முதலாமாதத் திலே பூலோகமும் வானலோகமும் புகழா நிற்கும் மூலபிதாவாகிய ஆதம் அலைஹிஸ்ஸலா மவர்கள் ஆமினுவினது நித்திரையில் வந்து ஆமினு! உனது மேன்மைதங்கிய வயிற்றின் கண் அமைவுற்றிருக்குஞ் செம்மையாகிய சூரி யனைப்போலு மகனுக் கிவ்வுலகங்களெல்லா மொன்று கூடினும் ஒப்பாகா, சர்வாதிகார முடைய கடவுளைத் தமக் குரித்தாய்க் கொண் டவர் அவர் பேரானது மூகம்மதாகும் என்று சொல்லிப் போயினுர்கள் என்பதாம்.

தனையும் என்புழி எச்ச உம்மை விகாரவகையாற் ருெக்கது. ஈண்டுத் தனையென்ப தாகுபெயராய் உயிர்கண்மே னின்றது. உலகு

என்பதூஉ மஃது. புகழ் வினைத்தொகை. உரைத்தார் எனும் வினை முற்றுப்பெயர் உரைப்பரெனக் காலவழுவமைதியாய் வினையெச்சப் பொருளினின்றது. ஆமினு விளிவேற்றுமை.

அதை ஆறும்வேற்றுமைத் தொகையாய்க்கொண்டு,

"இயல்பினும்விதியினும்"

என்ற விதியான் ஆமினுக் கனவெனக் ககரமெய் இரட்டித்துவரக் கொள்வர் முதலுரையார்.

அத்தருக்கன் என்றமையால் இவ்வருக்கன் நிகராதென்பதா யிற்று. இவ் வருக்க னிகராதென்புழிப், பிறவருக்கன் நிகருமென்பது அருத்தாபத்தியாற் பெறும் எனின் பிறவாகு மருக்கனுென்றின்மை யான் அதுகடாவாகாதென்க: பிறவெனின் பிரானவர்கள் இத்தன் மைத்தவரென **ஆமின**வுக்கு ஒருவாறு தோற்றுவிப்பான்வேண்டி மனு பான்மைக் கமையுமாறு பூலோகத்தில் மிக்க சிறந்துள்ள அருக்கனைச் சுட்டி அதனினுமிக்க சிறந்த பிரகாசமுடையவர் என்பான் அத்து என்ற அடைகொடுத்துக் கூறினுர். ஆகலின், பிரானவர்கட் குவமை சொல்லற் கரிதென்பதே கருத்தென்றறிக: அல்லதுவும் அருக்க னென்பதை ஆகுபெயராய்க்கொண்டு செம்மையாகிய பிரகாசம்போ லும் எனப் பொருள்கூறினு மமையும். அருக்கன் உவமத்தொகை. சந்ததி என்னும் உயர்திணை ஆண்மைகுறித்த முறைப்பெயர். உவப் பினு லஃறிணைமுடிபேற்று நின்றது; உலகு என்னும் பொதுமையால் மூவுலகங்களையுங்கொள்க: அது,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு."

என்பதில் வந்த உலகுபோலு மென்க: எல்லா உலகங்களையும் தாங்கி யளிக்கும் வல்லபத்தையுடைய கடவுள் என்பான் "வலிமை" என்றுர். அது பண்புத்தொகைநிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை.

பிரானவர்கட்கு **மூகம்ம**தென்னும் பெயர் இட்டகாலம் இஃதெ னக்குறித்துச் சொல்லுதற்கும் நினைப்பதற்கும் படைப்பாதிகளா லியலாதென்பது "கலைமறை முகம்ம தென்னும் காரண மில்லையா கில்" என்றும், "கணித்தள வறுக்கவொண்ணுக் கடவுளே" என்றுங் கூறப்பட்டுள்ள செய்யுட்களானும் வேதாகமங்களானும் நன்குவிளங்

கும்; அதுபற்றியே **ஆதமும்** நாம **முகம்மதெ**ன் றகன்றார். ஆகவே **ஆமினு!** நீயு மப்பெயரையே இடுக என்பதாயிற்று.

இனி இச்செய்யுளி னாசிரியர் கருத்தறியாது மயங்கி வாளா வுரை கூறுவாரும் சிலர். அத்துணையரில் முதலுரையாரு மடங்கி அருக்கன் எனு முயர்திணைச்சொல் ஒப்பல என அஃறிணைப் பலவின்பாலாய் முடிதற் பொருந்தாதெனத் தவறுளம் பற்றி "இவ்வுலகத்தருக்கன் ஒப்பலனுமமுகம்மது" எனத் தமக்கியைந்தவாறு செய்யுளைத் திருத்தியும் இவ்வுலகத்து என்பதை நாமம் என்பதனோடுபடுத்தியும் அருக்கன் என்ப தோடு உம்மைகொடுத்தும் அதன் பிரகாசத்திற்குச் சூரி யனு நிகரலன் அப்பிள்ளைக் கிவ்வுலகத்துப்பெயர் முகம்மது என்றும் பொருள்கொள்வர்,

"இருதிணைச் சொற்கும் ஓரன்ன வுரிமையிற்
றிரிபு வேறுபடூஉம் எல்லாப் பெயரும்
நினையுங் காலை தத்த மரபின்
வினையி னல்லது பாறெறி விலவே"

என்றும்,

"இருதிணை பிரிந்த ஐம்பாற் கிளவிக்கும்
உரியவை யுரிய பெயர்வயி னானே"

என்றும் கூறியவிதிகளான் திணை வரையறுத்தற்கு வரு மீறான் றின்றாகலின் வழக்குப்பற்றி அருக்கன் என்பது அஃறிணைப் பெயரோயா மாகலானும், தேவர்கள் இப்பூமண்டலத்தைப் படைத்தற் கனேககாலமுதற்றொடங்கி என்றென்றும் **நபி** பெருமானாரவர்களை **முகம்மதெ**ன்ற நாமத்தானே துதித் திராநின்றார் என்பதூஉம் நம் மூலபிதாவாகிய **ஆதம் அலை ஹிஸ்ஸலா**மவர்கள் சுவர்க்கலோகத்தின்கண் கடவுளினது திருநாமத்தோடு முகம்மதெனும் நாமமிருக்கக்கண்டபோது ஆங்கு நடந்தன இவையென்பதூஉம் பிறவும் வேதாகமங்க ளால் நன்கு விளங்குமாகலின் வானலோகத்தினும் சுவர்க்க லோகத்தினும் **முகம்மதெ**ன்றபெயரே விளக்க மென்பது வெளியாயிற்று; ஆகலானும் முகம்மதென்றபெயரைக் கண் ணுற்றமாக்களில் **ஆதமே** முதன்மைபற்றி **நபி**பெருமானு

ரது திருநாம மிஃதென ஆமினுவுக் குரைத்தற்கும் அப் பெயரையே நீயு மிடுகவென்று வற்புறுத்தற்கும் ஆதமே தகுதியாகலின் கர்ப்பமுற்ற முதன்மாதத்தின் கனவிலே நாம **முகம்மது** என்று அவர்க்குரிய பிரபலமாகிய பெயரையே யறிவித்தார்களல்லது இவ்வுலகத்து நாம**முகம்மது** வேறுலகத்துநாமம் வேறென்பதன் றாகலானும் முதலுரை கூறுவன வெல்லாம் விதியோடும் வேதாகமங்களோடு முறையே முரணுமென மறுக்க:

இதுவேயுமன்றி வேறுலகத்து நாமம் வேறாகலின் இவ்வுலகத்து நாமம் முகம்மதென்றுகூறலே ஆசிரியர்க் குடன்பாடெனக் கொண்டவர் ஆங்கே மறந்து அப்பிள்ளையின்பெயர் முகம்மதென் றவர்கூறினமையா னப்பெயரையே நீயு மிடுக வென்றவா றாயிற்று என்றும் கூறுவர். இவற்றினுறும் பேத மிவையெனவறிந்திலராகலின் அவர்கூறுவனவெல்லா முடன்பாடென்பது தமக்குங் கருத்தன்றென்க:

வேதாகமாசிரியர்சிலர், பிரானவர்கட்குவானத்தின்பெயர் **அகும** தென்பர்; யாங் கூறியவாற்றானும் பிறவாற்றானும் அது போலி என மறுப்பர் பலர். பிறவருவனவெல்லாம் ஆண்டாண் டுய்த்துணர்க: உதரம் என்பது கடை குறைந்து நின்றது.

(26) கருப்பங் திங்களி ரண்டினி லாமினு கனவின்
மருப்பு குங்குழல் வல்லிநின் வயிற்றினின் மதலை
யருப்பும் வீறுடை யவர்பெயர் முகம்மதென் றதிக
விருப்ப மாயிது றீசுநன் னபிவிளம் பினரோ.

(ப-ரை.) கருப்பம் - பிரானவர்கள் ஜனிப்பாகிய, திங்களிரண்டினில் - இரண்டாமாதத்திலே, ஆமினு - ஆமினுவினது, கனவில் - நித்திரையில், நல்நபி - நபியெனு மதிட்டம்பெற்ற, இதுறீசு - **இதுறீசு** எனும் பெயரையுடையவர்கள், மரு - நறுநாற்றமே, புகும் - அடைகிடக்கும், குழல் - கூந்தலையுடைய, வல்லி - பூமிபோலும் ஆமினுவே! நின் - உனது, வயிற்றின் - கர்ப்பத்தின்கண்

ணிருக்கும், இன் - இனிய, மதலை - பிள்ளை யானவர், அருப்பும் - தோன்றும்படியான, வீறு டையவர் - பெருமையையுடையவர், பெயர் - அவருக்குப் பெயரானது, முகம்மதுஎன்று - முகம்மதாயிருக்குமென்று, அதிகவிருப்பமாய் - மிக்கஆனந்தமாக, விளம்பினர் - திருவாய்மலர்ந் தருளினர், எ-று.

(போ-ரை.) பிரானவர்கள் ஜனிப்பாகிய விரண்டாமாதத்தி லே ஆமினாவினது நித்திரையில் நபியெனு மதிட்டம்பெற்ற இதுறீது எனும் பெயரை யுடையவர்கள் நறுநாற்றமே யடைகிடக்குங் கூந்தலையுடைய பூமிபோலும் ஆமினாவே! உனதுகர்ப்பத்தின்கண் வீற்றிருக்கும் இனிய பிள்ளையானவர் தோன்றும்படியான பெருமை யையுடையவர் அவருக்குப் பெயரானது முக ம்மதாயிருக்கு மென்று மிக்க ஆனந்தமாகத் திருவாய்மலர்ந்தருளினர், என்பதாம்.

பூமி ஜீவாதிகளைத் தாங்கி நிலைத்தாற்போல ஆமினா ஜீவாதி ஜீவ பிரானவர்களைத் தாங்கி நிலைத்தலின் வல்லி என்பது குறிப்புவமவாகு பெயராய் அண்மை விளியினின்றது. வயிற்றின் என்புழி இருக்கும் என்ற ஒருசொல் வருவித் துரைக்கப்பட்டது. நபிபெருமானார் மெய், வாய், மூக்கு, கண், செவி, மனன் எனு மாறறிவிற்கும் இன்பியமையா வுவப்பினரொன்பான் இன்மதலை என்றார். மதலை என்றமையான் ஆண் என்பதுதோன்ற வீறுடையவர் என வாய்ப்பாட்டு வேறுபாட்டாற் கூறினார். "அந்நாற்சொல்லுந் தொகுக்குங்காலை" என்றமையான் அரும்பும் என்றது அருப்பும் என வலிந்துநின்றது. பெருமானார் இத் தன்மைத்தவரொன்பது தோன்ற அருப்பும்வீறுடையவர் என்றும் நபி மார்களும் ஏனைய மலக்குகள் முதலாயினாரும் பயன்பெறுநாள் வரு தற்குப் பெருமானாரிப்பூமண்டலத்தின்கண்வருதலே காரணமாகலின் அப்பொருடோன்ற "அதிகவிருப்பமாய் விளம்பினர்" என்றுங் கூறி னார். நபி என்பது எவற்றினும் யாண்டுஞ் சிறந்துள்ள பட்டமாகலின்

அப்பயன் பெறுத லரிதென்பான் நல் என்ற அடைகொடுத்து இதுநீசு நன்னபி என்ருர். இவ்வாறு வருவனவெல்லா மிங்ஙனமே கொள்க:

இனி நன்னபி என்புழி நல்ல நபி என்பர் முதலுளையார். அது பொருந்தாது. என்னே? நபி என்பதனுனே கெடுதிக ளனைத்தையும் விலக்கி நல்லவர் எனப் பொருட்படுமோக லின் நல்ல நபியென விதந்துங் கூறல் முறையன்மையானும் அருத்தாபத்தியான் கெட்ட நபியு முளர் எனும் பொருட் படுவதானும் என்க: இங்ஙனமாயின்,

"கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவ
னற்ருள் டொழாஅ ரெனின்."

என்புழி நல் தாள் என்றவதனுன் கெடுதாளுங் கடவுளுக்குளதோ எனுங் கடா சிகழுமெனின், அற்றன்று; கடவுள் தாள் நல்லதென்றவதனுன் மற்றவர் தாள் தொழத்தகும் அத் தனை தகுதியின்மை பற்றிக் கெடுதாளென்பதே கருத்தா கலின் அதுகடாவாகாதென்க: ஏகாரம் - ஈற்றசை.

(27) இக்கெ னுமொழி யாமினுக் கினிதுறத் திங்கள்
புக்கு மூன்றினி னூகுநன் னபிமனப் பொலிவாய்
மிக்க வுண்மையும் விளங்கிய வெற்றியு முடையோர்
தக்க பேர்முகம் மதுவெனச் சாற்றிவிட் டகன்ருர்.

(ப - ரை.) திங்கள் மூன்றினில்-கருப்பமாகிய மூன்ருமாத த்திலே, இக்கெனும் - கரும்புபோலும், மொழி - இனிய சொற்களையுடைய, ஆமினுக்கு - ஆமினு அவர்கட்கு, இன்புற - இனிமையுண்டாக, புக்கும் - சம்பவிக்குங்கனவில், நல்நபி - நபிஎனு மதிர்ஷ்டம்பெற்ற, நூகு - நூஹூ எனும் பெ யரையுடையவர்கள்வந்து, மிக்க - ஆமினு! உன் வயிற்றின்கண்ணுகிய பிள்ளை மிகுந்த, உண்மை யும் - சத்தியத்தையும், விளங்கிய - பிரகாச மாகிய, வெற்றியும் - ஜயப்பேற்றினையும், உடை யோர் - உரித்தாய்க்கொண்டவர், தக்க - தகு

திியையுடைய, பேர் - அவர்நாமம், முகம்மது என - மூகம்மதாமென்று, மனம்பொலிவாய் - அன்புநிறைந்த மனத்தினராய், சாற்றிவிட்டு - திருவாய்மலர்ந்தருளி, அகன்றூர் - போயினூர்கள், எ-று.

(போ-ரை.) கருப்பமாகிய மூன்றுமாதத்திலே கரும்பு போலு மினிய சொற்களையுடைய ஆமினூ அவர்கட்கு இனிமையுண்டாகச் சம்பவிக்குங் கனவில் நபிஎனு மதிர்ஷ்டம்பெற்ற நூஹெனும் பெயரையுடையவர்கள் வந்து ஆமினூ! உன்வயிற்றின்கண்ணுகிய பிள்ளை மிகுந்த சத்தியத்தையும் பிரகாசமாகிய ஜயப்பேற்றினையுமுரித்தாய்க் கொண்டவர் தகுதியையுடைய அவர்நாமம் மூகம்மதாமென்று அன்பு நிறைந்த மனத்தினராய்த் திருவாய்மலர்ந்தளிப் போயினூர்கள் என்பதாம்.

இக்கெனுமொழி என்புழி இக்கென்னு முவமத்திற்கு மொழியே உவமேயமாகலின் மொழி எனுஞ் சொல்லின்பெயர் பொருளுக்காய் அப்பொருளால் பயக்குஞ் சுவைக்கு மாகலின் இருமடி ஆகுபெயர். ஆகவே கருப்பஞ்சாற்றிற்குச் சொல்லின் பொருளும் சாற்று னுகரப்படு நுகர்ச்சிக்குப் பொருளா னுகரப்படும் நுகர்ச்சியும் உவமேயமாய்க் கொள்க. ஈண்டு நுகர்ச்சிஎன்ப தினிமையை. இனிமை வாயா னுகரற்பாலதல்லது செவியா னுகரற் பயவாதெனின் மெய், வாய், மூக்கு, கண், செவி, மனம் என்பனவற்றுல் முறையே தனித்தனி நுகரப்படு நுகர்ச்சியை இனிமையென்றதல்லது வாயா னுகரப்படு நுகர்ச்சியொன்றையன்று; இக்கருத்தேபற்றி வாயானுகரற்பாலதான கரும்பைச் செவியா னுகரற்பாலதான மொழியோ டுவமானித்தார். அல்லதூஉம்,

“அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்”

என்புழி நெடுங்கால நின்று துய்க்கப்படுதலால் இன்பமு மீனுமென்ரூர். ஆகவே துய்த்தல் மனத்திற்கும் வருதல்காண்க,

"நனவினுற் கண்டதூஉ மாங்கே கனவுந் தான்
கண்ட பொழுதே யினிது"

என்பதனுனு மறிக:

பிரானவர்களே கடவுளுக்கியற்றற்பாலதான கிரியாம்சைகளேச் சேடஞ் சிந்தாது புரியும் மகாத்துவ முடையானென்பது தோன்ற "மிக்க உண்மையு" மென்றும், இக்கிரியாம்சைப் பயனுகிய கடவுளேச் சாருத லவர்க்கே யுரித்தென்பான் "வெற்றியும்" என்றும் நாமங்களில் தகுதியையுடையது முகம்மதென்பதேயன்றிப் பிறவலவெனு முண்மைபான் "றக்கபேர்" என்றுங் கூறினுர். மனப்பொலிவால் என்பழி அதிக விருப்பமாய் என்றற் குரைத்தாங் குரைக்க: அகன்ரூர் என்றமையான் வந்து என்றது தானே பெறப்பட்டது.

(28) திங்க ணுன்கினி லாமினு
கனவினிற் றெளிவா
யிங்கி தத்திபு ருகிநன்
னபியியம் பினராற்
சங்கை யாய்மிகு வரிசையும்
பெருங்கொலுத் தனேயும்
பொங்கு வாழ்வினர் பெயர்முகம்
மதுவெனப் போந்தே.

(ப - ரை.) திங்கள்நான்கினில் - கர்ப்பமாகிய நான்காமாதத்திலே, ஆமினு - ஆமினுவினது, கனவில் - கனவிலே, நல்நபி - நபியெனு மதிர்ஷ்டத்தையும், இங்கிதத்து - அடையாளத்தினேயும், இபுருகிம் - இபுறஹிமென்ற பெயரினேயு முடையவர்கள், சங்கையாய் - மிக்க மதிப்போடு, போந்து - புகுந்து, வரிசையும்-உனது கர்ப்பத்தின் கண்ணமைந் திருப்பவர் முறைமைகளேயும், பெரும் - பெருமைதங்கிய, கொலுத்தனேயும் -

உல்காசவீற்றிருப்பினையும், பொங்கும் - தணி விலாத, வாழ்வினர் - வாழ்க்கையினையுமுடைய வர், பெயர் - அவரினமம், முகம்மதுஎன - முகம்மதாமென்று, தெளிவாய் - வெள்ளிதாய், இயம்பினர் - திருவாய்மலர்ந்தளினர்கள், எ-று.

(போ-ரை.) கர்ப்பமாகிய நான்கா மாதத்திலே ஆமினவி னது கனவிலே நபியெனு மதிர்ஷ்டத்தையும் அடையாளத்தினையும் இபுறஹி மென்ற பெ யரினையு முடையவர்கள் மிக்க மதிப்போடு புகுந்து உனது கர்ப்பத்தின்கண் ணமைந் திருப்பவர் முறைமைகளையும் பெருமை தங்கிய வுல்காச வீற்றிருப்பினையும் தணிவிலாத வாழ்க் கையினையு முடையவர். அவரினம முகம்மதா மென்று வெள்ளிதாய்த் திருவாய் மலர்ந்தருளி னர்கள் என்பதாம்.

நமது மார்க்க முதலடையாளமாய் நடைபெற்றுவரும் சுன்னத் தென்கிற விருத்தசேதனம் செய்யப்பட வேண்டுமென இபுற ஹிம் நபிக்கு நிகழுந் தொண்ணூற்றென்பா ணுண்டின் கடவுள் ஆக் யாபித்து அவ்வாறு முதன்மையாய் அவ் வடையாளந் தரிக்கப்பெற்ரு ரென்பது தோன்ற "இங்கிதத்திபுருகிம்" என்ருர். ஈண்டு இங் கிதமென்பது விருத்தசேதனத்தை யுணர்த்திநின்றது. அவ்வாண்டுப் பிறழ்ந்து வருதலுமுள. உய்த்துணர்க:

வரையாத முறைமைகளைத் தம்மிற்பொருத்தி விளங்கிய மகி மையினது வேதங்களை யமைத்து ஒப்பறவரும் புறுகான் எனும் வே தத்தினை யுடையானென்பது தோன்ற "மிகுவரிசையு" மென்றும் அழியாது விளங்கி யெல்லாக் காரியங்களினுஞ் சிறந்துள்ள இறைவ னது சந்நிதியிற் றுய்க்கு மானந்தப் பேறுடையாரிற் சிறந்து வீற்றி ருப்பானென்பதூஉம் அவ் வீற்றிருப்பு யாண்டும் நிலைத்துள்ள இறைவ னது சந்நிதிக் குரியதென்பதூஉந் தோன்ற "பெருங் கொலுத்தனை யும்" என்றும், எல்லா வுலகத்தினும் பிரானவர்களின் துதியாகிய பெரும்பொருள் வளர்ந்தே வருமென்பது தோன்ற "பொங்கு வாழ்

வின்'' றென்றுங் கூறினர். இங்கிதத்து என்புழி, அத்து இரண்டாவதன் கண்வந்த சாரியை. இயம்பினரால் என்பதில் ஆல் அசைநிலை. கனவினின் என்புழி, வந்த இன்னுமது ஈற் றேகாரம் ஈற்றசை. உம்மைகள் விகாரவகையாற் றொக்கன.

இங்கிதத்து என்புழி இனிமை என்பர் முதலுரையார், அது பொருள் வியப்பின்மைபற்றிப் பயனில்கூற்று மென்க: இதூஉம் கொலுவி னளவு யுகமுடியும் வரையும் நீண்டு வருகையான் கொலுத்தனையும் பொங்கும் என்று ராசிரியரென்பர். பெருமானரது கொலு யுகமுடிந்த பிற்றையுமிருத்தலின் அவ்வுரை போலியாமென மறுக்க.

(29) அம்பொற் கும்பத்தி னருவிநீர் மஞ்சன மாடிச்
செம்பொற் பட்டுடுத் தெறிகதி ரணியிழை திருத்திப்
பம்பு மேகலை தரித்துமென் கரவளை பரித்துக்
கம்பலைச் சிலம் பணிந்தனர் பதங்கவின் பெறவே.

(ப - ரை.) ஆமினு - மீனுஆ அவர்கள், அம் - அழகிய, பொன் - பொன்னுனியன்ற, கும்பத்தின் - குடத்தின் கண்ணுள்ள, அருவிநீர் - மலைவீழ் ஜலத்தினல், மஞ்சனமாடி - ஸ்நானஞ்செய்து, செம் - செம்மையாகிய, பொன் - பொன்னூல் கலந்த, பட்டு - பட்டாடையை, உடுத்து - அணிந்து, கதிர் - பிரகாசத்தை, எறி - வீசுகின்ற, அணி - அழகிய, இழை - ஆபரணுதிகளையும், பம்பும் - பரவும்படியான, மேகலை - மேகலாபரணங்களையும், திருத்தி - திருத்தஞ்செய்து, தரித்து - புனைந்து, மென் - மென்மையாகிய, கரம் - இரண்டு கைகளிலும், வளைபரித்து - வளையல்கள் தரிக்கப்பெற்று, பதம் - பாதார விந்தங்கள், கவின்பெற - அழகெறிப்ப, கம்பலை - சப்தத்தையுடைய, சிலம்பு - சிலம்புகளை, அணிந்தனர் - புனைந்து, எ-று.

(போ-ா.) ஆமினு அவர்க ளழகிய பொன்னுனியன்றகுடத் தின்கண்ணுள்ள மலைவீழ் ஜலத்தினுல் ஸ்நா னஞ்செய்து செம்மையாகிய பொன்னூற் கல ந்த பட்டாடையை யணிந்து பிரகாசத்தை வீசுகின்ற வழகிய ஆபரணுதிகளையும் பரவும் படியான மேகலா பரணங்களையுந் திருத்தஞ் செய்து புனைந்து மென்மையாகிய விரண்டு கைகளிலும் வளையல்கள் தரிக்கப்பெற்றுப் பா தாரவிந்தங்களழகெறிப்பச் சப்தத்தையுடைய சிலம்புகளைப் புனைந்து என்பதாம்.

இச்செய்யுள் எச்சப் பொருளதாய் "நெறித்தவார் குழலிறுக்கி" என்ற செய்யுளோ டிணைந்து எழுந்தார் என முடிதலின் எழுவாயா கிய ஆமினுவை ஈண்டுக் கூறினும்; பொற்பட்டு என்றமையான் பொன்னூல் கலந்த பட்டென்ப தாயிற்று; ஈற்றேகார மீற்றசை.

(30) நெறித்த வார்குழ லிறுக்கிமென் மலர்பல நிறைத்துக்
குறித்த வேலிணைக் கண்களி லஞ்சனங் கோட்டிச்
செறித்த மான்மதஞ் சந்தனக் கலவையுந் திமிர்ந்தே
யெறித்த நன்கதிர் விளக்கென வாமினு வெழுந்தார்.

(ப-ை.) நெறித்த - நெறிதலாகிய, வார் - நீண்ட, குழல், கூந்தலை, இறுக்கி - கொண்டையாக விறுகச் செய்து, மென் - மென்மையாகிய, மலர் - புட் பங்களை, பலநிறைத்து-பலவாகச்சுமத்தி, வேல், வேல்போலும், இணைகண் - இருகண்களிலும், அஞ்சனம் - மையினை, கோட்டி - எழுதி, மான் மதம் - கஸ்தூரியையும், சந்தனம் - சந்தனத் தையும், செறித்த - சேர்க்கப்பட்ட, கலவை யும் - பரிமளாதிகளையும், திமிர்ந்து - பூசிக் கொண்டு, குறித்த - மேலேகுறிக்கப்பட்ட, நன்- நன்மையாகிய, கதிர் - பிரகாசத்தை, எறித்த -

ஜொலிக்காநின்ற, விளக்கென - தீபமே என்ன, எழுந்தார் - எழும்பினர், எ-று.

(போ-ரை.) நெறிதலாகிய நீண்ட கூந்தலைக் கொண்டையாக விறுகச்செய்து மென்மையாகிய புட்பங்களைப் பலவாகச் சுமத்தி வேல்போலு மிருகண்களினு மையினையெழுதிக் கஸ்தூரியையுஞ் சந்தனத்தையுஞ் சேர்க்கப்பட்ட பரிமளாதிகளையும் பூசிக்கொண்டு மேலே குறிக்கப்பட்ட நன்மையாகிய பிரகாசத்தைச் சொலிக்காநின்ற தீபமே என்ன வெழும்பினர் என்பதாம்.

வார்குழலாகலின் இறுக்கி என்றமையான் கொண்டையாக வென்பது பெறப்பட்டது. வேல்கண்என்ப துவமத்தொகை. குறித்த என்புழி மேலே என்றது செய்யுள் விகாரத்தாற் சிதைந்தவதனல் வருவித் துரைக்கப்பட்டது. ஈண்டுக் குறித்த என்னும் நினைப்புறுத்துஞ் சொல் **அப்துல்லா**வினது நெற்றியின்கண் வீற்றிருந்த ஒளியென்பதை யுணர்த்தி நின்றது. மான்மதம், சந்தனம் என்புழி உருபும் உம்மையு மொருங்கே தொக்கன. திமிர்ந்தே எனு மேகாரம் இசைநிறை. **அப்துல்லா**வினது நெற்றியின்கண் பிரகாசித்திருந்த பேரொளி கருப்பத்தினமைந்தபோதே **ஆமினா**வினது திருமேனி பிரகாசவடிவாய் விளங்கிற் றென்பான் "நன்கதிரொரித்த விளக்கு" என்றார்.

ஏது நிமித்தம் **ஆமினா** வெழுந்தாரோ? வெனின் தாம் ஓரரிய குழந்தையைக் கர்ப்பமாகினதாய் முறையே காணுங் கனவா னன்குணர்ந்து மகிழ்வுற்று அக்கரு நிலைப்பான் வேண்டித் தெய்வந் தொழுவாமெனு மாநந்தக் களிப்பு நான்காமாதத்தின் றினங்களிற் சில போக்கி நிகழ்ந்தமையா னெழுந்தா ரென்க:

ஆமினா அவர்கட்குத் தெய்வந் தொழுவாமெனு மாநந்தக் களிப்பு நான்காமாதத்தின்கண் ணிகழ்ந்தவா றென்னையோ? வெனின் **நபி** பெருமானர் கருவாய்த் தரித்த முதல் நாற்பதுநா ளுதரத்தோடு கலவாது மணியுருவா யிலங்கிப் பின்னர்க் குருதியிற் றோய்ந்து நாற்பதுநா ளிலங்கி மூன்றும் நாற்பதில் வல்ல சாட்சாதி கடவுளினது

தூய சந்நிதியில் பரவுந் தீபமாகிய **றூஹுல்குத்ஸ்** என்கிற ஆவி குடியிருத்தற்குத் தகுதியும் சொல்லுதற் கருமையும் கடவுளே வியந்து இஃதே படைத்தற் கமையா வடிவெனக் கிளத்தற் குரிமையுமாகிய **மூகம்ம**தென்ற வடிவமாய்க் கிடந்தமையானும் நான்காம் நாற்பதின் றொடக்கத்தில் குறித்த ஆவி யவ்வடிவகத்துக் குடிபடுத்தப்படுமாக லானும் உருவ முடிவிற்குப்பின்னும் ஆவிகுடிபடுதற்கு முன்னுமான நலநிலைத்த நடுநிலையாகிய அம்மூன்றாம்நாற்பதில் மூலபிதாவாகிய **ஆத**மிடத்து நிகழ்ந்தனவெல்லாம் நபிபெருமானு ரவர்களிடத்தும் நிழ்ந்தனவெனுங் குறிப்புத் தோன்ற தெய்வத்தால் தொழப்படுவான் வேண்டி தெய்வந் தொழல்வேண்டுமென்னும் ஆநந்தக்களிப்பு அவர் கட் கந் நான்காமாதத்தின்கண் ணிகழ்ந்தவாறென்க. இனி **ஆமினு** தெய்வத்தால் தொழப்பட்டாளொன்ற வதனுன் யாவராலுந் தொழப் பட்டா ளென்பதாயிற்று. ஈண்டுத் தெய்வமென்பது அக்காலத்தவர்கள் பூசித்துவந்த விக்கிரகங்களை. அது பிறவருஞ் செய்யுட்களானு மறிக: இங்ஙனம் வேதநூலோதார் பயன்பயவார், அதுபற்றி எம்மை யிக ழற்க.

இக்கருத்தறியாது முதலுனையார் எழுந்தார் என்புழி ஒருகாரிய நிமித்த மெழுந்தாளெனப் பயனில் கூற்றாய் நழுகவிடுவர்; அஃதாஉ மோரரிய வித்வத்துவமோ? பிறவரும் வித்தியாசங்களையு மவருணயா னேயறிக.

(31) இனத்து ளாளொனுஞ் செழுமலர்க் கொடிநடுவிடையே
கனத்த மாமணிக் கொம்பென நடந்துககு பாவின்
மனத்தி ருக்கற வலஞ்செய்து வாயிலில் வந்து
நினைத்திடும்பொருடருகெனப்போற்றினர்நிறைந்தே.

(ப - ரை.) இனத்துளாளொனும் - அவ்வாறெழுந்த **ஆமினு** அவர்கள் தமது குடும்பத்தாளொன்று சொல்லப் படும், செழும் - செழிய, மலர்கொடி - பூங்கொ டிபோலும் பெண்களினது, நடுஇடை - நடுவ ணக, கனத்த - தகுதிபூண்ட, மாமணி - மா ணிக்கத்தாலாய, கொம்பென - கொப்பேபோ ன்று, நடந்து-மெல்லடிபரவிநடத்தலைச்செய்து,

மனம் - உள்ளத்தின்கண்ணதான, திருக்கு-குற்றங்கள், அற - நீங்கும்படியாக, கருபாவின் - பைத்துல்லா வென்கிற சந்நிதியை, வலஞ்செய்து - தவ்வாபென்கிற பிரதக்கணஞ் செய்து, வாயிலில்வந்து - அச்சந்நிதி வாசலருகே வந்து நின்று, நினைத்திடும் - யாமெண்ணிய, பொருள்- எண்ணத்தின்பயனை, நிறைந்து-பூரணப்படுத்தி, தருக என - கொடுப்பாயாக வென்று, போற்றினர் - தெய்வமென்று சார்த்திவைத்துள்ள கற்களைநோக்கி வணங்கினர்கள், எ-று.

(போ-ளை.) அவ்வாறெழுந்த ஆமினா அவர்கள் தமது குடும்பத்தாரொன்று சொல்லப்படும் செழிய பூங்கொடிபோலும் பெண்களினது நடுவணைகத் தகுதிபூண்ட மாணிக்கத்தாலாய கொப்பே போன்று மெல்லடிபரவி நடத்தலைச்செய்து உள்ளத்தின் கண்ணதான குற்றங்கள் நீங்கும் படியாக பைத்துல்லாவென்கிற சந்நிதியைத் தவ்வாபென்கிற பிரதக்கணஞ்செய்து அச் சந்நிதிவாச லருகேவந்துநின்று யாமெண்ணிய எண்ணத்தின் பயனைப் பூரணப்படுத்திக் கொடுப்பாயாக வென்று தெய்வமென்று சார்த்திவைத்துள்ள கற்களைநோக்கி வணங்கினர்கள், என்பதாம்.

இனத்துளாரொன்பது அப்துல் முத்தலிபின் வீட்டாரொன்றையேபற்றி என்றறிக: மலர்கொடி என்பதுவமவாகுபெயர். கொம்பு என்பதில் தேற்றேகாரம் விகாரவகையாற் றொக்கது. குறைசியின் குடும்பத்தைப் பெருமையான்மிக்க ஆமினாவே உயர்த்தினரொன்பான் அக்குடும்பத்தை “மலர்க்கொடி” யென்றும்; ஆமினாவைக் “கொம்பெ” ன்றுங் கூறினர். கொம்பு கொடிபடர்தற் கேதுவாயவஸ்து. கஃபாவைப் பிரதக்கணஞ் செய்தல் உள்ள நோய்நீங்க மருந்தென்பான்

"மனத்திருக்கறவலஞ்செய்து" என்ருர். நடுவிடையே என்புழி இடை என்பது ஏழாவதன்கண்வந்த சாரியை. ஏகாரம் இசைநிறை. **கதுபா**வின் என்புழி இன் இரண்டாவதன்கண் வந்தது. தெய்வமென்று சார்த்திவைத்துள்ள கற்களை என்பது அவாய்நிலையான் வருவித்துரைக்கப்பட்டது. ஈற்றேகார மீற்றசை.

இனி போற்றின ரென்புழிப் பிரதக்கணஞ்செய்த **கதுபா**வையே வணங்கினர் எனப் பொருள் கூறுவாருமுளர். அக்காலத்தார் விக்கிரகங்களையே தெய்வமென்று ஆராதனை செய்துவந்தா ரென்பது வெளி; ஆகலின் **ஆமினு** அங்ஙனஞ் செய்திலர் **கதுபா**வையே வணங்கினர் என்பது பொருந்தாது அதுபறி அவர்கூற்றுப் பயனில் கூற்ருமென்க: **கதுபா** பிரதக்கணஞ் செய்யப்படுதல் இன்னது இத்தன்மைத்தது என்பனவெல்லாம் வேதநூலாகமங்களா லுய்த்துணர்க:

(32) வண்டு வாழ்குழன் மடந்தையர் திரண்டுவாழ்த் தெடு
கண்டு மென்கொடி யாமினுத் தாமரைக் காலின்[ப்பக்
முண்ட கச்செழு மலர்சொரி தலைமுகங் கவிழத்
தெண்ட னிட்டது புத்தென வுறைந்ததே வதையே.

(ப - ரை.) வண்டு - தேனீக்கள், வாழ் - குடியிராநின்ற, குழல் - கூந்தலையுடைய, மடந்தையர் - **ஆமினு** முதலிய பெண்கள், திரண்டு - ஒன்றுசேர்ந்து, வாழ்த்தெடுப்ப - வணங்க, தேவதையென - தெய்வம் என்று, உறைந்த - **கதுபா**விற்றரிக்கப் பட்டுள்ள, புத்து-நரகமானது, கண்டு-பார்த்து, முண்டகம் - தாமரைமலர்களால், சொரி - பெய் யாநிற்கும், தலை - சிரமும், முகம் - வதனமும், கவிழ - குப்புற, மென் - மென்மையாகிய, கொடி - கொடிபோலும், ஆமினு - **ஆமினு** அவர்களின், தாமரை - தாமரைப்பூப்போன்ற, காலில் - பாதத்தின்கண், தெண்டனிட்டது - விழுந்து வணங்கிற்று, எ-று.

(போ-ரை.) தேனீக்கள் குடியிராநின்ற கூந்தலை யுடைய **ஆமினு** முதலிய பெண்கள் ஒன்று சேர்ந்து

வணங்கத் தெய்வமென்று கதுபாவிற் றரிக்கப் பட்டுள்ள நரகமானது பார்த்துத் தாமரைமலர் களாற் பெய்யாநிற்கும் சிரமும் வதனமுங் குப்புற மென்மையாகியகொடிபோலும் ஆமினு அவர்களின் செந்தாமரைப் பூப்போன்ற பாதத் தின்கண் விழுந்து வணங்கிற் றென்பதாம்.

தாமரை, முண்டகம் என்பன ஆகுபெயர்கள். மென்கொடி ஆமினு என்ப துவமைத்தொகை. தாமரைக்காலென்பதூஉமது. வாழ், சொரி என்பன வினைத்தொகை. கற்களை வணங்கு நீர்மையெல்லாம் சாரு மிடம் நரகமாகலின் அக் கற்களைப் "புத்து" என்றார். காலைத் தெண்ட னிட்டதென்னுது காலில் தெண்டனிட்ட தென்றமையான் பிரானவர் களையே ஆமினுவினது காலைக் காரணமாய்க் கொண்டு தெண்ட னிட்ட தென்பது கருத்து. "நெறித்தவார்குழலிறுக்கி மென்மலர்பல நிறைத்து" என்ற செய்யுளானும் விளக்கினும்.

இனி காலைத்தெண்டனிட்டதென்னுது காலில் தெண்டனிட்ட தென்றமையான் நபிபெருமானுரைத் தெண்டனிட்டதென் பதே முதலுரையார்க்குங் கருத்தாயினும் அவர் உடனே மறந்து "ஆமினு அவர்கள் அங்குறைந்த கற்களை வணங் கிலர் மெய்க்கடவுளையே வணங்கினர்" என்றும் "அங் குறைந்த விக்கிரகங்கள் அவ் வணக்கத்தைத் தமக்கென் றெண்ணி ஆமினுவினது காலின்கண் வணங்கிற்று" என் றும் மயங்கிக் கூறுவர். என்னையோ மயக்கம்? எனின், அக்காலத்தவரெல்லாம் விக்கிரகாராதனையரென்பது வெளி. ஆகவே ஆமினு எங்ஙன மெய்க்கடவுளை வணங்குவர்? விக் கிரகங்களையே வணங்கினர்; அதுபற்றியே பொய்க்கடவு ளாகிய என்னை மெய்க்கடவுளாகிய பெருமானவர்கள் உன் னிடத் தவதாரமாயபிற்றை நீ வணங்கற்க: யான் மெய்க் கடவுளாகிய வுன்மகனை உன் பதத்தின்கண் வணங்குவன் என்னும் பொருடோன்ற அத்தேவதை "முகந்தலைகவிழத் தெண்டனிட்டது" என்பதே ஆசிரியர்க் குடன்பாடாகலா னும் ஆமினுவினது வணக்கத்தைப் புத்துகள் தமக்கெனக் கருதி ஆமினுவினது பதத்தில் தெண்டனிட்டதெனின்

ஆமினுவினது வணக்கத்திற்குப் பதிலாய் வணங்கிற்றெனும் பொருட்டாய் அவ்வாமினுவையே சாருமல்லது நபிபெருமானுரைச் சாராதாகலானும் அவர்கூற்று மயக்கமென்க:

அல்லதூஉம் அடுத்த செய்யுளில் புத்தினது அஞ்சலிப்பினுல் ஆமினு பயந்ததாகக் கூறப்பட்டமையின் அதையே வணங்கினுரென்பதுந் தோன்று மதனுனும் ஆமினு மெய்க்கடவுளை வணங்கிலரென்பது அறிக: புத்தின திழிவு இனைத்தென்பது தோன்ற "தெண்டனிட்டது" என ஒருமையாற் கூறினுர். தலைமுகம் உம்மைத்தொகை. ஈற்றேகார மீற்றசை.

(33) அஞ்ச லித்தது புத்தென மனத்ததி சயித்து
மஞ்சு வார்குழ லாமினு பயந்துமெய் வருந்திக்
கஞ்ச மின்னனுர் கணத்துடன் வாயலைக் கடந்தே
யின்சொ னன்குலக் கிளியென மனையில்வந்திருந்தார்.

(ப-ை.) புத்து - தெய்வம், அஞ்சலித்தது - காலின்கண் கும்பிட்டதே, என - என்றுசொல்லி, மஞ்சு- வாசனையையும், வார் - நீட்சியையு முடைய, குழல் - கூந்தலோடுங் கூடிய, ஆமினு - ஆமினு அவர்கள், மனது - உள்ளத்தில், அதிசயித்து - வியப்பு நிகழ்ந்து, பயந்து - அவ்வியப்பா னச்சமுற்று, மெய்வருந்தி - தேகமயர்ந்து, கஞ்சம்- தாமரைப் பொகுட்டின்கண் வீற்றிராநிற்கும், மின் அனுர்-சீதேவியையொத்த பெண்களினது, கணத்துடன் - கூட்டத்துடனே, வாயலை - அக் கருபாவினது வாசலை, கடந்து - விடுத்து, இன்- இனிமையாகிய, சொல் - சொற்களையுடைய, குலம் கிளி என - குலத்திற்கு ஒருகிளியே போன்று, மனையில் வந்திருந்தார் - வீட்டிற்கு வந்துற்ருர், எ - று.

(போ-ை.) தெய்வம் காலின்கண் கும்பிட்டதே என்று சொல்லி வாசனையையும் நீட்சியையுமுடைய

கூந்தலோடுங் கூடிய ஆமினு அவர்கள் உள்ளத்தில் வியப்பு நிகழ்ந்து அவ்வியப்பா னச்சமுற்று தேகமயர்ந்து தாமமைப் பொகுட்டின் கண் வீற்றிராநிற்கும் சீதேவியை யொத்த பெண்களினது கூட்டத்துடனே அக்கதுபாவினது வாசலை விடுத்து இனிமையாகிய சொற்களையுடைய குலத்திற் கொருகிளியேபோன்று வீட்டிற்கு வந்துற்ருர் என்பதாம்.

“அஞ்சலித்தது புத்து” என்பது ஆமினுவினது கொள்கையாகலின் புத்து என்பது விக்கிரகத்துக்காய் வணங்கப்படுதலின் தெய்வத்துக்கு மாதலின் இருமடி ஆகுபெய ரொன்க:

இனி புத்து என்புழி விக்கிரகம் எனப் பொருள் கூறுவர் முதலுரையார். அங்ஙனம் விக்கிரகம் எனுங் கருத்து ஆமினுவுக்குளதேல் அது அஞ்சலித்தது எனும் வியப்பும் பயமும் மெய்யயர்வுந் தோன்ருது. ஆகவே தெய்வ மென்பதே அவர்க்குக் கருத்தாதல்பற்றி மன ததிசயித்துப் பயந்து மெய்வருந்தி என்ருர். ஆகலின் அவர்கூற்றுப் போலியா மென்க :

இதூஉம் அது தெய்வமாகலின் அஞ்சலித்ததென்னும் வியப்பே திடுக்கத்திற் கேதுவாய் அத் திடுக்கத்தின் மலிவே மெய்யின் அயர்தலுக்குமாம். ஆதலின் அங்குள்ள விக்கிரகமே தெய்வமென்பது ஆமினுவுக்குக் கருத்தென்றுங் கூறுக :

மஞ்சுவார்குழல் என்புழி மேகம்போலும் நீண்ட குழல் எனப் பொருள் கூறுவாரு முளர். அதுவே முதலுரையார்க்கு முடன்பாடு.

கடந்தே என்பதில் ஏகாரம் இசைநிறை. குலக்கிளி என்புழிக் கிளிக்குலத்தி லொப்பற்ற கிளியென்பது கருத்து. மஞ்சுவார் என்புழி உருபும் உம்மையும் ஒருங்கே தொக்கன.

(34) தெரியுந் திங்களைந் தினிலிசு மாயில்செப் பினரா
லுரிய மென்மயி லேந்தின துதரத்தி லுறைந்தோர்

தரிய லர்க்கிடி யாயடுத் தவர்க்கொரு தருவாய்
வரிசை யுற்றவர் பெயர்முகம் மதுவென வகுத்தே.

(ப - ரை) திங்களீந்தினில் - கருப்பமாகிய வைந்தாமாதத்திலே, இசுமாயில் - நபியென்ற வதிர்ஷ்டம் பெற்றவர்களில் இசுமாயிலென்பவர்கள் ஆமினு அவர்களின் கனவிலேபோந்து, மென் - மென்மையான திருமேனியையுடைய, மயிலே - மயிலாகிய ஆமினுவே, நினது-உன்னுடைய, உரிய - தகுதியான, உதரத்தில் - வயிற்றின்கண், உறைந்தோர் - பிள்ளையாகத் தரிக்கப்பட்டவர், தரியலர்க்கு - பகைவர்கட்கு, இடியாய் - வானேருகியும், அடுத்தவர்க்கு - நெருங்கியவர்கட்கு, ஒரு - ஒப்பற்ற, தருவாய் - கற்பகமாகியும், தெரியும் - மறைவிலாது தோற்றும், வரிசை - முறைமையாகியும், உற்றவர் - வருபவர், பெயர்-அவர் பேரானது, முகம்மது என - மூகம்மதா மென்றும், வகுத்து-விளக்கமாய், செப்பினர்-சொன்னுர்கள், எ-று.

(போ-ரை.) கருப்பமாகிய வைந்தாமாதத்திலே நபியென்ற வதிர்ஷ்டம் பெற்றவர்களில் இசுமாயி லென்பவர்கள் ஆமினு அவர்களின் கனவிலேபோந்து மென்மையான திருமேனியையுடைய மயிலாகிய ஆமினுவே உன்னுடைய தகுதியான வயிற்றின்கண் பிள்ளையாகத் தரிக்கப்பட்டவர் பகைவர்கட்கு வானேருகியும் நெருங்கியவர்கட்கு ஒப்பற்ற கற்பகமாகியும் மறைவிலாது தோற்றும் முறைமையாகியும் வருபவர் அவர் பேரானது மூகம்மதாமென்றும் விளக்கமாய்ச் சொன்னுர்கள் என்பதாம்.

இசுமாயிலென்புழி இத்தன்மைத்தவனென்பது தோன்ற நபி என்ற வதிர்ஷ்டம்பெற்றவர்என்ற சொற்கள்பெறப்பட்டன. ஆமினு வினது கனவிலே போந்து என்பது ஏற்புழி கோடலால் வருவித் துரைக்கப்பட்டது. ஆல் அசைநிலை. அவாய் நிலையால்வந்த தேகம் என்பதனை ஆமினுவுடன் கூட்டுக: மயிலே என்பதன் ஏகாரம் விளி யின்கண் வந்தது. மயில் ஆகுபெயர். உரிய என்பது ஆமினுவினது வயிறு இத்தன்மைத்தனவாஞ் சிறப்பினதென்னும் பொருள்குறித்து நின்றது.

இனி உரிய மென்மயிலே எனச் செய்யுட் கிடந்தவாறே கொண்டு "தகுதியாகிய மெல்லிய மயிலாகிய ஆமினு" என முடிப் பர் முதலுரையார். அது பொருள்வியப்பின்றாகலின் போ லியா மென்க:

உறைந்தோர் எழுவாய்த் தொடர். தரியலர் என்பது ஈண்டு இபுலீசையும் அவனது கூட்டத்தாரையும் உணர்த்தி நின்றது. இடி, தரு என்பன ஆகுபெயர்கள். அடுத்தவர் என்பது ஈண்டு அவரது உண்மையை மனத்திருக்கற மதித்து ஒழுகுவாரைக்குறித்து நின்றது. என்னையோ? வெனின் நபிபெருமானாரவர்களையும் அவர்களால் கற்பிக் கப்பட்டன வெல்லாவற்றையும் மனப்பூர்வமாய் எடுத்துவழாது ஒழுகு வார்க்கு நற்பயன் பயவுமல்லது ஜடசம்பந்தம்பற்றி யாதும் பயவா தென்பது வெளி. அது வாக்கொன்றும் மனமொன்றுமாயமுனபிக்கு (அப்துல்லா இபுனுஉபை) உபையுடைய மகன் அப்துல்லா என்பவ னும் அவன்போல்வாரும் நபிபெருமானு ரவர்களோடு நெருங்குதலாய் ஜடசம்பந்தஞ் செய்தும் மனசம்பந்த மின்மையால் அவர்க ளுறுமிடம் நரகமாய் முடிந்த தாகலானும் அபீத்தாலிபு என்பவர்கள் நபிபெரு மானு ரவர்களை மகவென்ற முறையான் மனத்தானுஞ் சடத்தானு மெவ்வளவோ நெருங்கி யுயிரென நின்றும் பெருமான் கற்பித்தனவற் றையொழுகாமையான் யாதும் பயன் பயின்றில ராகலானும் எம்போல் வார் பிரானவர்களோடு சாருதலாகிய ஜடசம்பந்த மியாது மிலராயி னும் மன சம்பந்தஞ் செய்தலானும் அவர்கள் கற்பித்தனவெல்லாம் ஒழுகி நடத்தலானும் பயன் பயவாநின்றூர். ஆகலானும் ஆசிரியர்க் கதுவே கருத்தென்றறிக: இங்ஙனம் விரிக்கிற் பல்கு மாமலின் நிறுத் தினும். உய்த்துணர்க:

இடியாய், தருவாய், என்புழி உம்மைகள் விகாரவகையாற் றொக்கன. வரிசை என்புழியூஉமது. ஆண்டு ஆய் என்ற ஒருசொல் வருவித்துரைக்கப்பட்டது. பெருமானாரவர்களின் அருட் குவமையின்மையான் ஒரு தரு என்றார். ஆகவே தரு நிகரலவென்பது கருத்தாயிற்று. எல்லா வேதத்தினையும் மாற்றி முறைமைகளாற் பூரணப்பட்ட புதிதாகிய ஓர் வேதத்திற் குரியாரொன்பது தோன்ற "வரிசை" என்றார். இதுவு மாகு பெயர். நபிபெருமானாரவர்களின் வருகையின் உண்மை இனைத்தென்பது தோன்ற உற்றவர் என இறந்தகாலத்தாற் கூறினார். வகுத்து என்ற மிகையான் ஆமினா! உன்கர்ப்பத்திலே கருவாகிய முகம்மதென்ற வுருவத்தில் பரிசுத்த ஆவி இம்மாதத்திலே புகுத்தப்பட்டது என்பதுங் கூறினாரொன்ப தாயிற்று. ஏகாரம் ஈற்றசை. பிற வருவனவெல்லா மமைத்துக்கொள்க:

(35) ஆறு திங்களில் வந்துமூ சாநபி யழகாக்
கூறு மென்கரும் பேநின்றன் வயிற்றுறு குழந்தை
வீறு பெற்றிடுந் தலைமையும் பெரும்பத வியையு
மாறி லாதவர் பெயரிடு முகம்மதென் றுரைத்தார்.

(ப-ரை.) ஆறு திங்களில்-கருப்பமாகிய வாறுமாதத்திலே, மூசாநபி - நபியென்ற வதிட்டம் பெற்றவர்களில் மூசா என்பவர்கள், வந்து - ஆமினா அவர்களின் கனவிலே புகுந்து, அழகா-வெகு நேர்த்தியாக, கூறும் - மொழியாநிற்கும், மென் - மென்மையவான, கரும்பே - கரும்பாகிய ஆமினாவே, நின்தன் - உன்னுடைய, வயிற்று உறும்-கர்ப்பத்தில் ஜனிப்புற்றிராநிற்கும், குழந்தை - பிள்ளையானது, வீறு - பெருமையையும், தலைமையும் - நாயகத் தனத்தையும், பெரும்பதவியையும் - பெரிய நிலைபாரத்தையும், மாறிலாது-தவறுதலில்லாது; பெற்றிடும் - ஒப்புக் கொள்ளுந் தகுதிக்குரிய, முகம்மது - முகம்மதேயாம், அவர் பெயரிடு - ஆகலின், அவர்பெயராயே

நீயுமிடுகெ, என்று உரைத்தார் - என்று சொன்னார்கள், எ-று.

(போ-ரை.) கருப்பமாகிய வாரூ மாதத்திலே நபியென்ற வதிட்டம் பெற்றவர்களில் மூசா என்பவர்கள் ஆமினு அவர்களின் கனவிலே புகுந்து வெகு நேர்த்தியாக மொழியா நிற்கும் மென்மையவான கரும்பாகிய ஆமினுவே வுன்னுடைய கருப்பத்தில் ஜனிப்புற்றிராநிற்கும் பிள்ளையானது பெருமையையும் நாயகத்துவத்தையும் பெரிய நிலைபாரத்தையும் தவறுதலில்லாது ஒப்புக்கொள்ளுந் தகுதிக் குரிய முகம்மதேயாம் ஆகலின் அவர் பெயரையே நீயு மிடுகெ வென்று சொன்னார்கள் என்பதாம்.

கரும்பு என்ப தாகுபெயர். ஆங்கர்க்கிளந்த ஏகாரம் விளியின் கண்ணது. கரும்பென்புழி ஈண்டு ஆமினுவை மனக்கரும்பெனக் கொள்க: கடவுளானல்லது நினைத்தற்கரிய ஒப்பற்ற தகுதியை "பெரும்பதவி" என்றார். இங்ஙனமும் விரிக்கிற் பல்குமாகலின் விரித்திலம்; ஆயினும் இப்படல முதற்செய்யுளிற் கூறினும். ஆண்டுக் காண்க: மாறிலாது என்புழிப் பூரணமாய் என்பது கருத்து. மாறுதலில்லாதவர் எனற்பாலது தல் விகுதிகெட்டு நின்றது. அவர் பெயரிடு என்றமையான் இக்குழந்தை மேலுலகத்தெல்லாம் முகம்மதென்னும் பிரபலம் படைத்தவராகலின் அப்பெயரையே நீயு மிடுகெ வென்பது கருத்து. இது தரித்திடும் முதற்றிங்களில் என்ற செய்யுளானுங் கூறினும்.

இச்செய்யுளி னீற்றடி,

"சொல்லிய தொடையொடு வேறுபட் டியலிற்
சொல்லியற் புலவரது செந்தொடை யென்ப"

என்றவிதியூ லமைக்கப்பட்டது.

இக் கருத் தறியாத சிலர் மனஞ் சென்றவழியே பிதற்றுவர் அவையெல்லாம் முதலுரையார் கூறினர். ஆண்டுக் காண்க:

(36) சினவு வேற்கரத் தப்துல்லா வெனுமொரு சிங்க
மனைவி யாகிய ஆமினு வெனுங்குல மடமா
னினமு மாயமும் வாழ்த்திடக் கருப்பமு மிலங்க
கனவு கண்டக மகிழ்ந்தினி திருக்குமக் காலம்.

இச்செய்யுள் **நபி** பெருமானாரவர்களின் தந்தையாகிய மகத்துவம் பொருந்திய **அப்துல்லா** அவர்களின் **உபாத்து** நுதலுவான் ரொடங்கிப் பிரிந்து நின்றது.

(ப - ரை.) சினவு - பொருதுகின்ற, வேல் - அயில் படிந்திராநிற்கும், கரத்து - கையினையுடைய, அப்துல்லாவெனும் - **அப்துல்லா**வென்று கூறப்பட்டுள்ள, ஒரு - ஒப்பற்ற, சிங்கம் - சிங்கத்தினது, மனைவியாகிய-மனைக்குரியராகிய, ஆமினுஎனும்- **ஆமினு**வென்ற, மடமான் - இளமானனவர்கள், கருப்பமும் - சூலும், கனவு - சொப்பனமும், இலங்க - நாட்கு நாண்முதிர்ந்தே தோற்றவும், இனமும் - மக்கத்தார்களும், ஆயமும் - தாயாரும், வாழ்த்திட - இச்சூலால் நற்பயன் பயவ என்று பிரார்த்திக்கவும், கண்டு - கண்ணுற்று, அகம்மகிழ்ந்து - உள்ளத்தி னிகழ்ந்த மகிழ்ச்சி பொங்கி, இனிது இருக்கும்-இனிமைபூத் திராநிற்கும், அக்காலம் - அம்மாதத்திலே, எ-று.

(பொ-ரை.) பொருதுகின்ற அயில்படிந் திராநிற்கும் கையினையுடைய **அப்துல்லா**வென்று கூறப்பட்டுள்ள ஒப்பற்ற சிங்கத்தினது மனைக்குரியா ராகிய **ஆமினு**வென்ற இளமானனவர்கள் சூலும்சொப்பனமும் நாட்கு நாண்முதிர்ந்தே தோற்றவும் மக்கத்தார்களுந் தாயாரும் இச்சூலால் நற்பயன் பயவ வென்று பிரார்த்திக்கவும் கண்ணுற்று உள்ளத்தினிகழ்ந்த மகிழ்ச்சிபொங்கி இனி

மையூத் திராநிற்கும் அம்மாதத்திலே என்ப தாம்.

அப்துல்லாவின் வேல் உறை செரிக்கப்படாது போர்முகத் தொத்துக் கிடக்குமென்பான்கருதி சினவுவேல் என்றார்.

இனி சினவுவேல் என்புழிக் கோபிக்கின்ற வேல் என்பர் முதலுரையார். வேல் எங்ஙனங் கோபித்து யாதுசெய்யும் என்னுங் கடா நிகழுமாகலின் அது பொருந்தாதென்க:

அப்துல்லாவைச் சிங்கமென்பதூஉம் ஆமினுவை மடமான் என்பதூஉ மாகுபெயர். ஆமினு அவர்கட்குப் பந்துக்க ளுளராயினும் சில காரண நிமித்தம் அவர்கள் இழக்கப்பட்டா ரென்பது பின்னர் வருஞ் செய்யுட்களால் விளங்குமாகலின் இனம் எனப் பொதுப்படக் கிளந் தமையான் தன்னினமாகிய மானிடாதிகளைச் சார்ந்து மக்கத்தாரைக் குறித்து நின்றது. கருப்பம் அதற்குரிய காலத்தி னளவை நெருங்குதலானும், கனவு நாட்கு நாள் காணப்படுதலின் பயன் உறுத்துதலானும் அவைகளின் சந்தேகம் அணுத்துணையு மில்லென்பான் "இலங்க" என்றார். ஆகலின், அது பிரகாசத்தின் பொருட் டன்றென்க: கனவு என்புழி உம்மை விகாரவகையாற் றொக்கது. நபி பெருமானார் கருத்தரித்த வாருமாதத்திலே அப்துல்லா அவர்கள் தமது தகப்பனா ரவர்களால் வியாபார நிமித்தம் தூண்டப் பட்டுப் பிரயாணித்தா ரென்பதூஉம் அப் பிரயாணத்திலேயே பரமண்டல கெதி யடைந்தா ரென்பதூஉங் கூறுவான் றொடங்கிக் கூறிவருஉமவதாரச் சரிதையை யொருவாறு நிறுத்தற்காக இச்செய்யுள் கூறப் பட்டமையான் "அக்காலம்" என்பது அவ் வாருமாதத்தை யுணர்த்தி நின்றது.

இனி அது ஆறுமாதங்களையு முணர்த்து மென்பர் முதலுரையார். அங்ஙனங் கூறுமேல் அப்துல்லா பிரதிமாதங்களினும் வியாபார நிமித்தம் ஏவப்பட்டும் பிரயாணப்பட்டும் பரகதி யடையப்பட்டு மிருத்தல் வேண்டு மாதலி னவர் கூற்றுப் பயனில் கூற்று மென்க: இதுவேயுமன்றி, "ஆமினு எனு மிளமா னனவர் தமது பந்துக்களும் பாங்கிகளும் வாழ்த்தும்படிக்கும் சூல் விளங்கும்படிக்கும் மேலே கூறியபடி சொப்பனங்கண்டு மனமகிழ்ந்திருக்கு மக்காலம்" என வா

ளாப் பொருள்கூறுவர். என்னையோ? எனின், இனமும் ஆயமும் வாழ்த்தும்படிக்கும் சூல் விளங்கும் படிக்கும் கனவு கண்டார் எனின் பொருள்சுவை படாது அருத்தா பத்தியான் வாழ்த்தப்படவும் சூல் விளங்கப்படவுமே கனவு கண்டா ரென்பது தோன்றி இழவுபடு மாகலானும் ஆமினா மீது பந்துக்கள் உவப்பின்மையான் அவர்களால் வாழ்த் தலை யடையார் ஆகலானும் என்க: அல்லதூஉம் ஆமினா கருப்பமாகிய முதற் றிகதியிலேயே தாங் கருப்பவதி யானதாய்க் கண்டகனா வித்தன்மைத் தென்பது மகவேக் குறித்த உதரப் பேற்றை அம்மாதத்திலே காணுதமையான் நன்குமதித்து யாம் கண்டகனாமெய்யாதற்கு இடமாயின தென் றெண்ணத்தடக்கி அம்மாதங் கடத்தவரு மிரண் டாமாதத்தினு மவ்வாறுறக் கருப்பவதியா யிருக்கின்றே மெனு மெண்ணம் கருப்பமோ அலவோ எனும் ஐயத்தினு மிக இவ்வாறு பிரதிமாதங்களினு நிகழ்ந்து வருகையான் ஐயந் தொலைந்து பெருந்தன்மைக்குரிய குழந்தையைக் கருப்பமாயினோ மெனும் நன்கு மதிப்புப்பெறுதற் கேது வாகிய கனவையும், இனமும் ஆயமும் வாழ்த்துதலையுங் கண்டு இனி திறவிருக்கும் அக்காலம் என்பதே இச்செய்யுட் கருத்தெனக்கூறி அவருரை போலியாமென மறுக்க:

இச்செய்யுட் புராணிகர் கூற்றுகலி னறிவுளார் உய்த்துணர்க.

(37) மக்க நன்னக ரப்துல்முத்
தலிபெனு மன்ன
னக்க மன்னமன் னப்துல்லா
தனையமைத் திருத்தித்
தக்க புத்தியு முறைமையுந்
தொழிலையுஞ் சாற்றி
யொக்கல் கூட்டுறைப் புறநகர்க்
கெழுகவென் றுரைத்தார்.

(ப - ரை.) மக்கம் - மக்கமாகிய, நல் - நன்மைபொருந்திய, நகர் - தேசத்திற்கு, மன்னன் என்னும் - ஒப்

பற்றதலைவர் என்றுசொல்லும், அப்துல்முத்த லிபு - அப்துல் முத்தலிபானவர்கள், அக்கம் அன்ன - தங்கண்களைப்போன்ற, மன் - பெருமை பொருந்திய, அப்துல்லா - அப்துல்லா அவர்களை, அழைத்து இருத்தி - அழைப்பித்திருக்கச்செய்து, தொழிலையும் - வர்த்தகத்தையும், முறைமையும் - அதுசெய்யத்தக்க விதங்களையும், தக்கபுத்தியும் - அதற்காக ஒழுகவேண்டுவனவற்றையும், சாற்றி - இன்னனெனப் பயப்பித்து, ஒக்கல் - உறவினர்களோடு, கூட்டுற - சேர்ந்தவனாக, புறநகர்க்கு - பிறதேசங்கட்கு, எழுகவென்று - வர்த்தகநிமித்தம் புறப்படுவாயாக வென்று, உரைத்தனர் - சொன்னார்கள், எ - று.

(போ-ரை.) மக்கமாகிய நன்மைபொருந்திய தேசத்திற்கு ஒப்பற்ற தலைவனொன்று சொல்லும் அப்துல் முத்தலிபானவர்கள் தங்கண்களைப் போன்ற பெருமைதங்கிய அப்துல்லா அவர்களை அழைப்பித் திருக்கச்செய்து வர்த்தகத்தையும் அது செய்யத்தக்க விதங்களையும் அதற்காக வொழுகவேண்டுவனவற்றையும் இன்னனெனப் பயப்பித்து உறவினர்களோடு சேர்ந்தவனாகப் பிறதேசங்கட்கு வர்த்தக நிமித்தம் புறப்படுவாயாக வென்று சொன்னார்கள் என்பதாம்.

மக்கம் தன்னைச்சார்ந்தாரைத் தூய்மை படுத்துமாகலின் நன்னகரென்றார். மன்னவன் என்புழி உயர்திணை ஆணொருமை குறித்த அன் விகுதி அப்துல் முத்தலிபினது ஒப்பறுதலைக் குறித்து நின்றது. இங்ஙன மறியாதார் மன்னர் எனத் திருத்தி மயங்குவர். இக் கூற்றுரில் முதலுரையாரு மடங்குவர். தொழிலைச் சாற்றலாவது:

"செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்"

என்ற வள்ளுவருக் கிலக்காய் வர்த்தகஞ் செய்தலே பொருட் செய்தற்குக் காரணமாம்; அது செய்யவே பெரும்படையும் நட்பும் உடையராய்ப் பகைவர் தருக்கொழிந்து தாமே விளங்குவர் ஆதலின் வர்த்தகமே யாவற்றினுஞ் சிறந்துள்ளது, நீயும் அதைச் செய்கவென்பதை.

முறைமையைச் சாற்றலாவது;—

"தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு"

என்ற வள்ளுவர்க் கிலக்காய்த் தொழில்செய்யுமிடத் துபாயம் வேண்டுமென்பதை.

தக்கபுத்தியைச் சாற்றலாவது;—பொருட்செயுநிமித்தம் பிறர்பாற்கொண்ட பொருளைத் தம்பொருளெனப் போர்த்துத் திரும்ப அவர்மாட்டு அரி எனமொழிந்து சேர்த்தலைச் செய்யக் கடனுமென்னும் போதனையை.

தொழிலையும், முறைமையும், தக்கபுத்தியும் என்க் கிடத்தற்பாலது செய்யுளாகலின் பிறழ்ந்து நின்றது. அது,

"படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்"

என்ற வள்ளுவரானறிக.

(38) தந்தை கூறிட அப்துல்லா மனந்தறு காமன்
மந்திர வாளெடுத் தினிதுற விசித்தனர் மருங்கி
லிந்திர வில்லென வில்லெடுத் தொருகையி லேந்திக்
கந்து கங்கொணர் கென்றுகட் டுரைத்தனர் கடிதின்.

(ப - ரை.) அப்துல்லா - **அப்துல்லா** அவர்கள், தந்தை - தமது தகப்பனார், கூறிட - அவ்வாறு சொன்ன மாத்திரத்திலே, மனம் - நெஞ்சமானது, தறுகாமல் - அச்சொல்லுக்குக் கொஞ்சமேனும் விரோதிக்காமல், இனிதுற - சந்தோஷமாய், மந்திரவாள் - பட்டத்துவாளினை, எடுத்து - தந்தைபால்வாங்கி, மருங்கினில் - தன்னிடுப்பின்கண், விசித்தனர் - தரித்து, இந்திரவில்லென - வானத்துவில்போன்ற, வில்லெடுத்து - பட்டத்

துவில்லையே வாங்கி, ஒரு - ஒப்பற்ற, கையில் - இடதுகரத்தில், ஏந்தி - பிடித்து, கந்துகம் - குதிரையை, கடிதின் - விரைவில், கொணர்க என்று - கொண்டுவருவாயாக வென்று, கட்டுரைத்தனர் - பாகனுக் காக்யாபித்தனர், எ-று.

(போ-ரை.) அப்துல்லா அவர்கள் தமது தகப்பனு ரவ்வாறு சொன்னமாத்திரத்திலே நெஞ்சமான தச்சொல்லுக்குக் கொஞ்சமேனும் விரோதிக்காமல் சந்தோஷமாய்ப் பட்டத்து வாளினைத் தந்தைபால் வாங்கித் தன் னிடுப்பின்கண் தரித்து வானத்து வில்போன்ற பட்டத்து வில்லையே வாங்கி ஒப்பற்ற இடது கரத்தில் பிடித்துக் குதிரையை விரைவில் கொண்டுவருவாயாக வென்று பாகனுக் காக்யாபித்தனர் என்பதாம்.

இனிதுறவென்றவதனுன் தறுகாமல் என்புழிக் கொஞ்சமும் என்றசொல் பெறப்பட்டது. அப்துல்லா பட்டத்துக் குரியவரல்லராயினுங் இத்தன்மைத்தவ ரொன்பதுதோன்ற மந்திரவாளெடுத்து விசித்தனர் என்ருர். வாள் பட்டத்துக்குரிய தென்றமையான் ஒற்றுமைநயத்தால் வில்லும் பட்டத்திற் குரியதெனப்பட்டது.

எடுத்து என்புழி, எங்ஙனம் எனும் அவாவான் தந்தை வருவித்துரைக்கப்பட்டது. இனி மந்திரவாள் என்புழி அந்தரங்கவாளென்றும் அப்துல்லா பட்டத்திற் குரியரல்லராகலின் பட்டத்து வாளெனற் பொருந்தாதென்றும் கூறுவர் முதலுரையார். இவர் மக்க நன்னகர் **அப்துல்முத்தலிபு** என்ற செய்யுளின் அக்கமன்னமன் என்புழி மன்னவராகிய **அப்துல்லா** எனப் பொருள்கூறியுளர்; ஆகலின் **அப்துல்லா**வை எந்தப்பட்டத்தில் வீற்றிருந்த காரணம்பற்றி மன்னவர் என்ருரோ? யாமறியேம்.

"முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்"

என்ற வள்ளுவரான் முறைசெய்யு நீதியுடைமைபற்றி இறையிற் பிறராகிய மாக்களையு மிறையென்றாற்போல அரசத்தன்மைக்குரிய தகையுடைமைபற்றி அப்துல்லாவை மன்னரொன்ரும் என்பாரேல், அதுபற்றியும் பட்டத்திற்குரிய வாள் அவருக்குக் கிடைத்தல் எளிதேயா மாகலின் அவர்கூற்றுத் தவறென்க. விசித்தனர் என்னும் வினைமுற்றுச் சொல் வினையெச்சப் பொருளில் நின்றது. கந்துகம் கொணர்க என்றமையான் பாகன் அவாய் நிலையான் வருவித் துரைக்கப் பட்டது. வில்லென என்பதில் என என்ப துவமையுருபு.

(39) பாட லத்தின்மேற் கொண்டுறு தனிற்பரி வாரங்
கூடு கோளரித் திரளென வரநெறி குறுகிக்
காடுங் கானமுங் கடந்துசெந் தேம்பொழிற் கனிசூழ்
நாட டைந்துபோய்ப் புகுந்தனர் மதீனமா நகரில்.

(ப - ரை.) பாடலத்தின் மேல்கொண்டு - அவ்வாறு ஆக்யாபித்த கடிகையிலே பாகனாற் கொண்டுவரப்பட்ட சிறந்த அக்குதிரையின்மீது உல்காச வீற்றிருப்புற்று, தனில் - தனக்கு, உறு - உறுத்து தலையுடைய, பரிவாரம் - சூழ்வோர், கோளரி- ஆண்சிம்மத்தினது, திரளென - கூட்டம்போல, கூடுவர - சேர்ந்துவர, நெறி - மதீனத்துப்பாதையை, குறுகி - சார்ந்து, காடும் - அடர்ந்தகானகங்களையும், கானமும் - சோலையையும், கடந்து- தொலைத்து, செம் - செம்மையாகிய, தேம் - பிரசத்தையுடைய, கனி - பழவர்க்கங்கணிறைந்த, பொழில் - பெருமைதங்கிய, நாடு - மதீனநாட்டையும், அடைந்து - சந்தித்து, போய் - அவைகளையுங்கடந்து, மதீனம் - மதீனுவென்கிற, மா - மாட்சிமைதங்கிய, நகரில் - பட்டணத்தில், புகுந்தார் - பிரவேசித்தார்கள், எ-று.

(போ-ரை.) அவ்வாறு ஆக்யாபித்த கடிகையிலே பாகனுற் கொண்டுவரப்பட்ட சிறந்த அக் குதிரையின் மீது உல்காசவீற்றிருப்புற்றுத் தனக் குறுத்து தலையுடைய சூழ்வோர் ஆண்சிம்மத்தினது கூட்டம்போலச் சேர்ந்துவர மதீனத்தினது பாதையைச் சார்ந்து அடர்ந்த கானகங்களையும் சோலைகளையுந் தொலைத்துச் செம்மையாகிய பிரசத்தையுடைய பழவர்க்கங்க ணிறைந்த பெருமைதங்கிய மதீனநாட்டையுஞ் சந்தித்து அவைகளையுங் கடந்து மதீனுவென்கிற மாட்சி மைதங்கிய பட்டணத்தில் பிரவேசித்தார்கள் என்பதாம்.

உறுதனில் எனற்பாலது தனிலுறு என மாற்றிக் கூறப்பட்டது. "சினவுவேல்கரத்து அப்துல்முத்தலிபு" என்ற செய்யுண்முதல் "ஆதி கற்பனை ஊழ்விதிப்பயனும்" என்ற செய்யுளிறுவாய் அப்துல்லாவி னது தேக வியோகாகமம் கூறுதலொன்றேபற்றித் தமிலுறு பரிவார மென்னுது "தனிலுறுபரிவாரம்" என ஒருமையாற் கூறினர்.

இக் கருத்தறியாத முதலுரையார் தமிலுறுபரிவாரமெனத் திருத் திக் கூறுவர்.

பரிவாரமென்பது ஈண்டு அப்துல்லாமீது மிக்க வுவப்புள்ளாரை யுணர்த்தி நின்றது. போய்ப்புகுந்தனர் மதீனமாநகரம் என்னுது "நாடடைந்துபோய்ப் புகுந்தனர் மதீனமா நகரம்" என்றமையான் மதீனநாடு ஏனையநாடுகளினும் சிறந்துள்ள தென்பதாயிற்று. தேன் பொழில் என்பது தேம்பொழில் எனத்திரிந்து நின்றது. பிறவருவன வெல்லா மாய்ந்தாய்ந்தடங்குக :

(40) மதீனத் தின்னுறை ரசவருக் கங்களு மதீனப்
பதிய டுத்தவூர்ச் சரக்கையுங் கொண்டுபெந் தனமாக்
கதிர்கொண் மாடத்திற் கட்டிவைத் தவரவர் கரத்திற்
புதிய வாணிபத் தலைவிலைக் கீந்தனர் பொருளை.

(ப - ரை.) மதீனத்தின் - மதீனத்திலே, உறை - தங்கும் ரசவருக்கங்களும் - தேன்கமழும் பழவர்க்கங், களையும், மதீனம்பதி - மதீனநகரை, அடுத்த- நெருங்கிய, ஊர் - சிற்றூர்களின், சரக்கையும்- பலவித சாமான்களையும், கொண்டு - தக்க விலைக்குவாங்கி, பந்தனமா - வைக்கத்தக்கவித மாக, கதிர்கொள் - பிரகாசியாநிற்கும், மாடத் தில் - ஓர்கிரகத்தின்கண், கட்டிவைத்து - சில நாள் வைத்திருந்து, புதியதலை - புதிதாகிய இயற் கையினையுடைய காலத்தினது, விலைக்கு - கடை விலைக்கு, பொருளை-அவ்வாறு கட்டிவைத்துள்ள சரக்குகளை, அவரவர் கரத்தில் - கொள்ளத் தக்க முறையாய் விரும்பிவரும் விருப்பப்படி யவரவர் வசத்தில், வாணிபம் - இலாபத்திற்கு, ஈந்தனர் - விற்றுமுதல் செய்தார்கள், எ - று.

(போ-ரை.) மதீனத்திலே தங்குந் தேன்கமழும் பழவர்க்கங் களையும் மதீனநகரை நெருங்கிய சிற்றூர்களின் பலவித சாமான்களையும் தக்கவிலைக்கு வாங்கி வைக்கத்தக்க விதமாகப் பிரகாசியாநிற்கும் ஓர் கிரகத்தின்கண் சிலநாள் வைத்திருந்து புதிதா கிய இயற்கையினையுடைய காலத்தினது கடை விலைக்கு அவ்வாறு கட்டிவைத்துள்ள சரக்கு களைக் கொள்ளத்தக்க முறையாய் விரும்பிவ ரும் விருப்பப்படி யவரவர் வசத்தில் இலாபத் திற்கு விற்றுமுதல் செய்தார்கள் என்பதாம்.

மதீனத்தின் உறை என்றமையான் பிறநகர்க்கெழாது மதீனத்தி லேயே விலைபெற்றடங்கும் என்பது கருத்தாயிற்று. நீணைப்பிற் புதி தாய் அளத்தற் கேதுவின்மையாய் எவ்வினைக்கு முதன்மையாய் வரு உம் வஸ்துவைக் காலம் என்ப வாகலின் புதுமை முதுமை யென்னுஞ்

சிறப்பி னேதுவால் காலம் புதிய தலை எனப்பட்டது. செய்யுளாக லின் செவிக்கினிதாகப் "புதியவாணிபம் தலைவிலைக்கு" என்றார். அது

"மருவின்றொருதி மயங்கியல்"

என்ற விதியானு மறிக: இரசவருக்க மென்பது இகரங்குறைந்தும் தேன்படுங்கனிகளை யுணர்த்தியு நின்றது.

இனி புதிய வாணிபம் தலைவிலைக்கு என்புழிப் "புதிதாகிய செட்டையுடைய முதல்விலைக்கு" எனப் பொருள்கூறுவர் முதலுரையார். இக்கூற்றில் பொருள் வியப்பின்மையா னும் "கொண்டு பந்தனமாக் கதிர்கொண் மாடத்திற் கட்டி வைத்து" என்றமையான் கடைவிலைக்கு விற்றாரென்பதே கருத்தா மாகலானும் அவ்வுரை யாசிரியர்க் குடன்பா டாகா வென்க:

பிறவருவனவும் ஆய்ந்தாய்ந்தடங்குக:

(41) வாணி பத்தொழி லனைத்தையு முடித்துமன் னவரும்
காணு நாட்சில விருந்துதன் பதிவரக் கருதிப்
பூண ணிந்தழ குறுமிளை யவர்புடை சூழச்
சேண டைந்தபு வாவெனுந் தலத்தினைச் சேர்ந்தார்.

(ப - ரை.) தொழிலனைத்தையும் - மேலே கூறியபடி வியா பாரங்களை யெல்லாம், வாணிபம் - இலாபத் தோடு, முடித்து - முடிவுசெய்து, காணும் - தத்தமனத்தில் மதிப்புற்றுள்ள, சிலநாள் - சில தினங்கள், இருந்து-ஆங்காங்கிருத்தலைச்செய்து, மன்னவரும் - அப்துல்லாவும், பூண் - ஆபரணங் களை, அணிந்து - பூண்டு, அழகுஉறும் - அழ குமிகுக்கும்படியான, இளையவர் - பால்யர்களும், புடைசூழ - சேர்தலாக, பதிவர - மக்கத்துக் குத் திரும்ப, கருதி - நினைத்து, சேண் அடைந்த- விசாலம்பொருந்திய, அபுவா எனும் - அபுவா வென்று சொல்லப்படும், தலத்தினை - தலத்தள வில், சேர்ந்தார் - ஒன்று கூடினார்கள் எ - று.

(போ-ரை.) மேலேகூறியபடி வியாபாரங்களை யெல்லா மிலாபத்தோடு முடிவுசெய்து தத்த மனத்தில் மதிப்புற்றுள்ள சிலதினங்க ளாங்காங் கிருத் தலைச்செய்து அப்துல்லாவு மாபரணங்களைப் பூண் டழகு மிகுக்கும்படியான பால்யர்களுஞ் சேர்தலாக மக்கத்துக்குத் திரும்ப நினைத்து விசாலம் பொருந்திய அபுவா வென்று சொல் லப்படும் தலத்தளவில் ஒன்றுகூடினர்கள் என் பதாம்.

மன்னவர் என்ப துபசாரக்கிளவி. மன்னவரும் என்ற உம்மை யான் மற்றவரும் என்பது பெறப்பட்டது. தன் என்பது இசை நிறைக்கவந்த சாரியை. காணுநாள் சில இருந்து என்றமையான் தொழின்முடிந்தும் அது நிமித்த மிருத்தலைச் செய்தநாள் ஒருவாரத் தைப் பெற்றில யென்பதாயிற்று. அது நிமித்த மிருந்தநாள் என்புழி நிலுவை முதலிய வரவேண்டியதர்க்கா யிருந்தநாளென் றறிக:

பூணணிந் தழகுறு மிளையவர் என்றமையான் அவ் விளையவர் பூணணித லொன்றேபற்றி யழகுறுவ ரென்பதூஉம் அஃதில்லேல் அத்துணையரல்ல ரென்பதூஉம் அப்துல்லா மிக்க அழகின ரென்ப தூஉம் பெறப்பட்டன. புடைசூழ என்றமையான் வியாபார நிமித்தம் மதீனாவினின்று பிறதலங்களினுஞ் சென்றிருந்தா ரென்பதூஉம்"அபுவா வெனுந் தலத்தினைச் சேர்ந்தார்" என்றமையான் அப்துல்லாவு மவ ரோடுற்றவரும் இழிந்திருந்தவிடம் அபுவா வென்பதூஉம் பிரயாணத் திற்காக யாவரும் ஆங்கு ஒருங்கேகூடின ரென்பதூஉங் கருத்தென்க: அடைந்த வென்னும் பெயரொச்சத்து அகரம் விகாரவகையாற் றொக்கது.

இனி பதிவரக் கருதி என்றமையான் மதீனாவினின்று மக்கத்திற் காகப் பிரயாணப் பட்டார்கள் எனுங் கருத்தினராய்ச் சேணடைந்து அபுவாவெனுந் தலத்தினைச் சேர்ந்தார் எனப் பிரித்து "மதீனாவிலிருந்து வெகுதூரத்தடைந்து அபுவா வெனுந் தலத்தில் தங்கினர்" எனப் பொருள்கூறி வாளா மயங்குவர் முதனூலாயார். இவர் அபுவா என்பது மதீனத்

திலுள்ள வோர் தலத்தின் பெயரென வறியாது அங்ஙனம் பொருள்கூறி இடர்ப்பட்டாரென்க: பிறவருவனவுங் கொள்க.

(42) ஆதி கற்பனை யூழ்விதிப்
பயனும்வந் தடைந்து
போது நாட்களு நாழிகைக்
கணக்கையும் போக்கி
நீதி மன்னவ னப்துல்லா
தனையறி நினைவாய்ச்
சோதி மென்முக மிலங்கிடத்
துயில்வபோன் றிறந்தார்.

(ப - ரை.) நீதி - மெய்யாகிய, மன்னவன் - கடவுளினது, ஆதி - முதலாகிய, கற்பனை - கட்டளையின், ஊழ் - முறைமையான, விதி - காலத்தின், பயனும் - பிரயோசனமானது, நாளும் - நாட்களையும், நாழிகைக்கணக்கையும் - நாட்களின்பாகமாகிய சில்லறைக்கணக்கையும், போக்கி - பிடர்பிடித் தெறிந்தாற்போல போக்கிவிட்டு, அப்துல்லா - அப்துல்லாவினிடத்தில், வந்தடைந்து- சம்பவித்த, போது - உடனே, தனை - அவ் அப்துல்லா அவர்கள் தன்னையே, அறி - இன்னதென் றறியும், நினைவாய் - எண்ணத்தினராய், துயில்வ போன்று - நித்திரை செய்தலே போன்று, சோதி - சூரியனைப்போலும், மென்-மென்மையவான, முகம் - முகமானது, இலங்க-பிரகாசிக்க, இறந்தார் - பூலோகவாழ்க்கையைத் துறந்தார் எ - று.

(போ-ரை.) மெய்யாகிய கடவுளினது முதலாகிய கட்டளையின் முறைமையான காலத்தின் பிரயோசனமானது நாட்களையும் நாட்களின் பாகமாகிய

சில்லனாக் கணக்கையும் பிடர்பிடித் தெறிந் தாற்போலப் போக்கிவிட்டு அப்துல்லாவினி டத்தில் சம்பவித்தவுடனே யவ்வப்துல்லா அவர்கள் தன்னையே இன்னதென்றறியும் எண் ணத்தினராய் நித்திரைசெய்தலே போன்று சூரியனைப்போலும் மென்மையவான முகமா னது பிரகாசிக்கப் பூலோக வாழ்க்கையைத் துறந்தார்கள் என்பதாம்.

ஆதிகற்பனை என்பது மனுமூலகாலத்தில் இன்னு னின்னபடி யெனக் கடவுளால் விதித்த கட்டளையை-ஈண்டு உம்முல்கிதாபு என்ப வேதநூலார். அக்கட்டளை கருத்தாவாகிய கடவுளாலேயே ஒழிய பிறழாவென்பது தோன்ற ஊழ்விதி என்றார். அக்கட்டளை படைப் பாதிகளுக் கின்றியமையா தாகலின் அதைப் பயன் என்றார் ஆகவே உலகமெல்லா மழியுமென்பதாயிற்று. பயனும் என்புழி உம்மை சாரியை. கடவுள் ஆதிகாலத்தில் இன்னது இன்ன காலத்தில் இன்ன படி யெனக் கற்பித்தா னாகலின் அக் கற்பனைப்பயனே நாட்களை யும் நாழிகைக் கணக்கையும் போக்குமாகலின் பயன் எழுவாய்த் தொடர்.

"போது நாட்களும் நாழிகைக் கணக்கையும் போக்கி" என்புழி ஈண்டு அப்துல்லா அவர்கட்கு நியமிக்கப்பட்டுள்ள தினங்களையும் அவற்றின் பாகங்களையு மெனக் கொள்க:

நாள் என்பது உலகம் அருக்கனு லொருமுறைச் சுற்றப்படுவதை. நாழிகை என்பது அருக்கனின் புடைபெயர்ச்சியை. இனி உலகத்தால் அருக்கன் சுற்றப்படு மென்பார் உலகத்தின் புடைபெயர்ச்சியை நாழிகை என்பர். இதுவேயுமன்றி அருக்கன் வானத்தாற் சுற்றப்படு மென்றும் அவைகளெல்லாம் படைக்கப்பட்ட காலந்தொடங்கிப் படைத்தவிடத்தினின்று உயர்ந்தேபோத லியற்கையதாமென்றும் அதற்கு மாற்றமென்றும் பலவாறு துணிவர்; அவையெல்லாம் பொருந்தாமை யிவையென நுதலப்புகுதல் இங்ஙன முறையாகாமை பற்றி நிறுத்தினும்.

உலகெலாம் அழிதற்குரிமையவாகலின் அவை உளவாகத் தோன் றினவிடத்தும் அத்தோற்றம் பொய்யேயாம். கடவுளே யாண்டும்

நிலைத்தலின் அவனே மெய் என்பது தோன்ற "நீதிமன்னவன்" என்ருர். தமை எனற்பாலது தனை எனத் திரிந்து ஒப்பறுதலை யுணர்த்தி நின்றது. அறியும் எனற்பாலது அறி எனத் தொக்கு நின்றது. அடைந்த வென்னும் பெயரெச்சத்து அகரவுயிர் உகரமாய் அடைந்து என நின்றது. இவ் வுலகவாழ்க்கை யொழிந்து பரமண்டல வாழ்க்கை யடைதலே தத்தமுண்மை யறிதற்கு வசதியாகலின் இறப்பின் பயன் இனைத்தென்பதை அறி நினைவாய் என்பதனு லுணர்த்தினுரென்க: அறி நினைவாய் என்புழி முதல்வினை சினைமே னின்றது. துயில்வது என்பதின் விகுதி தொக்கது.

இச்செய்யுளில் ஆசிரியர் கருத்தறியாது முதலுரையார் தமது சிற்றறிவிற் கேற்றபடி செய்யுளைத் திருத்தி வாளாக் கூறும் பொருள் வேறுபாடுகளை யவருரையானே அறிக:

(43) கூடிச் சூழ்ந்தவர் விதிப்பய னெனக்குலை குலைந்து
வாடி மன்னனை யெழில்பெற மணத்துட னடக்கிப்
பாடி யூரபு வாவைவிட் டகன்றுபோய்ப் பதியை
நாடி வந்தவ ராமினுக் கிவையெலா நவின்ருர்.

(ப - ரை.) சூழ்ந்தவர் - **அப்துல்லா** அவர்கள் இறைவனது சந்நிதித்திசையை முன்னேக்கியபோது ஒக்கலனைவரும், குலைகுலைந்து - மிகு பதைப்புற்று, கூடி - ஒன்ருய்த்திரண்டு, விதிப்பயனென - இவர்க்கு இவ்வாறுற்றது கட்டளைப் பிரயோசனத்தாலென்று, வாடி-வியசனித்து, மன்னனை-**அப்துல்லா** அவர்களை, எழில்பெற-மார்க்கவிதிப் பிரகாரமாக, மணத்துடன் - பரிமளாதிகளோடு, அடக்கி - அடக்கஞ்செய்து, அபுவாவைவிட்டு-அபுவாவென்கிற தலத்தைவிடுத்து, அகன்று-நீங்கி, பாடியூர் - நகரமாகிய, பதியை - மக்காவை, நாடி - நோக்கி நடந்து, வந்து - அதைச் சேர்ந்து, போய் - **அப்துல்லா**வின் மனையகத்துச் சென்று, **அமினுக்கு** - **அமினு** அவர்கட்கு, இவை

யெலாம் - இவ்வாறுற்ற சரித்திரங்களை யெல்லாம், நவின்றார் - வகைப்படச் சொன்னார்கள் எ - று.

(போ-ளா.) **அப்துல்லா** அவர்கள் இறைவனது சந்நிதித் திசையை முன்னோக்கியபோது ஒக்கலனை வரும் மிகுபதைப்புற் றுரன்றாய்த் திரண்டு இவர்க் கிவ்வாறுற்றது கட்டளைப் பிரயோசனத்தா லென்று வியசனித்து **அப்துல்லா** அவர்களை மார்க்கவிதி பிரகாரமாகப் பரிமளாதிகளோ டடக்கஞ்செய்து **அபுவா**வென்கிற தலத்தைவிடுத்து நீங்கி நகரமாகிய மக்காவை நோக்கி நடந்து அதைச் சேர்ந்து **அப்துல்லா**வின் மனையகத்துச் சென்று **ஆமினா** அவர்கட் கிவ்வாறுற்ற சரித்திரங்களை யெல்லாம் வகைப்படச் சொன்னார்கள் என்பதாம்.

அழகென்பன கண்ணானு மனனானு மறியப்படுமாயினும் அவையெல்லா மழகன்று வேதம் அழகென் றோதியே யன்றி. ஆதலின் வேதவிதியையே எழில் என்று கூறினார். அங்ஙனமாயின் அவர் வேதவிதி எங்ஙனம் பயின்றாரோ? எனின் அக்காலத்தார் தத்தம் வழக்கில் வழங்கி வந்தனவெல்லாம் வேதவழக்கென் றறிந்திலராயினும் அவையெல்லாம் பெரும்பாலும் **இபுறஹீம் அலைஹிஸ்ஸலா**மவர்களின் மார்க்க வழக்கென்பதேபற்றி எழில்பெற வடக்கி என்றா ரல்லது அக்காலத்தார் வேதவழக்குப் பயின்றிருந்தா ரென்னுங் கருத்தினரல்லராசிரிய ரென்க: ஈண்டு அது புராணிகர் கூற்று. மன்னனை என்றற்கு முன்னுரைத்தாங்குரைக்க : எழில் என் பதாகுபெயர். போய் என்றமையான் ஆற்றலின் **அப்துல்லா** மனை பெறப்பட்டது. அக்காலத்தினு நன்கு மதித்து வணங்கிவரும் தேவதலம் மக்கமே யாகலின் அத்தகைமைபற்றி யத்தலத்தைக் கடவுளெனல் தொன்முறை யாகலின் மக்கம் நாடி என்னுது பதியை நாடி என்றார். பதி என்பதூஉ மாகுபெயர்.

பாடியூர் என்புழிச் சிற்றூர் என்பர் முதலுரையார். அது பொருந்தாமை முன்னர்க் கூறியவாற்றா னறிக:

(44) மாற்றங் கேட்டலு மடமயின்
மனமுடைந் தலறித்
தோற்று மாமழை சொரிந்தெனக்
கண்ணினீர் சொரியப்
போற்றுங் காழகிற் புகைக்குழ
னிலம்புரண் டசையக்
கோற்றொ டிக்கரக் காந்தடா
மரைமுகங் குழைக்க.

(ப-ரை.) மடமயில் - இளமயிலாகிய ஆமினு அவர்கள், மாற்றம் - தம்மிறைவராகிய அப்துல்லா நிரியாண மாயினரென்ற சமாசாரத்தை, கேட்டலும் - செவியா னுகர்ந்தவுடனே, மனம் - உள்ளமானது, உடைந்து - சமையலழிந்து, தோற்றும் - தெரியும்படியான, மா - பெரிய, மழை - மேகமானது, சொரிந்து என - சொரிந்தாற்போல, கண்ணின்நீர் - கண்களால் ஜலமானது, சொரிய - சிந்த, அலறி - இறைவ! என்று சப்தித்து, போற்றும் - அசுத்தங்களை விலக்குமாறு போற்றப்படும், காழ் - வயிரம்பாய்ந்த, அகில் - அகிற்கட்டையின், புகை - புகையாற் பரிமளிக்கின்ற, குழல் - கூந்தலானது, நிலம் - பூமியின்கண், புரண்டு - தோய்ந்து, அசைய - கலங்குதலாகவும், கோல் - புள்ளிகளையுடைய, தொடி - வளையல் நிறைந்த, கரம் - கைகளாகிய, காந்தள் - காந்தண்மலர்கள், முகம் - முகமாகிய, தாமரை - தாமரை மலரை, குழைக்க - குழைக்கும்படியாகவும், எ-று.

(பொ-ரை.) இளமயிலாகிய ஆமினு அவர்கள் தம் மிறைவராகிய அப்துல்லா நிரியாண மாயினரென்ற

சமாசாரத்தைச் செவியா னுகர்ந்தவுடனே உள்ளமானது சமையலழிந்து தெரியும்படியான பெரிய மேகமானது சொரிந்தாற்போல கண்களாற் சலமானது சிந்த இறைவ! என்று சப்தித்து அசுத்தங்களை விலக்குமாறு போற்றப்படும் வயிரம்பாய்ந்த அகிற்கட்டையின் புகையாற் பரிமளிக்கின்ற கூந்தலானது பூமியின்கண் தோய்ந்து கலங்குதலாகவும் புள்ளிகளையுடைய வளையல் நிறைந்த கைகளாகிய காந்தண்மலர்கள் முகமாகிய தாமரைமலரைக் குழைக்கும்படியாகவும் என்பதாம்.

மடமயில் என்ப தாகுபெயர். மனம் உடைந்தது என்றமையான் **ஆமினு அப்துல்லா**வின் பின்னர் மகிழ்வுற் றிருந்தா ரல்லர் என்பதே கருத்தாயிற்று. தோற்றுமாமழை என்பது விடாது பொழியு மேகத்தை. சொரிந்தால் என என்பது சொரிந்தென நின்றது. என என்ப துவமையுருபு. போற்றுமென்பது படு சொலற்றுப் படுபொருளேற்று நின்றது. மென்மலர் பூத்த கூந்தலின்மேல் படரும் புருஷாட்களின் பார்வையை அசுத்தமென்றும். அந்நாட்டுப் பெண்கள் தத்தங் கூந்தலைத் துகில்கொண்டுபோர்த்தும் வழக்கினராகலின் போர்த்துங் காழகிற் புகைக்குழ லென்றூர். போர்த்தும் என்ற பொதுமையான் மகவாயினும் பார்த்தற் கிசையாத குழலென்பது கருத்து. பல்விதப் பிரபைகள் ஜொலிக்குமாறு செறிந்த விரத்தினுதிகள் தனித்தனி விளங்கலின் கோல் தொடி என்றூர்.

இனி கோல் என்பதை வளைவு எனப் பொருள் கொள்வாருமுளர். அஃதே முதனூலாயார்க்கு முடன்பாடு. வளையலை வளைந்த வளையலென்பது அத்தனைப் பொருள் சிறப்பன் றாகலின் பயனில் கூற்றென்க:

கரகாந்தள் தாமரைமுகங் குழைக்கும் என்புழி கரங்களால் முகமலர்ச்சிகெட முகத்தின்கண் புடைப்ப றென்பது கருத்தாயிற்று. காந்தள் தாமரை என்பன வாகுபெயர்கள். உம்மைகள் விகாரவகையாற் றெக்கன. பிறவருவனவு மமைத்துக் கொள்க:

(45) வருந்தி நொந்தழு தாமின விடைதலும் வளைந்து
திருந்தி ழைக்கொடி மடவிய ரிரங்குத றிரண்முத்
திருந்த சூல்வலம் புரியினைச் சூழ்ந்தசங் கினங்க
ணிரைந்தி ரங்குவ போன்றன வெங்கணு நிறைந்தே.

(ப - ரை.) வருந்தி-துன்புற்று, நொந்து-தளர்ந்து, அழுது - இரங்கி, இடைதலும் - வசக்கேடுற்றவப்போது, திருந்து - செவ்வையாகிய, இழை - ஆபரணதிகளையுடைய, கொடி - கொடிபோலும், மடவியர் - பெண்களெல்லாம், ஆமின - ஆமின அவர்களை, வளைந்து - சூழ்ந்து, எங்கணும் - மனையகத்தெல்லாம், நிறைந்து - பெருகுதலாய்க் கூடி, இரங்குதல் - அழுதலைச்செய்தல், திரள்- திரட்சிபொருந்திய, முத்து - ஆணிமுத்தானது, சூலிருந்த - அமைவுற்றிருக்கும், வலம்புரியினை- தெய்வீகத்துவம்பொருந்திய சங்கினை, சங்கினங்கள் - மற்றும் சங்குக்கூட்டங்கள், சூழ்ந்த - வளைந்து, இரங்குவபோன்றன - சப்திக்கின்றவா றெற்றிருந்தனவாம், எ-று.

(போ-ரை.) துன்புற்றுத் தளர்ந்து, இரங்கி வசக்கேடுற்றவப்போது செவ்வையாகிய ஆபரணதிகளையுடைய கொடிபோலும் பெண்கள் எல்லாம் ஆமின அவர்களைச் சூழ்ந்து மனையகத்தெல்லாம் பெருகுதலாய்க் கூடி அழுதலைச் செய்தல் திரட்சி பொருந்திய ஆணிமுத்தானது அமைவுற்றிருக்கும் தெய்வீகத்துவம் பொருந்திய சங்கினை மற்றும் சங்குக்கூட்டங்கள் வளைந்து சப்திக்கின்றவா றெற்றிருந்தனவாம், என்பதாம்.

வருந்தி நொந்து இடைதலும் என்பன ஒருபொருட் கிளவி யாதலின் றொடர்ந்து வந்தமையான் தம் பொருண்மிகுதி குறித்து நின்றது.

ஆமினு இரண்டாம் வேற்றுமைத் தொக்கது. கொடிமடந்தை என்ப துவமத்தொகை. சூலிருந்தவென்பதை இருந்தசூல் என மாற்றிக் கூறினூர். இருக்குஞ் சூல் எனற்பாலது இருந்த சூலெனத் திரிந்து நின்றது. சென்றவிடமெல்லாஞ் செழிக்கச் செய்யுந் தெய்வீகத்துவம் பொருந்திய வொப்பற்ற சங்கினை "வலம்புரி" என்றும் அதில் ஜனிக்கும் மதித்தற் கருமையும் தேடற்குப் புதுமையுமான முத்தினைத் "திரண்முத்" தென்றுங் கூறினூர். நபிபெருமானூர் சூலிருக்குங் காரணம் பற்றி ஆமினுவைத் "திரண்முத்திருந்த சூல்வலம்புரி" என்ருர் என்க: ஆகவே நபி பெருமானூர்க்குத் திரண்முத்தும் ஆமினு அவர்கட்கு வலம்புரியும் உவமமாயிற்று. இன்னிசை பயின்ற மென்குரல் மடவியர் துயராற்ருது பல்வகைப் பயிற்றி யொலித்த குரல் பலவாயின என்பான் "இரங்குவபோன்றன" வென்ருர். இக்கருத்தறியாதார்;—

போன்றது எனச் செய்யுளைத் திருத்திக்கொள்வர். இஃதே முதனூலாயார்க்கு முடன்பாடு. இதூஉமன்றி இச்செய்யுட்குப் பொருண்முடியு மாறறியாது மனஞ்சென்றவழியே சென்று செயப்படு பொருளாகிய ஆமினுவை எழுவாயென மயங்கி மாற்றங்கேட்டலும் என்ற செய்யுள் இச்செய்யுளோடு முடிதலின் ஈறிடத்து மெழுவாய் வருதன் மிகையாமெனுந் தவறுளம்பற்றி அச்செய்யுளிற் கிடந்த மடமயில் என்பதனேடு ஆமினுவைப் படுத்தி இளமயிலாகிய ஆமினு என நுதலிப் போந்தார். இக்கொள்கை ஆசிரியர்க் குடன்பா டாகா வென்க:

எங்கணும் என்புழி, ஆமினுவினது மனையெல்லாமென்பது கருத்து. ஏகாரம் ஈற்றசை. இச்செய்யுள் உவமையணிய தாகலி னதற்கியையபொருள் கொள்க:

(46) சலித்து விம்மிய மயிலினைக்
கண்டுமெய் தளர
வலித்த தோபகை விதிகொலோ
மகப்பெறும் பலனே
பலித்த தேதென வறிகிலோ
மெனப்பதை பதைத்தே
யொலித்தை யோவென விரங்கின
ரூரினி லுளரோ.

(ப - ரை.) ஊரினிலுளர் - மக்கத்திலுள்ளார்பலர், சலித்து, அவ்வாறு சஞ்சலமுற்று, விம்மிய - அழுகின்ற, மயிலினை - மயிலாகிய ஆமினு அவர்களினது, கண்டு - தனிமையைப்பார்த்து, மகபெறும்பலனோ - இவ்வாறுநேர்ந்தது மகச் சூல்கொண்ட பிரயோசனமோ, பகைவலித்ததோ - அலது ஆமினுவுக்கு நேர்ந்திராநிற்கும் விரோதம் வன்மையுற்றதோ, விதிகொலோ - முதலவன் ஆதி காலத்தில் கற்பித்த கற்பனையோ, ஏது என அறிகிலோம் என - என்னவென் றியா மறிந்தேமிலையே யென்று, பதைபதைத்து-மிக்கபதைப் புற்று, ஐயோவென ஒலித்து - கடவுளே யிதற் கென்செய்தலோ வெனக் கூப்பிட்டு, மெய் தளர - சரீரம் இளகுற, இரங்கினர் - அழுதார் கள், எ-று.

(பொ-ரை.) மக்கத்திலுள்ளார் பலர் அவ்வாறு சஞ்சலமுற் றழுகின்ற மயிலாகிய ஆமினு அவர்களினது தனிமையைப் பார்த்து இவ்வாறு நேர்ந்தது மகச்சூற்கொண்ட பிரயோசனமோ, அலது ஆமினுவிற்கு நேர்ந்திராநிற்கும் விரோதம் வன் மையுற்றதோ, முதலவன் ஆதிகாலத்திற் கற் பித்த கற்பனையோ என்னவென் றியா மறிந் தேமிலையே என்று மிக்க பதைப்புற்றுக் கட வுளே இதற் கென்செய்தலோ வெனக் கூப் பிட்டு சரீர மிளகுற வழுதார்கள் என்பதாம்.

விம்மியவென்பது காலமயக்கம். மயில் ஆகுபெயர். ஆண்டுத் தோன்றிய விரண்டனுருபு ஆறனிடத்துவந்தது. கண்டு என்றமையான் தனிமை என்பது செய்யுள் விகாரத்தாற் சிதைந்த வதனுன் வருவித் துரைக்கப்பட்டது. கண்டு என்னும் காட்சிக்கிளவி அறிந்து என்னும் பொருட்குரிய விடத்து வந்தமையான் ஆமினுவினது தனிமை இத்

தன்மைத்தென்பது குறித்துநின்றது. வலித்ததோ, விதிகொலோ, பலனோ என்புழி ஓகாரங்கள் வியசனங் குறித்து நின்றன.

அவைகள் வினப்பொருட்டென்றும் ஐயப்பொருட்டென்றும் முரணி யிடர்ப்படுவாருமுளர். அவ்விருகூற்றும் முதனூலாயார்க் குடன்பாடே. வினாதற்கு எதிர்ப்பட்டா ரின்மையானும் அக்கூற் றுங்குற்றூர்க் கெல்லாம் பொதுமையானும் வினவாகா தென்க: இனி அவ்வோகாரங்கள் ஐயத்திற் குடன்படுமோயினும் விதிகொலோ என்பதில் ஐயம்நிகழாமை பற்றி முற்றமுடியாது ஆகலினதூஉ மாசிரியர்க் குடன்பாடாகா. ஆகவே யவைக ளெல்லாம் மிக்க வியசனம்பற்றி மனநிலைகெட்டுறுகி யுணர்வற்றெழுங் கூற்றுமென்றறிக: கொல் அசைநிலை. பதைத்தே என்பதன் ஏகாரம் இசைநிறை. ஆமினாவுக்குற்ற பகை இனைத்தென்பது பின்னர்க் கூறுவர் ஆண்டுக்காண்க: ஈற்றேகாரம் ஈற்றசை.

(47) உடுத்த பூழியிற் புதைமணி யெனவுட லொடுங்கி
வடித்த கண்ணினீ ரொழுகிட விருந்தபொன் மயிலை
யடுத்து வந்திருந் தன்புட னப்துல்முத் தலிபு
தொடுத்த துன்பங்க ளாற்றிநல் வழிபல சொன்னார்.

(ப - ரை.) வந்திருந்த - இவ்வாறுகவிருக்கு மந்நேரத்திலே ஆங்கு வந்திருந்த, அப்துல்முத்தலிபு - **அப்துல் முத்தலிபா**னவர்கள், வடித்த - கூர்மையாகிய, கண்ணின்நீர் - கண்களினின்று ஜலம், ஒழுகிட - சிந்தும்படியாக, உடல் - உடலானது, ஒடுங்கி - உசும்புதலொழிந்து, பூழியில் - பூழ்தியின்கண், புதை - புதைந்த, மணிஎன - முத்தைப்போன்று, இருந்த - கிடந்த, பொன் - அழகை, உடுத்த - தரிக்கப்பெற்ற, மயிலை - மயிலாகிய **ஆமினா** அவர்களை, அடுத்து - நெருங்கி, அன்புடன் - மிக்ககிருபையாக, தொடுத்த - அந்நாயகியைத் தொடர்ந்த, துன்பங்கள்-வியசனங்

களை, ஆற்றி - ஒருவாறமர்த்தி, நல்வழி - நல்ல நியாயங்களை, பல - அநேகமாக, சொன்னார் - பயிற்றினார்கள், எ-று.

(பொ-ரை.) இவ்வாறாக விருக்கு மந்நேரத்திலே யாங்கு வந்திருந்த **அப்துல்முத்தலிபா**னவர்கள் கூர்மையாகிய கண்களினின்று ஜலம் சிந்தும்படியாக உடலானதுசும்புதலொழிந்து பூழ்தியின் கண் புதைந்த முத்தைப்போன்று கிடந்த வழகைத் தரிக்கப்பெற்ற மயிலாகிய **ஆமினா** அவர்களை நெருங்கி மிக்க கிருபையாக அந்நாயகியைத் தொடர்ந்த வியசனங்களை யொருவாறமர்த்தி நல்ல நியாயங்களை யநேகமாகப் பயிற்றினார்கள் என்பதாம்.

**நபி** பெருமானாரைச் சூலாகத் தரித்துக் கொண்டமையான் உடுத்த என்பதைப் பொன்மயிலோடு கூட்டி முடித்தாம். தரித்த பூழ்தி என முடிப்பின் பொருள் வியப்புறா தாகலின், ஆசிரியர்க்கு மஃதே வுடன்பாடென்க, புதைமணி வினைத்தொகை. உடலொடுங்கி என்றமையான் உசும்புதல் என்பது பெறப்பட்டது. மயில் ஆகுபெயர். வந்திருந்த என்புழி **அப்துல்லாவி** னிழவிற் குரியனவெல்லாம் உரித்தாதற்கு வந்திருந்த என்பது கருத்து; அவர் **அப்துல்லா**வின் தந்தையாதல்பற்றி. வந்திருந் தன்புடன் என்பது

"புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை"

என்றாற்போல பெயரெச்சத்து அகரம் தொக்கு நின்றது. **அப்துல்லா** அவர்களை இழத்தலா னிகழுந்துன்பம் அறாது நிகழூஉமென்பது தோன்றத் தொடுத்த துன்பமென்றார். இத்தொடர்பு **ஆமினா**வுக்கும் **அப்துல்லா**வுக்கும் பொதுவென்க: இதுபற்றியே துன்பங்கள் அகற்றி என்னாது ஆற்றி என்றார். அது "மாற்றங்கேட்டலு மடமயில்" என்ற செய்யுளின் மனமுடைந்து என்ற விடத்துங் காட்டினாம்.

இக்கருத்தெல்லாம் ஒருங்கே கெட நூலாசிரியரினும் மிகக்கற்றார் போன்று ஆற்றி என்பதை "அகற்றி" எனச் செய்யு

ளைத் திருத்திப்போந்தார் முதலுளையார். அவர்க் கிவ்வாறு திருத்தலே இயற்கையென்க:

கண்ணினீர் ஒழுக என்பது அழுகையைக் குறித்து நின்றது. நல் வழி என்பதினைத்தென்பதைப் பின்னர்க்கூறுதும். அப்துல்மூத்தலிபு உரைத்தவாறே பிறரும் நல்வழி பலசொற்றார் எனக் கொள்க:

(48) இனத்து ளார்சொலு நல்வழிக் குருகிநெஞ் சிடைந்து
நினைத்த பற்பல துன்பமு மகற்றிநீ ணிலத்தி
லனைத்தை யும்விதித் தவன்செய லினையுமுற் றறிந்து
மனத்தி னிற்றெளி வாகினர் குலக்கொடி மயிலே.

(ப - ரை.) குலம் - சாதியில், கொடி-உயர்ச்சியான, மயில்-மயிலாகிய ஆமினு அவர்கள், இனத்துளார் - அப்துல் மூத்தலிபு முதலிய வங்குற்றிருந்தவர்களால், சொலும் - சொல்லிய, நல்வழிக்கு - நல்ல உபதேசத்தினுல், உருகி - வியசனங் கரைந்து, நெஞ்சிடைந்து - உள்ளம்வருந்தி, நினைத்த - எண்ணிய, பற்பல - நானுவித, துன்பமும் - துயரங்களையும், அகற்றி - மாற்றி, நீள் - நீட்சிபொருந்திய, நிலத்தில் - இப்பூமண்டலத்தில், அனைத்தையும் - வழங்கும் எல்லாக் காரியங்களையும், விதித்தவன் - கடவுளினது, செயலையும் - செயல்களையும், மனத்தினில் - சிந்தையால், உற்றுஅறிந்து - கவனித்து ஆராய்ந்து, தெளிந்தார்-ஒருவாறுதெளிவாயினுர்கள், எ-று.

(போ-ரை.) சாதியி லுயர்ச்சியான மயிலாகிய ஆமினு அவர்கள் அப்துல்மூத்தலிபு முதலிய வாங்குற்றிருந் தவர்களால் சொல்லிய நல்லுபதேசத்தினுல் வியசனங்கரைந்து உள்ளம்வருந்தி எண்ணிய நானுவித துயரங்களையும் மாற்றி நீட்சிபொருந் திய விப் பூமண்டலத்தில் வழங்கு மெல்லாக்

காரியங்களையுங் கடவுளினது செயல்களையும் சிந்தையால் கவனித் தாராய்ந்து ஒருவாறு தெளிவாயினர், என்பதாம்.

இனத்துளார் என்பது ஆங்குற்றிருந்தாரை யெல்லா முணர்த்தி நின்றது. இல்லாமையாய் உண்டென்று விளங்கிப் பின்னர் அவ்வயி னுறும் வஸ்துவே படைப்பெனப் படுமாகலின் நீயு மவ்வழியுற்று நாயகரைச் சார்வாய் என்னு மறிவுறுத்தலைச் "சொல்லு நல்வழி" என்றார். இவ்வறிவால் நாயகரைச் சார்வாமெனு மறிவு நிகழ்ந்தமை யான் துன்பம் நீங்கியதென்பதுதோன்ற "அகற்றி" என்றார். அது பற்றித் துன்பமுழுதூஉம் ஒழிந்ததென்னும் கருத்தினரல்ல ராசிரிய ரெனக் கொள்க :

நல்வழிக்கு என்புழிக், கு உருபு கருவிப் பொருளுணர்த்தும் ஆல் உருபினிடத்து நின்றது. உருகி என்புழி வியசனம் என்ற ஒருசொல் பெறப்பட்டது. நெஞ்சிடைந்தவழி நிகழூஉந் துயர் பலவா மென்பது தோன்ற "நினைத்த பற்பல துன்பமும்" என்றார். துன்பமும் எனு மும்மை முற்றுப் பொருளிடத்து நின்றது. ஆறறிவானுந் துன்பநிக ழூஉமாயினும் மனத்தா னிகழூஉந் துன்பம் கொடிதென்பான் "நெஞ்சி டைந்து நினைத்ததுன்பம்" என எடுத்துக் கூறினர். மனமொழிந்த புலாதிகளால் துன்புறுதலாவன;—கடிய, வெய்ய, தண்ணிய, போல் வன பிறவாற்றானும், வெறுக்கத்தக்க சுவை, மணம், தோற்றம், ஒலி யானு மென்க:

மனுக்குணத் தடங்காது இத்தன்மைத்தென்று விளங்கற் கரி தாய் உருத்தோற்றமின்றி ஜனிப்புறு மெண்ணத்தை ஈண்டு நினைப் பென்றது. உலகு வழக்கில் யாதும் நிலைபெறாது மாறுகையும் அது போல்வன பிறவும் இயற்கையென்பதை "நீணிலத்திலனைத்தையும்" என்றும் படைத்தல் காத்தல் அழித்தல் முதலியன வெல்லாம் கடவு ளுக் கின்றியமையாத் தொழி லன்றென்பதை "விதித்தவன் செய லினையும்" என்றும் ஆகவே அது நிமித்தம் வியசனித்தல் மடைமையே யன்றிப் பயன் பயவாதென்பதை "உற்றறிந்து" என்றுங் கூறினு ரெனக்கொள்க: கடவுளுக் கின்றியமையாதவை இனைத்தென வேதா கம நூல்களாலறிக: **ஆமினு** அவர்களின் பெருமை யாண்டும் உயர்ந்தே தோற்றுகையான் "குலக்கொடி மயில்" என்றார். மயில்

ஆகுபெயர். மனத்தினில் என்புழி, இன் உருபிற்கும் கு உருபிற் குறைத் தாங் குறைக்க: ஈற்றேகார மீற்றசை.

இச் செய்யுட்கு முதலுரையார் கூறுவனவெல்லாம் ஒருவாற்று னும் பொருந்தாதென மறுக்க: அவைகள் நீணிலத்தி லனைத் தையும் விதித்தவன் செயலினையும் முற்ற அறிந்து எனக் கொண்டு "நீண்ட இவ்வுலகின்கண் நடைபெறும் எல்லாவற் றையு முண்டாக்கின கடவுளினது செயலையும் முடிய வறிந்து" எனப் பொருள் கூறிப் போந்த பேதைமையா னறிக.

இவையெல்லாம் விரித்துக்காட்டிற் பல்குமென்றஞ்சி நிறுத்தி னும். ஆகலின் உய்த்துணர்க:

(49) தவிசி ருந்துநன் னெறிமுறை
நடத்து தாவூது
நபியுந் திங்களோ ரேழினிற்
கனவினி னவின்று
ரவியுங் காலமன் றுட்டத்துக்
குரியவ ராளுேர்
புவியி னிற்பெயர் முகம்மதென்
றிடுமெனப் போந்தே.

இச் செய்யுள் அப்துல்லாவினது தேக வியோகாகமத்தை யொருவாறு முடித்துப் பெருமானாரது அவதாரத்தைத் தொடுத்து நின்றது.

(ப - ரை.) திங்கள் ஏழினில் - கர்ப்பமாகிய வேழாமாதத் திலே, நபியும் - நபியாயும், ஓர் - ஒப்பற்ற, தவிசு - ஆசனத்து, இருந்து - அரசாயும் வீற் றிருந்து, நல் - நன்மையான, நெறி - மார்க்க வழிகளையும், முறை - அரசாட்சிக்குரிய சட்ட திட்டங்களையும், நடத்து - நடாத்திய, தாவூது - தாவூது அலைஹிஸ்ஸலா மவர்கள், கனவினில் - ஆமினுவினது சொப்பனத்திலே, போந்து -

புகுந்து, அவியும் - ஆமினு உன் கருப்பத்தி லிருக்குஞ் சந்ததி உயிர்களெல்லாம் வருந்தும், காலம் - நேரத்திலே, மன்ருட்டத்துக்கு - அவ் வருத்தத்தினின்று சுகப்படப்புரியுந் தகுதிக்கு, உரியவரானேர் - சொந்தமாக்கப்பட்டவர், பெயர் - தமதுபெயரை, புவியினில் - உலகத்திலும், முகம்மறு என்று இடும் என - மூகம்மதென்றே கொடுப்பரென்று, நவின்ருர் - சொன்னுர்கள், எ-று.

(பொ-ரை.) கர்ப்பமாகிய வேழாமாதத்திலே நபியாயும் ஒப்பற்ற வாசனத்து அரசாயும் வீற்றிருந்து நன்மையான மார்க்கவழிகளையும் அரசாட்சிக்குரிய சட்டதிட்டங்களையும் நடாத்திய தாவூது அலைஹிஸ்ஸலா மவர்கள் ஆமினு வினது சொப்பனத்திலே புகுந்து ஆமினு! உன் கர்ப்பத்திலிருக்குஞ் சந்ததி உயிர்களெல்லாம் வருந்து நேரத்திலே யவ்வருத்தத்தினின்று சுகப்படப் புரியுந் தகுதிக்குச் சொந்தமாக்கப்பட்டவர். தமது பெயரை யுலகத்திலும் முகம்மதென்றே கொடுப்பரென்று சொன்னுர்கள், என்பதாம்.

நபிகள் பாவங்களினின்றும் ஏவப்பட்டனவற்றினின்றும் தவறுதலின்றித் தூய்மையாக்கப்பட்டவராகலின் அவர்க் குறுந் தவிசு இத்தன்மைத்தென்பது தோன்ற ஓர் என்பதைத் தவிசு என்பதோடு கூட்டினும். இனி வேதாகமநூல்கள் நபிகளுஞ் சில தவறியுளதாய்க் கூறுகின்றனவே, அது மூலபிதாவாகிய ஆதம் அலைஹிஸ்ஸலாமவர்களும், அவர்கள்போன்ற பிறரும் தவறிய விஷயம் போலெனின்; அது தவறன்று; மனுஷர்யுக்திக்குப் புலப்பாடின்றி நிற்குமோர் வியப்பு என்க: அதை வேதநூலார் முதஷாபஹ் என்ப. அவ்விடத்து யுக்தியைச் செலுத்தித் தவறிப்போந்தார் சிலர். வெள்ளிதாய்க் காட்சிக்குப் புலப்படக்கூடிய வஸ்துக்களையும் தவறுதலின்றிக் காண்ட லருமை

யென்ருல் பிரபஞ்சகாரியங்களை யொளித்துக் காணற்கரிதாய் நிற்கும் யுக்தியால் காணப்படுவனவெல்லாம் பெரும்பாலுந் தவறுதற் கிடம் படுமாகலின் இத் துணையாம் யுக்தியை வேதகாரியங்களில் துயரற்க. இதூஉம் யுக்தியின் கடற்கரை கடந்து மிகு பிரபலங்கொண்ட **அபுலாத்தூன், ஜாலினூஸ், யுக்லீஸ், புவாலீஸிது** போலொத்த வித்வான்கள் யுக்தியால் வானமட்டறிந்துளராயினும் பூமி சுற்றுகிறதென்றும், வானம் சுற்றுகிறதென்றும், அவைகள் சுற்றவில்லை படைக்கப்பட்டவிடத்தினின் றுயர்ந்தே போகின்றனவென்றும், அவ்விடத்தினின் றவைகள் தாழ்ந்தே போகின்றன வென்றும் ஓரோ வஸ்துவினியற்கையைப்பற்றி யறியுமிடத் திவ்வாறு பிறழ்ந்து தத்தங் கொள்கைக்கு வேண்டிய உதாரணங்களைப் பொருந்தக் கொடுத்து நிலைபடுத்துகின்றமையான் அவற்றி னுண்மை இஃதெனப்படாமையாயிற்று.

ஆகவே உண்மையை யறியப்புகுவான் அவ்வித்துவான்போலொத்த வேருருவரால் விசாரிப்பன், அவ்வாறு விசாரிக்கப்படுவார் அக்கூற்றி லொன்ருலேனும் அல்லது பிறவாற்ருலேனும் நுதலப்புகுவர். அதுவும் மெய்யென்றற்கு இத்துணையானே யாதாரமொன்றுங் காணப்படாது. இதுவும் என்னே! எனும் ஐயநிகழ்ந்து மற்ருேர்மாட்டு விளங்க புகுந்து இம்முறையே நெடுகத் தீர்மானப்படாதுபோம். ஆகலின் யுக்தியால் வஸ்துக்களையும் அதனியற்கைகளையும் இருக்கும் பாங்கிலறிதல் ஒருவாற்ருனு மியலாவென்பது வெளியாயிற்று. ஆகலின் யுக்தியின்வழிப்பாடு வழிகேட்டிற் கேதுவாய் முடியுமென்பது மெய்ஞ்ஞானத் தோற்றத்திற்குப் புலப்பட லரிதன்மையான் வேதநூலுத்தரவில் யுக்தியைச் செலுத்தாது வேத மோதியவழி யுக்தியை யொக்கல் செய்தொழுகுக. யுக்தியைத் தனிப்படச் செலுத்தற்க.

இதுபற்றியே எம்மார்க்க வித்வான்கள் மார்க்கத்தை நான்குவிதமாய் நடத்துப. அவை வேதமோதியவழி, **நபி**களோதியவழி, அவர் செயல் குணம் சார்ந்தவழிச்சார்ந்தார் சென்றவழி, இவைகள் சாரும் வழி யாகிய விந் நான்குவழியே. இவைகளை யிங்ஙனம் விளக்கன் முறையின்மைபற்றி நிறுத்தினும்; உய்த்துணர்க. **நபி**கள் மனுஷாவேடத்தி லொற்றுமையன்றிக் குணத்தானுஞ் செயலானு மன்று. அது **மிகுறஜூ** முதலிய தெய்வீகத்துவமுள்ள குணத்தினுனே யறிந்து அக்குணத்தினர் நுதலியவழி யொழுகிப் போதலே மார்க்கமென்றறிக: தவிசிருந்து என்றமையான் அரசாய் என்றசொற்கள் அவாய் நிலையாற்.

பெறப்பட்டன. நன்னெறி என்பது சாட்சாதி கடவுளைச் சார்தற்குரிய வழியை. முறை யென்பது அரசாட்சிக்குரிய சட்டதிட்டங்களை. இவை முறையே **நபி**யென்றதனானும், தவிசிருந்து என்றதனாலும் பெறப்பட்டன. நல் என்பதை முறையென்பதனோடுங் கூட்டுக. அவியுங்கால மென்றது **ஹஷ்ரை.** அது மன்றுட்டமென்றதனாற் பெறப்பட்டது. மன்றுட்டம் ஹஷ்ரிடத்தே யொழிய நிகழாமைபற்றி யாகலின்.

> இனி அவியுங்காலம் என்புழிப் பஞ்சபாச மழியுங்காலமென்று பிதற்றி அது பின்வருங் **கியாமத்தை** யுணர்த்திற்று என்பர் முதலுரையார். அவர் அவியுங்கால மென்பதற்கு வருந்துங் காலமென்னும் பொருளுளிதை யுணர்ந்திலர்போலும்.

பெயர் இரண்டாம் வேற்றுமைத் தொகை. புவியினில் என்புழி இல் என்னும் ஐந்தனுருபு நான்கன்பொருளிடத்து நின்றது. ஆண்டு எச்ச உம்மை விகாரவகையாற் றொக்கது. புவியினில் என்பது ஈண்டு மக்கண்மே னின்றது. பெயரிடும் என்பது அப்பெயரோ யவர்க்கு உலகத்தாரால் கொள்ளப்படும் பெயராகலின் அப்பெயரையே நீயு மவர்க்கிடுகவென்பது கருத்தாயிற்று.

> இக்கருத்தறியாத முதலுரையார் இடுகு எனத் திருத்திக் கொள்வர்.

ஹஷரென்பது கடவுள் ஏகத்துவமுடைத்தாய் விளங்குமோர் காலத்தை. பிறவருவனவெல்லா முய்த்துணர்க.

(50) நலங்கொ டிங்களோ ரெட்டினில் சுலையுமா நபிவந்
திலங்கு பூணணி மயிலனாய் நின்வயிற் றிருந்தோர்
பெலன் கெழுமது னன்கிளைப் பேரொளி நபியாய்த்
துலங்க வந்தவர் பெயர்முகம் மதுவெனச் சொன்னார்.

(ப - ரை.) திங்களெட்டினில் - கர்ப்பமாகிய வெட்டா மாதத்திலே, நபி-**நபி**யென்ற வதிர்ஷ்டம்பெற்றவர்களில், சுலையுமான் - **சுலையுமான் அலைஹிஸ்ஸலாமவர்கள்**, வந்து - **ஆமினாவினது** கனவிலே வந்து, இலங்கும் - பிரகாசியாநிங்கும், பூண் அணி - ஆபரணாதிகளையணிந்த, ஓர் - ஒப்பற்ற,

நலம்கொள் - நன்மைபயக்கும், மயில் அனய் - மயில்போலு முருபிகரமுடைய ஆமினு, நின்- உன்னுடைய, வயிறு - கர்ப்பத்திலே, இருந் தோர் - ஜனிப்புற்றிருக்கின்றவர், பெலன்கெ ழூம் - வலிபெற்றிராநிற்கும், அதுனன் - அதுனு னென்கிற, கிளை - வம்மிஷத்திலே, பேரொளி - பெரியபிரகாசம் பொருந்திய, நபியாய் - நபி யாக, துலங்கவந்தவர் - நிலைப்படவந்தவர், பெ யர் - அந்நாயகரது பேரானது, முகம்மதென- மூகம்மது என்று, சொன்னுர் - சொன்னுர்கள், எ-று.

(போ-ரை.) கர்ப்பமாகிய வெட்டாமாதத்திலே நபியென்ற வதிர்ஷ்டம் பெற்றவர்களில் சுலையுமான் அலை ஹிஸ்ஸலா மவர்கள் ஆமினுவினது கனவிலே வந்து பிரகாசியாநிற்கும் ஆபரணுதிகளை யணி ந்த ஒப்பற்ற நன்மைபயக்கும் மயில்போலு முருபிகரமுடைய ஆமினு! உன்னுடைய கர்ப் பத்திலே ஜனிப்புற் றிருக்கின்றவர் வலிபெற் றிராநிற்கும் அதுனன் என்கிற வம்மிஷத்திலே பெரிய பிரகாசம்பொருந்திய நபியாக நிலைப் படவந்தவர் அந் நாயகரது பேரானது மூகம்ம தென்று சொன்னுர்கள் என்பதாம்.

நலம்கொள் திங்களோ ரெட்டினில் எனச் செய்யுட்கிடந்தவாறே கூட்டி நன்மைகொள்ளும் ஓர் எட்டாமாதத்தில் எனப் பொருள்கூறு வாருமுளர்.

இக்கொள்கையே முதலுளையார்க்கு முடன்பாடு. எட்டாமாதம் நன்மைகொள்ளுமேல் பிறவாகு மாதங்கள் அத்துணையின வல்ல வென்பதுவும் ஒரு எட்டாமாத மெனின் இரு மூன்று முதலிய வெட்டாமாதங்களும் உளவென்பதுவும் அருத்தாபத்தியாற் பெறுதலின் பொருளிழுக்கியுறும் அது பற்றியே ஓர் நலங்கொள் மயிலனய் எனக்கொண்டு கூட்

டினும், வயிற்றிருப்போர் எனற்பாலது இருந்தோர் எனக் கால மயங் கின்றது. அறபிகளின் மூல பிதாவாகிய இஸ்மாயீல் அலைஹிஸ் ஸலா மவர்கள் கருவாய்த் தரித்திருந்த காலத்திலே அவர்களின் றந்தை இபுறாஹிம் அலைஹிஸ்ஸலா மவர்கள் கடவுளால் விளிக்கப் பட்டு உன்மகனை எவர்க்குந் தலைவணங்கா மாட்சிமைபெற்றுந்திய ஓர் பெரிய சாதியார்க்குத் தகப்பனாக்கினேம் என்றும், பிறவும் நன் மாராயமாகச் சொல்லக் கேட்டானென வேதாகமங்களிற் கூறப்பட் டுள்ளமையானும், அறபிகளிற் சிறந்தார் அதுனான் வமிஷத்தாராக லானும் அக்குலம் இத்தன்மைத்தென்பது தோன்ற "பெலன்கெழும் அதுனான்கிளை" என்றார். பேரொளி நபிஎன்றவதனான் மற்று நபி கள் இத்துணையாஞ் சிறப்பின ரல்லரென்பதூஉம், துலங்கவந்தவர் என்றதனான் மருத கீர்த்தியினராயும் வேதங்களையெல்லாம் மாற்றி யவற்றினுட் பொருட்களையெல்லாம் அமைத்துள்ள வொப்பற்ற புறு கான் வேதத்தினராயும் விளங்குவர் என்பதூஉம் பெறப்பட்டன. துலங்கவருபவ ரென்னாது துலங்கவந்தவ ரென்றமையான் பெருமானா ரவர்களின் தோற்றம் நெருக்கமாயிற்றென்பதைக் குறித்து நின் றது. அது,

"நிகழுங் காலத்து,
மோராங்கு வரூஉம் வினைச்சொற்கிளவி,
இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்,
விரைந்த பொருள வென்மனார் புலவர்."

என்றவிதியா னறிக:

(51) மாத மொன்பதி லாமினா கனவினின் மதித்தே
வேத நான்மறை நேர்வழிக் குரியவர் விளங்கக் [ன்
கோதை யேபெறின் முகம்மது வெனப்பெயர் கூறெ
ருதி நாயகன் வரிசையீ சாநபி யறைந்தார்.

(ப - ரை.) மாதம் ஒன்பதில் - ஒன்பதாமாதத்திலே, ஈசா நபி - நபியென்றவதிர்ஷ்டம் பெற்றவர்களில் ஈசாஅலைஹிஸ்ஸலாமவர்கள், ஆமினா - ஆமினாவி னது, கனவினில் - நித்திரையிலேபோந்து, கோதையே - கோதாய்! உன்வயிற்றில் ஜனிப்

புற் றிருக்கின்றவர், ஆதி - முதன்மையாகிய, நாயகன் - நாயகத்துவமுடைய ஜல்லஷானஹூ த்த ஆலாவினது, மறை - அடைக்கலப் பொரு ளாகிய, வரிசை - மகிமைபொருந்திய, வேதம் நால் - நான்குவேதங்களினது, நேர் - தகுதி பெற்ற, வழிக்கு - முறைமைகளுக்கு, உரியவர்- சொந்தமாக்கப்பட்டவர், பெறின் - ஆமினு! நீ அவரைப்பெறுவையாயின், மதித்து - திட்ட மாய், முகம்மதுஎன - மூகம்மதுஎன்று, விள ங்க - இப்பூமண்டலத்தினும் பிரசித்தமாய்ப் பிர காசிக்க, பெயர்கூறுஎன்று - பெயரிடுவாயாக வென்று, அறைந்தார் - சொன்னூர்கள், எ-று.

(போ-ரை.) ஒன்பதாமாதத்திலே நபியென்ற வதிர்ஷ்டம் பெற்றவர்களில் ஈசாஅலைஹிஸ்ஸலா மவர்கள் ஆமினுவினது நித்திரையிலே போந்து கோ தாய்! உன்வயிற்றில் ஜனிப்புற் றிருக்கிறவர் முதன்மையாகிய நாயகத்துவமுடைய ஜல்ல ஷான ஹூத்தஆலாவின தடைக்கலப்பொருளா கிய மகிமைபொருந்திய நான்கு வேதங்களி னது தகுதிபெற்ற முறைமைகளுக்குச் சொந்த மாக்கப்பட்டவர் !ஆமினூ நீ யவரைப் பெ றுவையாயின் திட்டமாய் மூகம்மது என்று இப்பூமண்டலத்தினும் பிரசித்தமாய்ப் பிரகா சிக்கப் பெயரிடுவாயாக வென்று சொன்னூர் கள், என்பதாம்.

மதித்தே என்பதின் ஏகாரம் இசைநிறை. வேதம் நான்காவன;— தௌறாத்து, ஜபூறு, இஞ்சீல், புறுகான் என்க. வேதம் கடவுளி னது இரகசியப்பொருள்க ளமைந்தவும் புனைமொழிகளில்லாதவும் பொய்யர்வயத் தொப்புக் கொடுக்கப்படாதவுமான வரியபொருளென் பது மறை என்றதனுன் விளக்கினூர். நபிபெருமானூர் மூன்றுவேதங்

களையு மாற்றி யவைகளின் முறைமைகளெல்லா மமைந்த புறுகானுக் குரியனென்பதுதோன்ற "வேதநால் நேர்வழிக்குரியவர்" என்றார். விளங்க என்புழி உம்மை விகாரவகையாற் றொக்கது. கோதையே என்பதன் ஏகாரம் விளியின்கண் வந்தது. பெறின் என்றமையான் நபிபெருமானாரவர்களைப் பிள்ளையாகப் பெறுதல் எவராயினு மரி தென்பதூஉம் அவனைப்போற் படைத்தல் யாண்டு மில்லென்பதூஉம் பெறப்பட்டன. கடவுளை ஆதிநாயகன் என்றதனான் பிறவாகும் நாய கரும் உள ரென்பதாயிற்று. ஆயினும் அத்துணையாம் நாயகத்துவ முடையார் அல்லரென்பதுவுங் கருத்தாற் பெறப்பட்டது. வேதங் கள் * இருவகைப்படும் அசுத்தமுடையாரானுந் தொடப்படாது மகி மையில் வைக்கப்படுதலான் வரிசை என்பதை வேதத்தோடு கூட்டி னும்.

இனி அதை ஈசாநபியோடுங் கூட்டி இடர்ப்படுவர் முதலுரை யார் என்னையோ இடர்? எனின், நபிகட்கெல்லாம் பொது வாகச் சார்த்தப்படும் வரிசை என்பதைத் தனித்தனி நபி களைக் கூறுமிடத்துச் சிலர்க்குச் சார்த்தியும் சிலர்க்குச் சார்த்தாமலும் போதல் ஆசிரியர்க் குடன்பாடாகாமை பற்றி என்க: பிறவருவனவு முய்த்துணர்க.

(52) ஈத லாலிமை யவர்தின மிடைவிடுத் திலராய்ப்
போது சேர்குழ லாமினுக் கனவினிற் போந்தே
யாதி தூதுவர் முகம்மது பெயரென வதிக
நீதி யானமா ராயமே பெறநிகழ்த் தினரால்.

(ப - ரை.) ஈதுஅலால் - இதுவேயுமன்றி, இமையவர் - மலக்குகளும், தினம் - நாளும், இடைவிடுத் திலராய் - இடைவிடாதவர்களாக, போது - பூக்கள், சேர் - சேர்ந்த, குழல் - கூந்தலை யுடைய, ஆமினு - ஆமினு அவர்களின், கனவி னில்-சொப்பனத்திலே, போந்து - சென்று,

---

* மார்க்கம் அசுத்தமாக்கியதும் தாமே அசுத்தமானதுவு மென்க. அது ஹ-க்மிநஜீஸ், ஐனிநஜீஸ் என்பர் வேதபாடையார். இவற்றின் விரி வேதாகமங்களா னறிக.

ஆமினு! உன்வயிற்றின்பிள்ளை, ஆதி - முதன்மை யாகிய, தூதுவர் - றசூலாகவிருப்பர், பெயர் - அவர்களின் பெயராகிறது, முகம்மதுஎன-முகம் மதாமென்று, அதிக - மிக்க, நீதியான - உண் மையான, மாராயம்பெற - உவகையுண்டாகு மாறு, நிகழ்த்தினர் - சொல்லுவார்கள்.

போ-ளா.) இதுவேயுமன்றி மலக்குகளும் நாளு மிடை விடாதவர்களாகப் பூக்கள்சேர்ந்த கூந்தலையு டைய ஆமினு அவர்களின் சொப்பனத்திலே சென்று ஆமினு! உன்வயிற்றின் பிள்ளை முதன் மையாகிய றசூலாகவிருப்பர். அவர்களின் பெ யராகிறது முகம்மதாமென்று மிக்க உண்மை யான உவகை யுண்டாகுமாறு சொல்வார்கள் என்பதாம்.

ஈதலால் என்புழி மாதந்தோறும் நபிகளால் சொல்லப்பட்டு வந்தது மல்லாமல் என்பது கருத்து. இமையவர், தினம் என்புழி உம் மைகள் விகாரவகையாற் றொக்கன. ஈண்டு தினம் என்பதன் உம் மையை இழிவுசிறப் பும்மையாய்க் கொண்டு ஒருநாளு மிடைவிடாதவ ராய் எனக்கொள்க. இடைவிடுத்திலராய் என்பதால் ஒன்பதுமாதங் களின் நாட்களினுஞ் சொல்லிவந்தாரெனக் கொள்க. சேர் என்பது வினைத்தொகை. போந்தே என்பதன் ஏகாரம் இசைநிறை. றசூல் களுக்கும் நாயகமென்பான் ஆதி தூதுவ ரென்றார்.

இக் கருத்தறியாத முதலுளாயார் கடவுளினது தூதுவரெனப் போலியுரை கூறுவர். நபிபெருமானரவர்களின் பெயர் முகம்மதேன வொருங்கே காட்டினமையான் அத்துணைச் சிறந்தபெய ரில்லென்ப தாயிற்று.

மாராயமே என்புழி ஏகாரம் இசைநிறை. ஆல் அசைநிலை.

(53) என்றும் வானவ ரிசைத்திடுங்
கனவெலா மெடுத்தும்
வென்றி நன்னபி மார்சொலுங்
கனவெலாம் விரித்து

மன்ற லங்குழ லாமினு
படிப்படி வகையா
நன்றி தேர்ந்தசொற் ருயர்க்குத்
தினந்தொறு நவின்ருர்.

(ப - ரை.) மன்றல் - வாசனைபொருந்திய, அம் - அழகிய, குழல் - கூந்தலையுடைய, ஆமினு - ஆமினு அவர்கள், வானவர் - மலக்குகளால், என்றும் - தினந்தோறும், இசைத்திடும் - சொல்லப்பட்டுவரும், கனவெலாம் - சொப்பனங்களெல்லாவற்றையும், வென்றி - ஜயத்தையுடைய, நல்நபி - நன்றி பயக்குநபிகளால், சொலும் - மாதந்தோறுஞ் சொல்லப்பட்டுவரும், கனவெலாம் - சொப்பனங்களெல்லாவற்றையும், எடுத்தும் - சீர்தூக்கிநீக்குவனநீக்கியும், விரித்தும் - விரிக்கவேண்டுவனவிரித்தும், படிப்படி - தரந்தரமாக, வகையா - கூறுபாடாய், சொல் - மொழிகளினது, நன்றி - நயங்களை, தேர்ந்த - கசடறக்கற்றுணர்ந்த, தாயர்க்கு - தாயராகிய பர்ரு அவர்கட்கு, தினந்தினம் - அப்போதைக்கப்போது, நவின்ருர் - சொல்லிவந்தார், எ-று.

(போ-ரை.) வாசனை பொருந்திய அழகிய கூந்தலையுடைய ஆமினு அவர்கள் மலக்குகளால் தினந்தோறும் சொல்லப்பட்டுவரும் சொப்பனங்களெல்லாவற்றையும் ஜயத்தையுடைய நன்றிபயக்கும் நபிகளால் மாதந்தோறுஞ் சொல்லப்பட்டுவரும் சொப்பனங்களெல்லாவற்றையும் சீர்தூக்கி நீக்குவன நீக்கியும் விரிக்க வேண்டுவன விரித்துந் தரந்தரமாகக் கூறுபாடாய் மொழிகளினது நயங்களைக் கசடறக் கற்றுணர்ந்த

தாயராகிய பர்று அவர்கட் கப்போதைக் கப்போது சொல்லிவந்தார், என்பதாம்.

என்றும் என்பது ஈண்டு நபிபெருமானார் ஜனிப்புற்றிருந்த எல்லா நாட்களையும் குறித்து நின்றது. கனவெலாம் என்புழிக் கனவினுள்ளுறைபொருள்களெல்லாவற்றையு மென்பதுகருத்து. நபிகள் அவசியமான காரியங்களிலும், மாக்களின் றகைமையாலும் வலிமையானும் ஒருவாற்றானுங் கடத்தற்கியலாவான சக்கறத்தின் கொடுமையைக் கடத்தலினும், மகத்வமுடையானென்பது தோன்ற வென்றி நன்னபி என்றார். எடுத்தும் என்பது சொற்கள் வேறாயினும் பொருள் வேறுபாடின்றிய சொற்களை. விரித்து என்பது சொற்க ளில்லையாயினும் பொருணிகழும் வழி வருவிக்கப்படுஞ் சொற்களை. அவைகள் முறையே வந்துழிக் காண்க. நபிமார் சொல்லுங் கனவு என்றதனுள் ஒன்பது மாதமென்ற சொற்கள் வருவித் துரைக்கப்பட்டன. பிறவருவனவுமுய்த்துணர்க.

(54) பெற்ற தாயருங் கனவினின்
பெற்றியைப் பிரித்தே
யுற்ற பேரொடு மனத்தொடுந்
தெளிந்தறிந் தோர்ந்து
சொற்ற தன்மகட் குறிப்பெலாங்
காண்குறத் துணிந்து
குற்ற மின்றிய முகம்மதே
பெயரெனக் குறித்தாள்.

(ப - ரை.) தாயரும்-அப்படியாகச் சொல்லப்பட்டுவந்த தாயாகிய பர்றவும், உற்ற - தனக்குநெருங்கிய, பேரொடும்-சிலபெயர்களாலும், மனத்தொடும்-சிந்தையாலும், தன்மகள் - தன்னுடைய மகளாகிய ஆமினாஅவர்கள், தெளிந்து - அறிந்து, சொற்ற-சொல்லிய, கனவின்-சொப்பனத்தினால், பெற்ற-கிடைத்த, இன் - இனிமையான, பெற்றியை-தன்மையையும், குறிப்பெலாம்-மகளின் அடை

யாளங்க ளெல்லாவற்றையும், காண்குற - தெரி யும்படியாக, பிரித்து - வெவ்வேருக்கி, அறிந்து ஓர்ந்து - ஆலோசித்து நன்குவிளங்கி, குற்ற மின்றிய - யாதொரு குறைவுமில்லாத, பெயர்- அக்குழந்தைக்கு நாமமானது, முகம்மதேஎன- மூகம்மதேயொழிய இல்லையென்று, துணிந்து - நிஷ்கரித்து, குறித்தாள்-முடிவுசெய்தாள், எ-று.

(போ-ரை.) அப்படியாகச் சொல்லப்பட்டுவந்த தாயாகிய பர்றவும் தனக்கு நெருங்கிய சிலபெயர்களா லும் சிந்தையாலும் தன்னுடைய மகளாகிய ஆமினு அவர்கள் அறிந்து சொல்லிய சொப் பனத்திஞற் கிடைத்த வினிமையான தன்மை யையும் மகளி னடையாளங்க ளெல்லாவற்றை யும் தெரியும்படியாக வெவ்வேருக்கி யாலோ சித்து நன்கு விளங்கி யாதொரு குறைவுமில் லாத வக்குழந்தைக்கு நாமமானது மூகம்மதே யொழிய இல்லையென்று நிஷ்கரித்து முடிவு செய்தாள், என்பதாம்.

பெற்றவெனும் எச்சம் பெற்றி என்பதனேடு முடிந்தது.

இனி அதை தாயர் என்பதனேடு முடிப்பர் முதலுரையார். அது பொருந்தாது ; என்னே? பெற்றதாயாரும் எனின் செவிலியு முளவாகத் தோன்று மாகலானும் அவ்வா றுற்றதாய் நாயகி அவர்கட் கில்லென்பது வெளியாதல்பற்றித் தாயார்க்குத் தினந்தின நவின்ருர்என முன்னரும் கூறியமையானும் ஆசிரியர்க் கதுடன்பா டாகாமைபற்றி என்க:

தாயரும் என்ற உம்மையான் ஆமினுவும் தமது குமாரர்க்குப் பெயர் மூகம்மதென்றே யொழிய குறித்திலர் என்பதாயிற்று. தாய ரும் என்பதன் அர் சாரியை. பெற்றி என்பது கனவின் பயன் இனேத் தென்பதை. ஆண்டு உம்மை விகாரவகையாற் ருெக்கது. ஆமினு காணுங் கனு காண்டற் கருமையாதல்பற்றிக் கேட்டற் கினியதென்ப

தாயிற்று. அதுபற்றியே "கனவின் இன்பெற்றியை" என்ருர். ஆண்டு நின்ற ஓர் இன்சாரியை. கனவினின் என்பது மூன்ரும் வேற்றுமைத் தொகை. பெயரொடும் மனத்தொடும் என்புழி ஒடு உருபுகள் ஆல் உருபின் பொருட்டாய் நின்றன. அது

"யாத னுருபிற் கூறிற் ருயினும், பொருட்சென்
மருங்கின் வேற்றுமை சாரும்."

என்றவதனு னறிக: பிரித்தே என்னுமேகாரம் இசைநிறை. பிரித்தே என்பது ஈண்டுக் காணப்பட்டுவந்த கனுக்களை யொன்ருே டொன்று சீர்தூக்கிப் பார்த்து என்பது கருத்து. **ஆமினு நபிபெரு மானு** ரவர்களைச் செனிக்கப்பெற்றநாண்முதல் நாளொருவண்ணமாய் மென்மேலும் அழகுறு வராதலான் "குறிப்பெலாம்" என்ருர். அக் குழந்தை என்பது ஏற்புழிக் கோடலால் வருவித் துரைக்கப் பட்டது. **முகம்மதே** என்பதன் ஏகாரம் தேற்றங்குறித்து நின்றது.

(55) செறிந்த வார்குழ லாமினு
வுரைத்தசெய் தியைக்கேட்
டறிந்து தாயதற் கெதிர்மொழி
கொடுத்தலு மாராய்ந்
துறைந்த வல்லிருட் சீத்தெறி
மதியென வோங்கி
நிறைந்த பேரொளி முகமலர்
தரசபா நிகழ்த்தும்.

(ப - ரை.) செறிந்த - நெருங்கிய, வார் - நீட்சி பொருந்திய, குழல் - கூந்தலையுடைய, ஆமினு - ஆமினு அவர்கள், உரைத்த - சொல்லிக்காண்பித்த, செய்தியை - கனவின் சமாசாரங்களையும், தாய் - தாயாகிய**பர்ரு**, அதற்கு - அச் சமாசாரங்கட்கு, எதிர் - ஆமினுவினது கருத்துக்கொப்ப, மொழி கொடுத்தலும் - வாக்களித்தலையும், சபா - **சபா** அவர்கள், கேட்டு - செவிகொண்டு, ஆராய்ந்து - ஆராய்ச்சிசெய்து, அறிந்து - அவற்றின் சாராம்

ஸங்களை நுகர்ந்து, உறைந்த - இறுகிய, வல் இருள் - வலியவிருளை, சீத்து - சீவி, எறி - எறியாநிற்கும், மதி என - சந்திரனைப்போல, பேரொளி - பெரியபிரகாசமானது, ஓங்கி - அதிகரித்து, நிறைந்த - நிறைந்திருக்கும், முகம் - ஆமினுவினது முகமானது, மலர்தர - பூக்கும்படியாக, நிகழ்த்தும் - சொல்லப்புகுவார், எ-று.

(போ-ரை.) நெருங்கிய நீட்சிபொருந்திய கூந்தலையுடைய ஆமினு அவர்கள் சொல்லிக் காண்பித்த கனவின் சமாசாரங்களையும் தாயாகிய பர்று வச் சமாசாரங்கட்கு ஆமினுவினது கருத்துக் கொப்ப வாக்களித்தலையும் சபா அவர்கள் செவிகொண்டு ஆராய்ச்சிசெய்து அவற்றின் சாராம்ஸங்களை நுகர்ந்து இறுகிய வலிய விருளைச் சீவி எறியாநிற்குஞ் சந்திரனைப்போலப் பெரிய பிரகாசமானது அதிகரித்து நிறைந்திருக்கும் ஆமினுவினது முகமானது பூக்கும்படியாகச் சொல்லப்புகுவார், என்பதாம்.

செய்தியை என்புழி உம்மை விகாரவகையாற் றொக்கது. மொழி கொடுத்தலும் என்பதி லிரண்டனுருபு தொக்கது. அதற்கு என்பது ஈண்டு ஆமினு வுரைத்த செய்திகளுக் கென்பது கருத்து. ஒலித்திரளாகிய வுருவே கிளவியாய்ச் சொற்றொடர்பே செய்தியாகலின் செய்தி கிடந்தவாறே யறிவுபட்டுப் பின்னர் உருகிய வங்கம்போ லொன்றுபடப் பயன் பயவுமென்பது தோன்ற "ஆராய்ந்து அறிந்து" எனக் கூறினர். அல்லதூஉம் செய்தியை ஓரோகாலத்திற் சொல்லுத லியலாமைபற்றி முன்பின்னுகவே சொல்லப்படுதலின் அவ்வழியே யறிவு பயக்கும் என்பான் "ஆராய்ந்து" என்றும், ஆராய்ந்தவழிப் பயக்கும் பயன் ஒன்றே என்பான் "அறிந்து" என்றுங் கூறினுரொன்று கொள்வாருமுளர். ஒலிவடிவா யுருவைக் காணல் செவிக்கே யாகலின் "கேட்டு" என்ருர். உறைந்த வல்லிருள் சீத்தெறி மதி என்றவதனுன் ஆமினு அவர்களின் முகத்திற்கு இவ் வான்மதி

பொருவாதென்பதூஉம், இறுகிய வலிய விருளைச் சீவி வீசுதற் கியலா வென்பதூஉம் பெறப்பட்டன. ஆகவே அவ்வாறுற்ற மதி யொன்றிலா மையான் அந் நாயகியினது முகமே யம் மதியென்பது கருத்தாயிற்று. மலர்தர வென்றவதனன் இயற்கையான பேரொளியி னழகினும் மிக்க அழகாகும்படி என்பது கருத்து. பேரொளியென்றவதனன் முகத்தை ஏற்புழிக் கோடலான் வருவிக்கப்பட்ட **ஆமினா**வுடன் கூட்டுக.

எம் மார்க்க வேதபாடையின் எழுத்துக்களில் பதின்மூன்ருவது முதலும் இருபதாவது ஒற்றடுத்து நடுவும் முதலாவது கடையுமாய் **ஷப்பா** என நின்ற பெயரைத் தமிழ் மொழியின்பம்பயக்க **சபா** எனத் திருத்தி எழுதப்பட்டது. **சபா** என்பது **அப்துர்றஹ்மானிபுனு ஒளபு** உடைய தாயாரும் **நபிபெருமானா**ரவர்களின் பிரசவத்தின் மருத்துவரும் பெருமானாரவர்களை முதன்மையாக இவ்வுலகத்தின்கண் பெறப்பட்டவருமான சீதேவித்துவமுடையவளா எனக் கொள்க.

(56) திரிந்த பாலெனச் செறுத்துப்பண்
ணேழையுஞ் சினந்து
விரிந்த தெண்டிரைக் கடலிடை
யமுதென விளங்கிச்
சொரிந்த தேன்மொழி யாமினா
வயிற்றினிற் சூலா
யிருந்த நாளெலாங் கனவலா
லொழிந்தநா ளிலையே.

இச் செய்யுண்முதல் "என்றும் பற்பலமொழிந்து சபாசலித் திருப்ப" என்ற செய்யுள் வரையும் **ஆமினா**வுக்குப் பகைநேர்ந்தவழி இவை யென்பதூஉம் அதுகொண் டஞ்சத்தகுவன **ஆமினா**க் கொன்று மில்லெனுந் துணிபுணர்த்தலுமாகச் சபா சொல்லுவான் றொடங்கின ரென நுதலுவானாயினர். இதுவெல்லாம் **நபிபெருமானா** ருதயஞ் செய்த திங்கட்கிழமை யிரவிற்கு முற்பகலாகிய ஞாயிற்றுக்கிழமை யில் **சபா** கூறுவானாயின ரெனக் கொள்க.

(ப - ரை,) பண்ஏழையும் - ஏழிராகங்களையும், செறுத்து - வெறுத்தும், திரிந்த - இயற்கைமாறிய, பால் என - பாலெனவும், தேன்என - தேனெனவும்,

சினந்து - கோபித்தும், விரிந்த - விரிவாகிய, தெள் - தெள்ளிய, திரை - அலைகளையுடைய, கடலிடை-கடலின்கணுண்டாகும், அமுதென-அமுதத்தைப்போல, விளங்கி - விளங்குதலாகி, சொரிந்த - உதிராநின்ற, மொழி - சொற்களை யுடைய, ஆமினு - ஆமினுவினது, வயிற்றினில் - உதரத்தின்கண், சூலாய் - கருப்பமென்று, இருந்த - தரித்திருந்த, நாளெலாம் - எல்லா நாட்களும், கனவுஅலால் - சொப்பனங் காண்டலேயல்லாமல், ஒழிந்தநாள் - இல்லாதிருந்த நாள், இலை - இதுகாறுமில்லை, எ-று.

(பொ-ரை.) ஏழிராகங்களையும் வெறுத்தும் இயற்கைமாறிய பாலெனவும் தேனெனவும் கோபித்தும் விரிவாகிய தெள்ளிய அலைகளையுடைய கடலின்க ணுண்டாகும் அமுதத்தைப்போல விளங்குதலாகி உதிராநின்ற சொற்களையுடைய ஆமினுவினது உதரத்தின்கண் கருப்பமென்று தரித்திருந்த எல்லாநாட்களுஞ் சொப்பனங் காண்டலே யல்லாமல் இல்லாதிருந்த நா ளிதுகாறு மில்லை என்பதாம்.

திரிந்த என்பது ஈண்டுக் காய்ச்சிய வென்பது கருத்து. என என்பது சொல்லெச்சம். பாலென தேனென என்பதின் உம்மைகள் விகாரவகையாற் றொக்கன. தேன் என்றவதனுன் பிறவாகுஞ் சுவை யெல்லாம் இழிந்தன வென்க. ஆமினுவினது மொழி தெளிவான் பாலெனினும் பொருட்சுவையாற் றேனெனினும் சினக்கு மென்பதூஉம் இசையின்பண் ஏழெனின் செறுக்கு மென்பதூஉம் இவ்வா றன்றிப் பொதுவாய்க் கடல்படு மமுதமெனின் பொருந்து மென்பதூஉங் கருத்தாயிற்று. ஆகவே ஆமினுவாய் கேட்டார் பிறர்வாய் விரும்பாரென்பது பெறப்பட்டது. பண் இனைத்தென்பான் ஏழெனத்

தொகையொடு முற்றும்மை கொடுத்து முடித்தார். கடலிடையமுதம் என்றமையான் உண்டாகும் என்றசொல் பெறப்பட்டது.

(57) உள்ள கங்குளிர்ந் தருமறை
மூன்றையு முணர்ந்தோர்
வள்ள லாகிய அப்துல்லா
வயிற்றினில் வடிவாய்ப்
பிள்ளை யொன்றுதோன் றிடுமுகம்
மதுவெனும் பெயரின்
எள்ள லின்றிய வுண்மைநன்
னபியென விசைத்தார்.

(ப - ரை.) வள்ளலாகிய - வரையாதுகொடுக்குந் தகைமையினராகிய, அப்துல்லா - அப்துல்லாவினது, வயிற்றினில் - வயிற்றின்கண், வடிவாய் - சௌந்தரியமாக, பிள்ளைஒன்று - ஒருபிள்ளையானது, முகம்மதென்று - முகம்மதென்னும் பெயரினதாய், தோன்றிடும்-இவ்வுலகின்கணுதயமாகும், எள்ளல் - அப்பிள்ளைசிந்தனை, இன்றிய - இல்லாமையான, உண்மை - உண்மையையுடைய, நல்நபிஎன - நபியென்றவதிர்ஷ்டம் பெறுமென்று, அரும் - அருமையாகிய, மறைமூன்றையும் - மூன்றுவேதங்களையும், உணர்ந்தோர் - கற்றுவல்லராயினர், உள்அகம்குளிர்ந்து - மனமகிழ்ந்து, இசைத்தார் - சொல்லினர், எ-று.

(போ-ரை.) வரையாதுகொடுக்குந் தகைமயினராகிய அப்துல்லாவினதுவயிற்றின்கண் சௌந்தரியமாக ஒருபிள்ளையானது முகம்மதென்னும் பெயரினதா யிவ்வுலகின்கண் உதயமாகும், அப்பிள்ளை சிந்தனையில்லாமையான உண்மையையுடைய நபியென்ற வதிர்ஷ்டம் பெறுமென்று

அருமையாகிய மூன்றுவேதங்களையும் கற்று வல்லராயினர், மனமகிழ்ந்து சொல்லினர் என் பதாம்.

**அப்துல்லா** வயிற்றினில் என்ப துலகவழக்குப் பற்றியதோர் கூற்று. எல்லா **நபி**களையும் போலாது என்றும் நிலைப்பாடானவும் மாற்றப்படாதவுமான **நபி** யென்பது தோன்ற எள்ளலின்றிய உண்மை நன்னபி என்றார்.

(58) சொரியும் பூந்துகட் டுடவைசூழ் சாமினிற் றோன்ற
லரிவை தன்னகத் தறிவினுந் தேர்ந்துணர்ந் தறிந்து
தெரியக் கூறிய பெரியவர் சொல்லினுந் தெளிந்து
வரிசை நேருமக் காவினில் விரைவினில் வந்தாள்.

(ப-ரை.) பூந்துகள் - மகரந்தத்தை, சொரியும் - உதிர்க்கும், துடவை - பூஞ்சோலைகள், சூழ் - சூழ்ந்த, சாமினின் - சாமிராச்சியத்தின், தோன்றல் - அரசனது, அரிவை - புதல்வியானவள், தன் அகத்துஅறிவினும் - தான்அறிந்துள்ளவாற்றானும், தேர்ந்துஉணர்ந்துஅறிந்து - ஐயந்திரிபறக் கற்றுணர்ந்த, பெரியவர் - வயதானுமுதிர்ந்தவர்கள், தெரிய - விளக்கமாக, கூறிய - சொல்லிய, சொல்லினும் - மொழிகளினானும், தெளிந்து - இச் சமாசாரத்தை விளங்கி, வரிசை - மகிமையும், நேரும் - தகுதியுமுடைய, மக்காவினில் - இந்த மக்கமாநகரத்தின்கண், விரைவினில் - அதிசீக்கிரத்திலே, வந்தாள் - வந்துசேர்ந்தாள், எ-று.

(போ-ரை.) மகரந்தத்தை யுதிர்க்கும் பூஞ்சோலைகள் சூழ்ந்த சாமிராச்சியத்தின் அரசனது புதல்வியானவள் தானறிந்துள்ளவாற்றானும் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்த வயதானு முதிர்ந்தவர்கள் விளக்

கமாகச் சொல்லிய மொழிகளினாலும் இச் சமாசாரத்தை விளங்கி மகிமையுந் தகுதியு முடைய விந்த மக்கமாநகரத்தின்கண் அதி சீக்கிரத்திலே வந்து சேர்ந்தாள், என்பதாம்.

சூழ் வினைத்தொகை.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண் மெய்ப்பொருள் காண்ப தறிவு."

என்ற வள்ளுவர்க்கிலக்காய் மெய்ப்பொருட்காண்டற்குச் சுய வறிவே சிறந்ததென்பான் கருதி "தன்னகத்தறிவினும்" எனத் தன் கல்வியறிவையே முன்னர்க்கூறி இரண்டாவதாய்ச் சொல்லறிவையு மதனோடியைத்து நோக்கின் ஏதும் பிழைந்துளேல் தெளிவாமெனுந் துணிபுவேண்டிப் "பெரியவர் சொல்லினுந் தெளிந்து" என்றாள். இத னான் அறிவு இத்தன்மைத் தென்பதூஉம் பெறப்பட்டது. வயது டையராயினும் கல்வியிலராயின் அத்துணைச் சிறப்பினரல்லரொன்பது பற்றித் "தேர்ந்து உணர்ந்து அறிந்து பெரியவர்" என்றார். ஆகவே வயது அறிவுளடங்கு மென்பதூஉம் அறிவு வயதுளடங்கா வென்ப தூஉம் பெறப்பட்டன. அறிந்த என்னும் பெயரொச்சத்து அகரவுயிர் உகரமாய்த் திரிந்து நின்றது. சாமினின், மக்காவினில், விரைவினில் என்பனவற்றின் இன்கள் சாரியை. அறிவினும் சொல்லினும் என்பன வற்றின் இன்களுமது. நேரும் என்றவதனான் வரிசை என்புழியுஉ மும் மைபெறப்பட்டது. தெளிந்து என்பது மக்காவில் அப்துல்லாவினது வயிற்றில் இத்தன்மைத்தாய நபி பிறப்பாரொன்பதை. விரைவினி லென்பது ஈண்டு விருப்பத்தின் மிகுதியை யுணர்த்தி நின்றது.

(59) வந்து நல்வழிக் குரியவ ரிருக்குமக் காவிற்
சந்த னப்புய னப்துல்லா தனைமணம் புரியச்
சிந்தை நேர்ந்தன ளவ்வுரை கேட்டுளந் திடுக்கிட்
டிந்த வூருளர் மிகுதிபேர் மணத்தினுக் கிசைந்தார்.

(ப - ரை.) நல்வழிக்கு - அப்படியாக வப்பெண் நன்மை பயக்கும் மார்க்கத்திற்கு, உரியவர் - சொந்த மாக்கப்பட்டவர்கள், இருக்கும் - வசிக்குப்படி யான, மக்காவில் - மக்காவின்கண், வந்து - வந்

துற்று, சந்தனம் - சந்தனக்குழம்பையுடைய, புயன் - புஜபலம்பெற்ற, அப்துல்லாதனை - அப்துல்லா அவர்களை, மணம்புரிய - விவாகஞ் செய்து கொள்ள, சிந்தைநேர்ந்தனள் - வாக்கு நேர்தலன்றி மனத்தோடு முடன்பட்டிருந்தனள், அவ்வுரை - அவ்வாறுற்றுளென்னுஞ் சமாசாரத்தை, இந்த ஊரவர் - இந்த ஊரிலுள்ளவர்களெல்லவரும், கேட்டு- கேள்வியுற்று, மிகுதிபேர் - மிகுந்தவர்கள், திடுக்கிட்டு - ஆ! ஈதென்ன விபரீதமெனவேங்கி, மணத்தினுக்கு- அப்துல்லா அவர்களை விவாகஞ்செய்து கொள்வதற்கு, இசைந்தார் - சம்மதித்தார்கள், எ-று.

(பொ-ரை.) அப்படியாக வப்பெண் நன்மைபயக்கும் மார்க்கத்திற்குச் சொந்த மாக்கப்பட்டவர்கள் வசிக்கும்படியான மக்காவின்கண் வந்துற்று சந்தனக் குழம்பையுடைய புஜபலம்பெற்ற அப்துல்லா அவர்களை விவாகஞ் செய்துகொள்ள வாக்குநேர்தலன்றி மனத்தோடு முடன்பட்டிருந்தனள். அவ்வாறுற்றுளென்னுஞ் சமாசாரத்தை இந்த ஊரிலுள்ளவர்களெல்லவரும் கேள்வியுற்று மிகுந்தவர்கள் ஆ! ஈதென்ன விபரீதமென வேங்கி அப்துல்லா அவர்களை விவாகஞ்செய்து கொள்வதற்குக் சம்மதித்தார்கள், என்பதாம்.

இருக்கும் அக்காவில் எனப்பிரித்து அழகிய பூஞ்சோலையில் எனப் பொருள்கூறினு மமையும்.

அது ஷர்றபல் அனம் செய்த அஹ்மதுபின்செய்த காசிமல்புகாறி எனும் மஹான் மக்கத்தைப் பூஞ்சோலையென நுதலுவானுயினு ராகலினென்க: சந்தனம் ஆகுபெயர். புயவலியி னெப்பற்றவர்

என்பது தோன்றப் புயத் **தப்துல்லா** என்னது புயன் **அப்துல்லா** என ஒருமைப்பாற்படக் கூறினர்.

இக்கருத்தறியாத முதலுளையார் புயத் தப்துல்லாதமை எனத் திருத்திக் கொள்வர்.

சிந்தை நேர்ந்தனள் என்புழி உருபும் உம்மையு மொருங்கே தொக்கன. உம்மை எச்சஉம்மை; உயர்வுசிறப் பும்மையுமாம். வாக்கு நேரலினும் சிந்தை நேரலே சிறப்புடைத்தாதல்பற்றி வாக்குநேர்ந் தனள் என்னது சிந்தை நேர்ந்தனள் என்றார். இந்த என்னுஞ்சுட்டு மக்கத்தை யுணர்த்தி நின்றது. ஈண்டு மணத்தினுக்கு விரும்புந் தகை யினரல்லாதார் விரும்பினும் பயன் பயவார் என்பதுபற்றி விரும்பார் போல்வரொன்பதூஉம் அத்துணையர் சிலரோ என்பதூஉம் தோன்ற இந்தஊரவர் மணத்தினுக்கு இசைந்தார் எனப் பொதுப்படக் கூருது "மிகுதிபேர் மணத்தினுக் கிசைந்தார்" எனப்பிரித்துக் கூறினர். ஆக வே மணத்தினுக் கிசைந்த காரணம்பற்றி மிகுதிபேர் என்றது **தறை சிகளை** யுணர்த்தி நின்றது. அப்துல்லாவின் மணத்தினுக்கு யாமிருப்ப இவள் விரும்புமேல் என்கொலோ முடிபு என்னும் அவலமுற்று ரொன்பதைத் திடுக்கிட் டென்றார்.

(60) எனக்கு னக்கென மடந்தையர்
மணத்தினுக் கிகலத்
தனக்கு நேரிலா னெழுதிய
படிதனி முடிந்து
வனக்க ருங்குழ லாமின
வெனுமட மானேச்
சினக்கும் வேற்கரத் தப்துல்லா
மணத்தொடுஞ் சேர்ந்தார்.

(ப - ரை.) மடந்தையர் - அவ்வாறுகப் பிரியப்பட்டுள்ள பெண்களெல்லாம், மணத்தினுக்கு - விவாகத் திற்கு, எனக்கு உனக்குஎன - **அப்துல்லா** எனக் காயிருப்பர் உனக்கா யிருப்ப ரென்றுசொல்லி, இகல - ஒருவருக்கொருவர் பகைக்க, தனக்கு நேரிலான் - தன் உண்மைக்கு நிகரிலாத கடவு

ளானவன், எழுதியபடி - ஆதிகாலத்திற் கற்பித்தவிதமாக, வனம் - அழகிய, கரும் - கரிய, குழல் - கூந்தலையுடைய, தனி-ஒப்பற்ற, ஆமினு எனும் - இவ் ஆமினுவாகிய, மடமானை - இளமையாகியமானை, சினக்கும் - பொருதும், வேல்-வேற்படையின், கரத்து - கையினையுடைய, அப்துல்லா - அப்துல்லா அவர்கட்கு, முடிந்து - விவாகமுடித்து, மணத்தொடும் - மணக்கோலத்தோடும், சேர்ந்தார் - தேகசம்பந்தஞ் செய்தார்கள், எ-று.

(போ-ரை.) அவ்வாருகப் பிரியப்பட்டுள்ள பெண்களெல்லாம் விவாகத்திற்கு அப்துல்லா எனக்காயிருப்பர் உனக்காயிருப்ப ரென்றுசொல்லி ஒருவருக்கொருவர் பகைக்கத், தன்னுண்மைக்கு நிகரிலாத கடவுளானவன் ஆதிகாலத்திற் கற்பித்த விதமாக அழகிய கரிய கூந்தலையுடைய வொப்பற்ற விவ் ஆமினுவாகிய இளமையான மானை பொருதும் வேற்படையின் கையினையுடைய அப்துல்லா அவர்கட்கு விவாகமுடித்து மணக்கோலத்தோடும் தேகசம்பந்தஞ் செய்தார்கள், என்பதாம்.

தனக்கு நேரிலான் என்புழி இத்தன்மைத்தவனென்பது எண்குணத்தானுமறிக: "தனக்கு நேரிலான் எழுதியபடி தனிமுடிந்து" என்றமையான் அப்துல்லாவின் மணத்தினுக்கு வருவேமெனக் குறைசிப்பெண்கள் எத்துணையாய் விரும்பினரோ அத்துணை ஆமினு விரும்பில ரென்பது கருத்தாயிற்று. ஆமினு இத்தன்மைத்தவ ரென்பது தோன்றத் தனி என்பதை யவரோடு கூட்டினும். முடித்து என்பது முடிந்து என மெலிந்து நின்றது. முடிந்து என்றமையான் விவாகம் என்பது பெறப்பட்டது. சினக்கும் என்புழிச் சினவுவேல் கரத்துஎன்றற் குரைத்தாங்குரைக்க. முடிந்து எனு மெச்சம் சேர்ந்தார் எனும்

முடிபேற்றது. மணத்தொடுஞ் சேர்ந்தார் என்றமையான் அன்றிரவே தேகசம்பந்தஞ் செய்தார் என்பது கருத்தாயிற்று. இனி யொருவாற்ருன் அன்றிரவே நபிபெருமானுர் ஜனிப்பாயினுர்கள் என்பதூஉம் பெறப்படு மென்க: பிறவருவன வெல்லாம் உய்த்துணர்க.

(61) அந்த வாறறிந் தரிவைய ரிந்நக ரனைத்து
மிந்து வாணுத லாமினு மனைவெறுத் திருந்தார்
கந்த மென்குழல் கருப்பமு முதிர்ந்தன காலம்
வெந்து வானவர் பிறரிலை யென்கொலோ விளைவே.

(ப - ரை.) அந்தவாறு - அந்தவிதமாக நடந்தவிஷயங்கள், அனைத்தும் - யாவற்றையும், இந்நகர் - இந்நகருள்ள, அரிவையர் - துறைசிப்பெண்கள், அறிந்து - கேள்வியுற்று, இந்து - மூன்ரும்பிறைபோலும், வாள் - பிரகாசம்பொருந்திய, நுதல்-நெற்றியினையுடைய, ஆமினு - ஆமினுவினது, மனை - வீட்டை, வெறுத்திருந்தார் - வெட்கத்தினுல் வெறுத்திருந்தார்கள், கந்தம் - வாசனைபொருந்திய, மென் - மென்மையான, குழல் - கூந்தலையுடைய ஆமினுவினது, கருப்பமும் - சூலும், காலமும்-அச் சூலி னுட்களும், முதிர்ந்தன - தேறிவிட்டன, வெந்துஆனவர் - சுற்றத்தார்கள், பிறரிலை - வேறு கிடைப்பதரிது, விளைவு - அப்படியாயினும்உண்டாகுவது, என்கொலோ - என்னையோ ஒன்றுமில்லை, எ-று.

(போ-ரை.) அந்தவிதமாக நடந்தவிஷயங்கள் யாவற்றையுமிந் நகருள்ள துறைசிப்பெண்கள் கேள்வியுற்று மூன்ரும்பிறைபோலும் பிரகாசம்பொருந்திய, நெற்றியினையுடைய ஆமினுவினது வீட்டை வெட்கத்தினுல் வெறுத்திருந்தார்கள், வாசனை பொருந்திய மென்மையான கூந்தலையுடைய

ஆமினுவினது சூலும் அச்சூலி னுட்களும் தேறி விட்டன, சுற்றத்தார்கள் வேறுகிடைப்ப தரிது, அப்படியாயினும் உண்டாகுவது என் னையோ ஒன்று மில்லை, என்பதாம்.

அனைத்தும் என்றவதனுன் அன்றிரவே வீடுகூடினர் என்பதை யும் அறிதலாயின வென்பது கருத்தாயிற்று. இங்ஙக ரரிவைய ரனைத் தும் எனற்பாலது "அரிவைய ரிங்ஙக ரனைத்தும்" எனப் பிறழ்ந்து நின்றது. இந்துவாணுத லென்ப துவமைத்தொகை. இந்தென்பது ஈண்டு நுதலுக் குவமையாதல்பற்றி மூன்றும்பிறை யென்பதாயிற்று. ஆமினு மனையைக் குறைசிப்பெண்கள் ஏன்வெறுத்தார்? எனு மவா வான் வெட்கத்தினுலென்ற சொல் பெறப்பட்டது. மென்குழல் அன்மொழித்தொகை. கருப்பமும் என்றமையான் காலமும் என உம்மை பெறப்பட்டது. வெந்து வானவர் பிறரிலை யென்றமையான் யானேயொழிய பிறரிலை என்பதாயிற்று. என்கொலோ என்புழிக் கொல் அசைநிலை. ஓகாரம் எதிர்மறை. அப்படியாயினும் என்பது சொல்லெச்சம். ஈற் றேகாரம் மீற்றசை.

இனி இச்செய்யுட்குப் பொருள்கூறவறியாது அரிவைய ரிங்ஙக ரனைத்தும் எனக் கூட்டி விவாகத்திற்கு மனமிசைந்திருந்த மற்றையபெண்களும் இம் மக்கமா நகரமுழுவதும் என வாளாக் கூறுவர் முதலுரையார். இவர் விவாகத்திற்கு மனமிசைந்த பெண்க ளொழிய நகரமெல்லாம் வெறுத் தற்கு முறை யன்றென்பதை யறிந்திலர்போலும். இது வேயுமன்றி கருப்பமும் காலமும் முதிர்ந்தன வெனப் பன்மையாற் கூறிய ஆசிரியர்கருத்தை யறியாது அவரி னும் மிக்க கற்றுர் போன்று கருப்பமும் என்பதன் உம் மையைக் காலம் என்பதனேடு படுத்தியும் முதிர்ந்தன வென்பதை முதிர்ந்தது எனத் திருத்தியும் தமதறியாமை யை விளக்கிப் போந்தார். இதூஉம் நிறைந்த பேரொளி முகமலர்தர சபாநிகழ்த்தும் என்புழிப் பெரிய பிரகாச நிறைந்த முகமலரும்படி சபா என்னும் பெண் சீர்தூக்கிச் சொல்லும் எனப் பொருள்கூறிப் போந்தவர், தாமே, "என்கொலோவிளைவே" என்றற்கு அதனு லினி யுண்டா

கஎ

குவதென்னே! என வரைந்து சொல் என்பது ஐயங் குறித்து நின்றதென்பர். இங்ஙனம் ஐயநிகழுமேல் ஆண்டுக் கூறியமுகத்தின்மலர்ச்சி கேடுற முடியுமென்பதை இயற் கையானே மறப்பெனும் பகைவன் கைப்பட விடுத்தார்போ லும். பிறவரும் விகர்ப்பங்களை யவருரையானே அறிக.

(62) மண்ண ருந்திலள் புளிப்பையும்
விரும்பிலள் வயினுே
யுண்ணி ரந்தில மெய்பல
வருந்தில வுதரக்
கண்ணி ருந்தபூப் பொன்றுமே
கண்டில கனிமென்
பண்ணி ருந்தவாய் வெளுத்தில
பலன்பெறும் படியே.

(ப - ரை.) பலன் - ஆமினு எல்லாபிரயோசனத்தையும், பெ றும்படி - அடைவதற்காகவேண்டி, மண் - நொய்மையான களிமண்ணினை, அருந்திலள் - தின்றிலள், புளிப்பையும் - புளித்தலைச்செய்யும் வஸ்துக்களையும், விரும்பிலள் - விரும்பியருந் திலள், வயின்உள் - வயிற்றி னுட்புறத்தும், நோய் - கருப்பத்தினுலுண்டாகும் வருத்தமா னது, நிரந்தில - கலந்திலது, மெய் - சரீரமும், வருந்தில - இடைவுற்றிலது, உதரம்கண்-வயிற் றின்கண், இருந்த - இருத்தற்பாலதான, பூப்பு- மலர்ச்சிவடிவில், ஒன்றும் - ஒன்றேனும், கண் டில - இதுகாறுந்தோன்றிலது, கனி - கனி போலுமினிய, மென் - நுட்பமாகிய, பல் - பல வகைப்பட்ட, பண் - இசைகள், இருந்த - குடி யிருக்குமென்னத்தக்க, வாய் - செவந்தவாயா னது, வெளுத்தில - வெளுப்புற்றிலது, எ-று.

(போ-ரை.) ஆமினா எல்லா பிரயோசனத்தையும் அடைவதற்காக வேண்டி நொய்மையான களிமண்ணினைத் தின்றிலள், புளித்தலைச்செய்யும் வஸ்துக்களையும் விரும்பியருந்திலள், வயிற்றினுட்புறத்தும் கருப்பத்தினாலுண்டாகும் வருத்தமானது கலந்திலது, சரீரமு மிடைவுற்றிலது, வயிற்றின் கண் ணிருத்தற்பாலதான மலர்ச்சி வடிவில் ஒன்றேனு மிதுகாறுந் தோன்றிலது, கனி போலு மினிய நுட்பமாகிய பலவகைப்பட்ட விசைகள் குடியிருக்கு மென்னத்தக்க செவந்த வாயானது வெளுப்புற்றிலது என்பதாம்.

மண்ணருந்தல் கருப்பக்காலத்து மாதர்க்கு வழக்க மாயினும் ஆமினா அதுவழங்காளென்பான் "அருந்திலள்" என்றார். புளியருந்தல் ஆஉ மகஉ விருபாலர்க்கும் யாண்டும் வழக்கமென்பதூஉம் கருப்பக்காலத்து மாதர்க்கு ஏனையவஸ்துவினும் புளிப்பின்மேலே மிக்க விருப்பவென்பதூஉம் வெளியாதல்பற்றி அருந்திலள் என்னாது விரும்பிலள் என்றார். அதனானே விரும்பி யருந்திலளென்பதே கருத்தாயிற்று. புளிப்பையும் விரும்பிலள் என்ற உம்மையான் மண்ணருந்தல் சூற்கொண்ட மாதர்களிற் சிலர்க்கு வழக்கமென்பதூஉம் புளிப்பு எல்லார்க்கு மின்றியமையா வழக்கமென்பதூஉம் பெறப்பட்டன. வயிற்றி னுட்புறம் மேற்புறத்தினும் நொய்மையவாகலின் வயினே யுள்ளினு கிரந்தில என்புழி உம்மை விகாரவகையாற் றொக்கது. மெய்வருந்தல் இளஞ் சூலிடத்தென்பது வெளி. அதனை மயக்கை எனவழங்குவர். உதரக்கண்ணிருக்கும் பூப்பென்னாது இருந்த பூப்பென்றமையான் அக்குறி ஏனையகுறிபோலாகாது எவர்க்கு மின்றியமையா தென்பான் இறந்தகாலத் தோதினார். அது கர்ப்பமுதிர் காலத்து வயிற்றின் கீழ்ப்புறம் வரிவடிவாய்ப் பரந்து தோற்றுமென்க: ஈண்டு அதைச் சொட்டியென வழங்குவர்.

இக் கருத்தறியாது முதலுரையார் மாத ருதரத்தைக் கூறுவர். அது ஒன்றுமே கண்டிலவென்றமையான் ஆசிரியர்க் குடன்பாடாகாதென மறுக்க: இதுவேயுமன்றி உதரக்கண்ணி

ருந்த பூப் பொன்றுமே கண்டில வென்பதை மெய்பல வருந்தில வென்றற்குப் பிற்றை நிறுத்தினமையான் முன்னையது இளஞ்சூற் காலத்தது, பின்னையது முதிர்சூற் காலத்தது, என முறைபட நிறீஇனு ரென்பதூஉம் மாத ருதரம் சூலின் முதற்காலத்தேயே காணுதுபோதல் வெளியாதலின் அது கூறுராயினர் ஆசிரியரென்பதூஉம் பெறுதலின் அவருரை போலியாமென மறுக்க. இனி மாத ருதரம் சூலின் முதற்காலத்தேயே இல்லாதுபோதல் எல்லாக்கு மியற்கை யாகலின் ஆமினு அவர்கட்குத் தகைமையான் வழக்குப் போலாதிருத்தல் வேண்டுமெனத் தவ றுளம்பற்றிக் கடாநிகழ்த்துவரேல் உதரம் மாதர்க்கு மறைத்துக் கூறும் மரபுடைத் தாதல்பற்றியும் அஃது காணுதுபோதலே அழகுடைமைபற்றியும் அது கடாநிகழ்ந்த வழி படுதல் தகையன்று. ஆகலான் பொருந்தா தென்க. பூப்பு ஆகுபெயர்.

கனி என்பது இனிமை குறித்துப் பண்ணிற் குரிமைபூண்டு நின்றது. நிரந்தில, வருந்தில, கண்டில, வெளுத்தில வென்பன து விகுதி கெட்டு நின்றன. வாய்வெளுத்தில வென்றமையான் செவந்தவாய் என்பதாயிற்று. ஒன்றுமே என்புழி ஏகாரம் தேற்றங்குறித்து நின்றது. மேலேகூறியவாறு **நபி**களாலும் **மலக்கு**களாலும் **ஆமினு**கனவில் சொல்லப்பட்டு வந்தனவெல்லாம் **நபி**பெருமானுரவர்கள் இத் தன்மைத்தவ ரென்பதுபற்றியேயாயினும் அது **ஆமினு** உளி நிகழ்தல் ஒன்றேபற்றிச் சிலர்க் குறும் ஐயம் தொலைப்பான் மகவேக் குறித்த உலகுவழக்கத்துளவாகிய மண்ணருந்தல் புளிப்புவிரும்பல் முதலியனவெல்லாம் இல்லாமையாயினவெனும் வியப்பினுனே எல்லா வதிர்ஷ்டத்தையும் பெற்றுர் **ஆமினு**வென்பது தோன்றப் பலன்பெறும்படியே எனச் **சபா**கூறியவா றெனக் கொள்க.

இனி பலன்பெறும்படியே என்புழி "மகவையீனும் பலனைப் பெறும்படியே" என்பர் முதலுரையார். அதுபொருந்தாமை பின்னர்க் கூறுதும் ஆண்டுக் காண்க.

(63) சிறுத்த மெல்லிடை பருத்திருந் திலதிரு வுதரம்
பொறுத்து வீங்கில வுந்திமேற் புடைத்தில பொருப்

கறுத்தி ருந்தில பசுநரம் பெழுந்தில கவின்கள் [புங்
வெறுத்தி ருந்தில கருப்பமென் றழகுறும் விதமே.

(ப - ரை.) சிறுத்தமெல்லிடை அன்றியும் மிக்க மெலிவாகிய விடையும், பருத்திருந்தில - புடைத்திருந்திலது, திரு - தெய்வீகத்துவ, உதரம் - வயிறும், பொறுத்தும் - பாலனைச்சுமந்தும், வீங்கில - வேண்டியவளவு மிகுத்திலது, உந்தி - நாபியும், மேல்புடைத்தில - மேலேஎழும்பித்தோன்றிலது, பொருப்பும் - தனபாரங்களும், கறுத்திருந்தில - முகத்திற் கறுப்புற்றிருந்தில, பசுநரம்பு எழுந்தில - பசிய நரம்புகளும் வேண்டிய விடங்களி லுண்டாயிருந்தில, கவின்கள் - அவயவத்தினழகும், வெறுத்து இருந்தில - வெறுப்புற்றிருக்கவில்லை, கருப்பம் என்று - அங்ஙனமெல்லாம் ஏனையோர்க்குச்சூலென, அழகுறும் - களிப்புண்டாக்கும், விதம் - அத்தாட்சி, எ-று.

(பொ-ரை.) அன்றியும் மிக்க மெலிவாகிய விடையும்புடைத்திருந்திலது, தெய்வீகத்துவவயிறும் பாலனைச் சுமந்தும் வேண்டியவளவு மிகுத்திலது, நாபியும் மேலே எழும்பித்தோன்றிலது, தனபாரங்களும் முகத்திற் கறுப்புற்றிருந்தில, பசிய நரம்புகளும் வேண்டியவிடங்களி லுண்டாயிருந்தில, அவயவத்தி னழகும் வெறுப்புற்றிருக்கவில்லை அங்ஙனமெல்லாம் ஏனையோர்க்குச் சூலெனக் களிப்புண்டாக்கு மத்தாட்சி யென்பதாம்.

சிறுத்தலும் மெலிதலும் ஒரேபொருளினவாகலின் ஒன்று மிகுதி குறித்துநின்றது. ஆமினாவினது வயிறு இத்தன்மைத்தென்பது தோன்ற வயிற்றைத் திருஎனும் அடைகொடுத்துக் கூறினர். திருவுதரம் வீங்கில வென்னாது பொறுத்து வீங்கில வென்றமையான் ஆமினா

கர்ப்பவதியே எனு முறுதி சபாவுக்குள தென்பது கருத்தினுண்ணறி வார்க்கு மறைந்திரா, வாகவே பொறுத்து வீங்கில வென்புழிப் பொறுக்காத விடத்தன்றிப் பொறுத்தவிடத்தும் வீங்கில வென்பது கருத்து. உம்மை எச்ச உம்மை அது,

"கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு."

என்ற வள்ளுவரின் உம்மையானு மறிக: திருவுதரம் பருத்தில புடைத்தில என்னாது வீங்கில வென்றமையான் அது உறுப்பினளவா தல்பற்றி வேண்டியவளவென்ற சொற்கள் பெறப்பட்டன. பொருப் புத் தனங்களுக் குவமையாதல்பற்றி உவமேயமான தனம் உவமை யாற் கூறப்பட்டது. கறுத்திருந்தில வென்றமையான் கறுத்தற் குரிய முகம் வருவிக்கப்கட்டது. நபி பெருமானார் கருப்பத்தி லமைவுற்ற நாள் தொடங்கி ஆமினாவின் அவயவத் தழகு மிகுந்தே போந்த தென்பது முதனூன் முறையாதல்பற்றிக் கவின்கள் குறைந்திருந்தில வென்னாது அம் முறைப்பொரு டெரிப்ப "வெறுத்திருந்தில" வென் றார். ஆகவே யருத்தாபத்தியான் உவப்புற விருந்தன வென்பது கருத்தாயிற்று. உம்மைகள் விகாரவகையாற் றொக்கன.

(64) என்றும் பற்பல மொழிந்துச
பாசலித் திருப்ப
மன்ற லங்குழ லாமினா
கருப்பமும் வலியு
மின்று தோன்றுவ தெனவெடுத்
தியம்பின ரிலங்கும்
வென்றி வேல் விழிமடந்தையர்க்
கிவைசொலி விடுத்தார்.

(பு-ரை.) என்றும் பற்பல - மேலேகூறியனவேயுமன்றி வேறு அநேகவிதங்களும், சபா-சபாஅவர்கள், மொழிந்து-சொல்லிக்கொண்டு, இருப்ப-இருக் கையிலே, மன்றல் - வாசனைபொருந்திய, அம்-அழகிய, குழல்-கூந்தலையுடைய, ஆமினா-நாயக

மாகிய ஆமினுஅவர்கள், சலித்து - சரீரத்தை யசைத்து, இன்று - இப்பொழுது, தோன்றுவது - எனக்குத்தெரிவதானது, கருப்பமும் - சூலும், நோயும்என - அதன்வருத்தமுமென்று, எடுத்து - குறிப்பிட்டு, இயம்பினர் - தாயர்முதலாயினர்மாட்டுச் சொல்லினர், இலங்கும் - பிரகாசியாநிற்கும், வென்றி - வெற்றியைச்செய்யுங் கூரிய, வேல் - அயில்போலும், விழி - கண்ணிணையுடைய **பர்று** எனுந்தாயானவர், மடந்தையர்க்கு - பந்துத்துவ முடையார்க்கெல்லாம், இவை - இவ்விஷயங்களை, சொலிவிடுத்தார் - சொல்லித் தூதனுப்பினர், எ-று.

(போ-ரை.) மேலேகூறியனவேயுமன்றி வேறு அநேகவிதங்களும் **சபா**அவர்கள் சொல்லிக்கொண்டிருக்கையிலே வாசனைபொருந்திய அழகிய கூந்தலையுடைய நாயகமாகிய ஆமினுஅவர்கள் சரீரத்தை யசைத்து இப்பொழுது எனக்குத்தெரிவதானது சூலும் அதன் வருத்தமுமென்று குறிப்பிட்டுத் தாயர் முதலாயினர் மாட்டுச் சொல்லினர் பிரகாசியாநிற்கும் வெற்றியைச் செய்யுங் கூரிய வயில்போலுங் கண்ணிணையுடைய **பர்று** எனுந் தாயானவர் பந்துத்துவ முடையார்க்கெல்லா மிவ்விஷயங்களைச் சொல்லித் தூதனுப்பின னென்பதாம்.

என்றும் என்ற உம்மையான் பற்பலவும் என உம்மை பெறப்பட்டது. பற்பல வென்றவதனுன் பிறவருவனவெல்லாங் கொள்க. சலித்து என்புழித் தேகம் பெறப்பட்டது. அதை ஆமினுவுடன் கூட்டுக.

இனி **சபா**வுடன் கூட்டி இடர்ப்படுவர் முதலுனாயார். என்னை? 55-வது செய்யுளில் "நிறைந்த பேரொளி முகமலர்தர

சபாநிகழ்த்தும்" என்றதுமுதல் "என்றும் பற்பலமொழிந் து சபா" என்ற திருவாய்ச் சபாவினது கூற்றுதல்பற்றி சலித்து என்பதைச் சபாவுடன் கூட்டுமேல் முகமலர்ச்சி கேடுறுவதான் இந்நூ லிழுக்கி யுறுமாதல்பற்றி யவருரை யிடர்ப்படுமென்றறிக. இதுவேயுமன்றி சபாநாயகி நபி பெருமானுர் அப்துல்லாவினிடத் தவதாரமாவர் என்பதை வேதியர்வாய்க் கேட்டதுமன்றி அதுபற்றி நிகழ்ந்தனவெல் லாம் பார்த்தலானும் ஆமினுவினது கனவின் பெற்றியை யோர்தலானும் பெருமானுரது தகுதி இத்தன்மைத்தென மதித்த மனத்தினையுடைய ரென்ப வாகலின் ஆமினு தாய ரோடு சம்பாஷித்தனவும் தாயதற் குரைத்தனவும் கேட் டிருந்து ஆமினு மகிழும்படி யிதுகாறும் ஒருவாறு தெரித்து வந்தனவெல்லாம் கவலைவேண்டாமென்ப தல்லது வியசு னித்தலன்று எனப் பயிற்றி "என்கொலோ விளைவே" "பலன்பெறும்படியே" என்றற்கு முதலுரையார் கூறுவன வெல்லாம் பொருந்தாதென மறுத்து அவருரை பெரும்பா லுந் தவறென்க.

பிள்ளையின் புடைபெயர்ச்சியாகிய திரும்புதன்முதலிய குறிக ளைக் "கருப்பமும்" என்றது. அதனுல் நிகழும் நலியை யதற்குப் பிற ரைக் கூறினுர். இன்று "தோற்றுவ" தென்னுது தோன்றுவதென் றமையான் அவைகள் இனி மிகைக்குமென்பதூஉம் எடுத் தியம்பின ரென்றவதனுன் அதில் ஐயமில் லென்பதூஉங் கருத்தாயின. வென்றி வேல் என்புழி அதற்குரிய கூர்மை பெறப்பட்டது. வேல்விழி என் பது உவமை நிலைக்களத்துப்பிறந்த வன்மொழித்தொகை. இயம்பி னர் என்புழித் தாயர்க்கென்பது உரித்தாற் பெறப்பட்டது. மடந் தையர்க்கென்றது ஈண்டுக் தூறைசிப்பெண்களை யுணர்த்தி நின்றது. இவை என்பது ஈண்டு ஆமினுவினது சொற்களை.

இச்செய்யுட்கு முதலுரையார் கூறுவனவெல்லாம் பொருந் தாமை யவருரையானே காண்க.

(65) உரைத்த வாசகங் கேட்டலு
மந்நக ருறைவோ
ரிரைத்த டங்கலு மொருமொழிப்
படவெடுத் திசையா

வரைத்த னிக்கொடி யாமினு
மனையினின் மறந்துங்
கரத்த லாயினும் வருவதில்
லெனக்கழ றினரே.

(ப - ரை.) உரைத்தவாசகம் - தாயரான பர்று விடுத்த தூதுவர் சென்று சொல்லிய சமாசாரத்தை, அங்நகர் - அம் மக்கமாநகரத்தின்கண், உறைவோர் - தரிக்கப்பெற்றபெண்கள், கேட்டலும் - கேள்வியுற்ற மாத்திரத்திலே, இசையா - அம்மொழிக்குப் பொருந்தாது, இரைத்து - ஆரவாரித்து, அடங்கலும் - அப்பெண்களெல்லோரும், ஒருமொழிபட - ஓரேவாசகிகளாக, வரை - மலைமேலுற்ற, கொடி-கொடிபோலும், தனி-ஒப்பற்ற, ஆமினு மனையினில் - ஆமினு விருக்கப்பட்ட மனையினிடத்து, மறந்தும்-அசதியிலேனும், கரத்தல்ஆயினும் - அல்லது ஆங்கொளித்தல் ஆவசியகமாயினும், வருவது இல் என - வருதலைச் செய்தலில்லையென்று, எடுத்து - திட்டமாய், கழறினர் - சொன்னார்கள், எ-று.

(பொ-ரை.) தாயரான பர்று விடுத்த தூதுவர்சென்று சொல்லிய சமாசாரத்தை யம் மக்கமாநகரத்தின் கண் தரிக்கப்பெற்ற பெண்கள் கேள்வியுற்ற மாத்திரத்திலே யம்மொழிக்குப் பொருந்தாது ஆரவாரித்து அப்பெண்க ளெல்லோரும் ஓரே வாசகிகளாக மலைமேலுற்ற கொடிபோலும் ஒப்பற்ற ஆமினு விருக்கப்பட்ட மனையிடத்து அசதியிலேனு மல்லது ஆங்கொளித்த லாவசியகமாயினும் வருதலைச் செய்தலில்லையென்று திட்டமாய்ச் சொன்னார்கள் என்பதாம்.

துறைசிகளின் பிதாக்களே மூலகாலத்திற் காடுகொன்று குடியேறலால் மக்கமென விளங்கிற் முதல்பற்றி அவனா அங்கராரொன்னுது "அங்கருறைவோர்" என்றார். ஆமினு கர்ப்பவதியாய் அது பயக்குங்காலத்தின ராயினர் எனுஞ் சொற்கேட்கக் துறைசிக் குலத்தார்க்குப் பொருத்தமில்லென்பான் "இளைத்து" என்றார். துறைசிக்குலத்தாரில் மிக்க வைஸ்வரியவான்களும் அப்துல்லாவினது விவாகத்திற்கு மனமிசைந்து உனக் கெனக்கென விகலிசின்றும் யாதும் பயன் பயவாது (கற்பனையாற்றலினானே) ஆமினுவே யவர்க்குத் தகைமையுடையா ரென்பதுபோல முடிந்தவை முடிந்தனவாகலின் அப்பெண்களுக்குற்ற மனவலியான் இழித்தற் பொருட்டாய் "வனைத்தனிக் கொடியாமினு" என்றும் "கரத்தலாயினும்" என்றுங் கூறினர்.

இனி வனைத்தனிக்கொடி யாமினுமனை என்புழி ஆமினுவைப் புகழ்ந்து கூறினுரெனக் கொள்வாருமுளர். இஃதே முதலுரையார்க்கு முடன்பாடுபோலும். குறைசிகள் ஆமினு அவர்கட்கு மிக்க விரோதிகளேயுமன்றி வமிசத்தா லொரே தன்மைத்தவராகலின் அவ்வாறு சிறப்பித்துக் கூறல் அவர்க்குப் பொருந்தாதென மறுக்க: பிறவருவனவெல்லா முய்த்துணர்க. ஏகாரம் ஈற்றசை.

(66) உற்ற வாய்மையைக் கேட்டலு மாமினு வுலைந்து
குற்ற மேதுநம் மிடத்தென மனத்தினிற் குறித்துப்
பெற்ற சூல்வலி யடிக்கடிப் பெரிதெனப் பதறி
வெற்றி வாட்கரத் தப்துல்முத் தலிபுக்காள் விடுத்தார்

(ப - ரை.) உற்றவாய்மையை - துறைசிகளிடத் திருந்துவந்த மொழியை, கேட்டலும் - கேள்வியுற்றவுடனே, ஆமினு-ஆமினு அவர்கள், நம்மிடத்து-அவ்வாறு அப்பெண்கள் குறைகூறற் கெங்களிடத்தில், குற்றம்ஏதுஎன - உளவாகிய குறை யென்னவென்று,மனத்தினில்-அகத்தினுனே,குறித்து-தியானித்தும், உலைந்து - ஒன்றுங்காணுமையால் வருந்தி, பெற்ற - தாமடைந்திருக்கின்ற, சூல்-கருப்பத்தினது, வலி - வருத்தமானது, அடிக்கடி -

காணுந்தோறும், பெரிதென - பெரிதாய்த்தோற்றுகின்றதென, பதறி - நடுங்கி, வெற்றி - வெற்றியைச்செய்யும், வாள் - வாளைச்சுமந்த, கரத்து- கரத்தினையுடைய, அப்துல்முத்தலிபுக்கு - அப்துல்மூத்தலிபு எனும் தம்மாதுலர்க்கு வரும்படி, ஆள்விடுத்தார் - ஓரடிமையை யனுப்பினார்கள், எ-று.

(போ-ரை.) துறைசிகளிடத்திருந்துவந்த மொழியைக் கேள்வியுற்றவுடனே ஆமினா அவர்கள் அவ்வாறு அப்பெண்கள் குறைகூறற் கெங்களிடத்திலுளவாகிய குறை யென்னவென்று அகத்தினுனே தியானித்தும் ஒன்றுங் காணாமையால் வருந்தித் தாமடைந்திருக்கின்ற கருப்பத்தினது வருத்தமானது காணுந்தோறும் பெரிதாய்த் தோற்றுகின்றதென நடுங்கி வெற்றியைச்செய்யும்வாளைச்சுமந்த கரத்தினையுடைய அப்துல்மூத்தலிபெனுந் தம் மாதுலர்க்கு வரும்படி யோரடிமையை யனுப்பினார்கள், என்பதாம்.

உற்றவாய்மை என்பது துறைசிப் பெண்கள் மறுத்துச் சொல்லிவிடுத்த சொற்களை.

இனி அது ஊர்ப்பெண்கள் சொல்லி விடுத்தசொல் என்பர் முதனூலாயார், அது பொருந்தாமை முன்னர்க் கூறினும்; ஆண்டுக் காண்க:

கேட்டலும் என்பது ஈண்டு அவ்வுழை யிருந்தார்மே னின்றது. நம்மிடத்தி லென்றமையான் ஆமினாவைச்சார்ந்த ஒருவரானுங் குற்றம் நடந்திலை யென்பது கருத்தாயிற்று. மனத்தினில் என்புழி ஐந்தனுருபு கருவிப்பொரு ளுணர்த்தும் ஆல் உருபின் பொருளினின்றது. உலைந்து என்றமையான் குற்றமொன்றுங் காணாமையாலென்ற சொற்கள் பெறப்பட்டன. மாதுலர்க் காள்விடுத்தா ரென்னுது "அப்துல்

முத்தலிபுக் காள்விடுத்தார்" என்றமையால் ஈண்டு மாதுலனை வருகவென ஆள்விடுக்குமாறு தாயனை ஏவத் தாயர் ஆள்விடுத்தாரென்பது கருத்தாயிற்று. ஆள் என்றமையான் அடிமை என்பதூஉம் ஆண் என்பதூஉம் பெறப்பட்டன.

இனி கேட்டலும் என்பதை **ஆமினு**வுடன் கூட்டி **ஆமினு**வே **அப்துல்முத்தலிபு**க் காள்விடுத்தாரென்று பொருண்முடிப்பது சிறப்பென்பாருமுளர். இது முதலுனையார்க் குமுடன்பாடுபோலும். துயருழைப்பட்டார்க்கல்லது அஃதாற்றலறித லரிதென்பதூஉம் பொருத்தற்பாலனவாஞ் சொற்செயலாதிகளுந் துயருழையுற்ருர்க்குக் கழிய பெரியனவாமென்பதூஉம் வெளி. ஆகவே மகிழ்வினுழை யிருந்தாராயினுஞ் சகித்தற் கரியனவாகக் **தூறைசிப்** பெண்களாற் செவி சுடச்சுடச் சொலிவிடுத்த வாய்மையைக் கேட்டாரில் **ஆமினு**வு மொருவராதலின் அவர்க் கதுபொருத்தற் கியலாது மாதுலனை வருகவென்று ஆள்விடுக என முன்னமே நுதலுவா னுயினுரன்றி ஆள்விடுத்தா ரென்பதன்று. இக் கருத்தேபற்றி ஆசிரியர் **அப்துல்முத்தலிபு**க் காள்விடுத்தாரென்ருர் எனக் கூறிப் பிறர் கூறுவனவெல்லாம் பொருந்தாவென மறுக்க. இங்ஙனம் விரித்துக் கூறிற் பல்குமென நிறுத்தினும் ஆகலின் உய்த்துணர்க.

(67) சருவு வேல்விழி மடந்தையர்
விடுத்தவர் சாற்றக்
குரிசில் கேட்டவ ரவர்க்கெலாம்
வகைவகை கூறி
வருக வென்றலுங் கொடியிடைப்
பிடிநடை மடவா
ரொருவ ரும்மவண் புகுவதில்
லெனமறுத் துரைத்தார்.

(ப - ரை.) சருவு - கொளுவிப்போதலான, வேல் - வேல்போலும், விழி-கண்களையுடைய, மடந்தையர் - **ஆமினு**வினல், விடுத்தவர் - அநுப்பப்பட்டவர்,

சாற்ற - சென்றுங்குரைப்ப, குரிசில் - பெருமை யிற்சிறந்த அப்துல்மூத்தலிபானவர்கள், கேட்டு - கேள்வியுற்று, கொடி - கொடிபோலும், இடை - இடையினையும், பிடி - பெண்யானைபோலும், நடை - அசைந்தநடையினையுமுடைய, மடவார் - துறைசிப்பெண்களில், அவரவர்க்கு -. அவ்வவர் கட்கு, வகைவகை - தரந்தரமாக, எல்லாம் - சொல்லவேண்டுவனவெல்லாம், கூறி - சொல்லி, வருகவென்றலும் - நீவிர்எம்மனையகத்துவருக வேண்டுமென்றமாத்திரத்திலே, ஒருவரும்-அப் பெண்களில் ஒருவராயினும், அவண் - ஆங்கு, புகுவது - வருதலைச்செய்வது, இல்என - ஒரு காலத்துமில்லையென்று, மறுத்து - குரிசிலது விருப்பத்திற்கெதிர்மறுத்து, உரைத்தார்-சொல் லினர், எ-று.

(போ-ரை.) கொளுவிப்போதலான வேல்போலுங் கண் களையுடைய ஆமினாவினா லனுப்பப்பட்டவர் சென்றுங்குரைப்பப் பெருமையிற்சிறந்த அப் துல்மூத்தலிபானவர்கள் கேள்வியுற்றுக் கொடி போலும் இடையினையும் பெண்யானைபோலும் அசைந்த நடையினையுமுடைய துறைசிப்பெண் களில் அவ்வவர்கட்குத் தரந்தரமாகச் சொல்ல வேண்டுவனவெல்லாம் சொல்லி நீவிர் எம் மனையகத்து வருகவேண்டுமென்ற மாத்திரத் திலே யப்பெண்களி லொருவராயினு மாங்கு வருதலைச்செய்வது ஒருகாலத்துமில்லையென்று குரிசிலது விருப்பத்திற் கெதிர்மறுத்துச்சொல் லினர் என்பதாம்.

கொளுவிப்போதல் ஈண்டு உயிரைமாட்டி யுடலைமாய்த்தல். வேல் விழி, கொடியிடை, பிடிநடை என்பன உவமத்தொகை. மடந்தையர் என்பது மூன்றனுருபுதொக்க உயர்வுபற்றிவந்த விகுதி ஏற்று நின்றது. குரிசில் என்பது ஈண்டுக் குலத்தின் சிறப்புப்பற்றிய கூற்று. எல்லாம் வகைவகை கூறிவருகவென்றலும் என்றமையான் அஃது ஆமினா மனையன்று எம்மனையாகலின் வருகவெனவுங் கூறினாளெனும் ஏது அமைந்து நின்றதென்க. எலாம் என்பது துறைசிப்பெண்கள் வரல்வேண்டு மென்றவிடத்துள்ள முயற்சிகளைச் சிறிதுஞ் சிதையாது செய்தாளென்பது. அவண் வருவதில் என்றமையான் நும்மனையதாயினும் ஆமினா இருத்தலின் ஆங்கு வரோமென மறுத்தாளென்பதூஉம் அவரில்லாதவிடத்தும் வரோம் என்பதூஉங் கருத்தாயின. இனி ஆமினா யாதுங் குறைவுசெய்யாமையான் அவருற்றவிடத்து வரோ மென்றற்கு ஏதுவென்னை! என மலைந்து கடாநிகழ்த்துவார்க்கு 66 - ம் செய்யுளில் ஆமினா மனைவெறுத்திருந்தார் என்றற் குரைத்தாங் குரைக்க.

(68) மஞ்சு வாழ்குழ லாமினா வுரைத்தது மறுத்தா
ரின்சொற் கூறிநா மழைக்கவு மனமிரங் கிலரொன்
றஞ்சி யுள்ளகம் புழுங்கிநின் றப்துல்முத் தலிபு
தஞ்ச மீதெனக் கருபத்துல் லாதனைச் சார்ந்தார்.

(ப - ரை.) அப்துல்முத்தலிபு-அவ்வாறுஅப்பெண்கள் கூறலும் அப்துல்முத்தலிபவர்கள், மஞ்சு - அழகானது, வாழ் - குடியிருக்கும், குழல் - கூந்தலையுடைய, ஆமினா - ஆமினா, உரைத்ததும் - சொலிவிடுத்தனவற்றையும், மறுத்தார் - மறுதலித்து, நாம் - நாமும், இன் - இனிமையான, சொல் - வார்த்தைகளை, கூறி - சொல்லி, அழைக்கவும் - வருகவென்றதற்கும், மனமிரங்கிலர்என்று-கிருபைகூர்ந்திலரென்று, புழுங்கி-கோபங்கொண்டு, உள்ளகம்அஞ்சி - பிற்றை உட்பயமுங்கொண்டு, நின்று - சற்றேதரிப்புற்று, தஞ்சம் - தற்சமயத் துணையானது, ஈது என-இஃதேஎன்று, கருபத்

துல்லாதனை - **கருபா**வென்கிற சந்நிதியைச்சுட்டி, சார்ந்தார் - அவ்விடத்துப்போயினுர்கள், எ-று.

(போ-ளை.) அவ்வாறு அப்பெண்கள்கூறலும் **அப்துல்முத் தலிபு** அவர்கள்அழகானது குடியிருக்குங் கூந் தலையுடைய **ஆமினு** சொலி விடுத்தனவற்றை யும் மறுதலித்து நாமும் இனிமையான வார்த் தைகளைச்சொல்லி வருகவென்றதற்குங் கிரு பைகூர்ந்திலவொன்று கோபங்கொண்டு பிற்றை உட்பயமுங்கொண்டு சற்றே தரிப்புற்றுத் தற் சமயந்துணையான திஃதேயென்று **கருபா**வென் கிற சந்நிதியைச் சுட்டி யவ்விடத்துப் போயி ஞர்கள், என்பதாம்.

மறுத்தார் எனும் முற்றுச்சொல் எச்சப் பொருளிடத்து வந்தது. யாங் கூவியு மனமிரங்கினரிலர் என மதிர்ப்பினுனே புழுங்கியவர் **ஆமினு**க்குற்ற தனிமையை நினைத்து உள்ளக மஞ்சினுனெனக்கொள்க. ஈது என்றமையான் சுட்டி என்பதூஉம், சார்ந்தார் என்றமையான் அவ்விடத்து என்பதூஉம் பெறப்பட்டன. இது என்பது நீண்டு நின்றது.

(69) வடிவி ருந்தொளிர் கருபத்துல் லாதனை வலமாய்க்
கடிதிற் றுன்புற வருங்கரு மாரியின் களையாற்
கொடியி டைப்பர தாபமும் வருத்தமுங் கூறி
நெடிது யிர்த்தயர்ந் திரந்துகொண் டிருக்குமந் நேரம்.

(ப - ளை.) கொடி இடை - (அங்ஙனஞ்சார்ந்த **அப்துல்முத் தலிபா**னவர்கள்) கொடிபோலு மிடையினை யுடைய **ஆமினு**அவர்கட்கு, கருமாரியின் - பிர சவவேதனையால், வரும் - சம்பவிக்கும், பரதாப மும் - பயங்கரத்தையும், வருத்தமும் - துன்பத் தையும், கூறி - சொல்லி, இரந்து - அவைகளா லுறுவனவுருமைக்கடவுளைவேண்டி, வடிவு-அழ

கானது, இருந்து - வீற்றிருந்து, ஒளிர் - பிரகாசியாநிற்கும், கருபத்துல்லாதனை - கதுபாவென்கிறசந்நிதியை, துன்புற-தம்சரீரம்வருந்த, கடிதில் - விரைவாக, வலமாய் - பிரதக்கணம் வந்து, களையால்-அவ்விளைப்பினுனே, அயர்ந்து-அயர்வுற்று, நெடிதுயிர்த்துக்கொண்டு - பெருமூச்செறிந்துகொண்டு, இருக்கும் அந்நேரம் - இராநிற்கு மந்நேரத்திலே, எ-று.

(போ-ரை.) அங்ஙனஞ் சார்ந்த அப்துல்முத்தலிபானவர்கள் கொடிபோலு மிடையினையுடைய ஆமினு அவர்கட்குப் பிரசவ வேதனையால் சம்பவிக்கும் பயங்கரத்தையுந் துன்பத்தையும் சொல்லி யவைகளாலுறுவன வுருமைக் கடவுளைவேண்டி அழகானது வீற்றிருந்து பிரகாசியாநிற்கும் கதுபாவென்கிற சந்நிதியைத் தஞ்சரீரம் வருந்த விரைவாகப் பிரதக்கணம்வந்து அவ் விளைப்பினுனே அயர்வுற்றுப் பெருமூச் செறிந்துகொண்டு இராநிற்கு மந்தநேரத்திலே, என்பதாம்.

கருபத்துல்லாதனைச் சார்ந்தாரொனமுடித்து வடிவிருந்தொளிர் கருபத்துல்லா எனத் துவக்கியமையான் றுரைகைப்பட முடித்துவகைப்படக் கிளத்தாரெனக் கொள்க. தோற்றப் படுவன யாவற்றினும் அழகே சிறந்துள்ளதென் றுள்ளிட்ட விந் நூலாசிரியர் கதுபாவை அதுகொண்டு சிறப்பித்துப்போதலே மரபென வலியுறுத்தற்பொருட்டு "வடிவிருந்தொளிர் கருபத்துல்லா" என்றுர். இக்கருத்தே பற்றி இப்புராண முதற்பாட்டைத் "திரு" என நுதலினுராயினு ராசிரியரறிக.

பிரதக்கணம் மெய்யின்புடைப் பெயர்வானுதல்பற்றி யப்புடைப் பெயர்வு இத்தன்மைத்தென்பது தோன்ற "கடிதிற்றுன்புற" என்றுர். ஆகவே அவ்வாறுறுந் துன்பத்தினுனே பயக்கும்பயன் இனைத்தெனும் உறுதிபயந்த மனத்தராய் வலம்வந் திரந்தாரென்பது கருத்தாயிற்று.

"தெய்வத்தா னாகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்"

என்றார் வள்ளுவரும். வலமாய் என்றவதனுன் வந்து என்பதூஉம் துன்புற என்றவதனுன் சரீரம் என்பதூஉம் வருவிக்கப்பட்டன. கொடிஇடை உவம நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை. பரிதாபம் என்பது ஈண்டுப் பிரசவவேதனையான் ஆமினவின் உயிர்மேலெண்ணப்படும் பயத்தை. பந்துத்துவமுடையா ரின்மைபற்றிச் செய்வனசெய்து முடித்தற் கியலாமையான் ஆமின மேலே நிகழுந் துன்பத்தை வருத்தமென்றார். ஈண்டுப் பரிதாபமும் துன்பமுங்கூறி இரந்தாரொன்றமையான் அவைகளா லுறுவனவுமுறுது மகிழ்வின் இருத்தல் வேண்டுமெனுங் கருத்தினராயின ரப்துல்முத்தலிபு என்றுணர்க. பிறவருவனவுங் கொள்க.

எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

(70) அரியமெய்ப் பொருளா யளவிடற் கரியோ
னருளின னமரர்கள் சுவர்க்கத்
தெரிவையர் பறவைக் குலங்கண்மற் றெவையுஞ்
செழும் பொழிற் செகதலத் திறங்கி
வரிஞிமி றுதரிக் கருங்குழன் முடித்த
மடக்கொடி ஆமின மனையி
னிரைநிரை செறிந்தங் கவருரை மறுது
நின்றிடும் பணிவிடைக் கெனவே.

(ப-ரை.) அரிய - மேன்மையான, மெய் - பொய்யாத, பொருளாய்-வஸ்துவாயும், அளவிடற்கு-இன்னபடி என்றற்கு, அரியோன் - அருமையானேனுயும்வரும் கடவுளானவன், அமரர்கள்-மலக்குகளையும், சுவர்க்கம் - சுவர்க்கத்தின்கண்ணதான, தெரிவை-அரம்பைகளையும், பறவைக்குலங்கள் எவையும்-பட்சிசாதிகள் ளியாவற்றையும், வரி-வரிபடர்ந்த, ஞிமிறு - வண்டினங்களை, உதரி - சிதறவீசி, கரும் - கருமையாகிய, குழல் - கூந்

தலை, முடித்த - செவ்வையுறுத்தும்படியான, மடம் - இளமையாகிய, கொடி - பூங்கொடி போலும், ஆமினு - ஆமினுவினது, மனையில்-வீட்டின்கண், பணிவிடைக்கு - தொழும்பியற்றற்கு, செழும்-செழிய, பொழில் - சோலைகளையுடைய, செகதலத்து - பெரிய பூமண்டலத்தின்கண், இறங்கி - இறங்குதலைச்செய்து, நிரைநிரை - அணியணியாக, அங்குஅவர் - ஆங்குற்றவர்களினது, உரை - சொற்களை, மருது - தவருது, நின்றிடும் - தரிப்புற்றிருங்கள்என, அருளினன்- ஆக்யாபித்தனன், எ-று.

(போ-ரை.) மேன்மையான பொய்யாத வஸ்துவாயும் இன்னபடியென்றற்கு அருமையானேனுயும்வரும் கடவுளானவன் மலக்குகளையுஞ் சுவர்க்கத்தின் கண்ணதான அரம்பைகளையும் பட்சிசாதிகள் யாவற்றையும் வரிபடர்ந்த வண்டினங்களைச் சிதறவீசிக் கருமையாகிய கூந்தலைச் செவ்வையுறுத்தும்படியான விளமையாகிய பூங்கொடி போலும் ஆமினுவினது வீட்டின்கண் தொழும்பியற்றற்குச் செழிய சோலைகளையுடைய பெரிய பூமண்டலத்தின்கண் இறங்குதலைச்செய்து அணியணியாக வாங்குற்றவர்களினது சொற்களைத் தவருது தரிப்புற்றிருங்களென வாக்யாபித்தனன் என்பதாம்.

காலமும் திசையும் எதிர்வும் சமதலைவும் திறையின்மையும்அருக்கனுளியும் அளத்தற் கேதுவுண்மையும் பிறவும் வேண்டிக் கட்புலனறிவிற் கேதுவாவனவெல்லாம் வஸ்துவெனப்படுமாதல்பற்றி அவையெல்லாம் வேண்டாது மதித்தற்கரியனவாய் விள்ங்கும் கடவுளை பொருளெனல் பொருந்தாதெனின் நன்றுகூறினுய்; மேன்மையவான

பொய்யாத பொருளொன் றின்மையான் அஃதே கடவுளென்பான் கருதி அரிய மெய்ப் பொருளான் என் றடங்காது "அரியமெய்ப் பொருளா யளவிடற்கரியோன்" என ஆண்டுக்கூறு மையந்திரிபறக் கடவுளித்தன்மைத்தவன் என்பது கூறுவானுயினர் ஆசிரியராதலின் பொருந்துமென்க. சுவர்க்கமென்றமையாற் றெரிவையை அரம்பையென்ரும். கொடி ஆமினு வுவமத்தொகை. ஆமினு மனையென்றற்கு முன்னுரைத்தாங்குரைக்க. மற்றெவையும் என்புழி மற்று அசைநிலை. எலாம் என்பது பட்சிசாதிகளின் வகைகளைக் குறித்து நின்றது.

> இனி பறவைக்குலங்க ளெவையும் என்புழிப் பட்சிசாதிகள் எல்லாவற்றையும் என உரைகூறி சுவர்க்கத்தில் பட்சிகளென்பது ஒன்றுமில்லாமையாய் விடமுழுது மனுப்பப்பட்டன என்பதே கருத்தென்பாருமுளர். இஃதே முதலுரையார்க்குமுடன்பாடுபோலும். சுவர்க்கமென்பதை ஈண்டுப் பறவைகளோடுங் கூட்டுக.

முடித்த என்னு மிறந்தகாலப் பெயரொச்சம் நிகழ்காலப் பொருளிடத்து நின்றது. அங்கு அவர் என்பன ஈண்டு ஆமினுவினது மனையையும் தாயாதியோரையுங் குறித்து நின்றன.

> இனி ஆங்குஎன்ப தசைநிலையென்றும் அவர் என்பது ஆமினுவைக் குறித்துவந்ததென்றுங் கருதுவர் முதலுரையார். ஆமினு பிரசவவேதனையி னிருப்பிருக்குங்கால் எங்ஙனமேவலுறுத்துவர்எனுங் கடா நிகழுமாகலின் அது பொருந்தாதென்க.

உம்மைகள் விகாரவகையாற் றொக்கன. நின்றிடும் என்புழி வேண்டிய என என்ற ஒருசொல்லுமது. ஈற் றேகார மீற்றசை.

(71) கருவினிற் றோன்று தொளிவினி லுருவாய்க்
கண்ணிமைத் துண்டுறங் காத
பெருவடி வழகாய்க் குழுவுடன் றிரண்டு
பெரியவ னுரைமரு தெழுந்து
விரிகதிர்க் ககனம் புடவிமட் டொழுங்காய்
விண்ணவ ரெண்ணிறந் தனையோ

ரருவனா யனையா ருருவமுஞ் சிறிதா
யாமினு திருமனை சூழ்ந்தார்.

(ப - ரை.) கருவினில் - கருப்பத்தினுல், தோன்றுது-பிறக்காது, ஒளிவினில் - பிரகாசத்தினுல், உருவாய்-காண்டற்கரியதோற்றமாகி, கண் - கண்களை, இமைத்து - மூடித் திறக்காதவும், உண்டு-உணு முதலியன உண்ணுதவும்; உறங்காத - துயிலாதவுமான வியற்கையினையுடைய, அரும் - அருமையாகிய, வரையனையார்-மலைபோலு முயர்ந்த பெருமையையுடைய, விண்ணவர் - மலக்குகளானவர்கள், பெரியவன் - ஜல்லஷானஹுத்த ஆலாவினது, உரை - சொற்களை, மருது - தவருது, குழுவுடன் - அடங்காமையோடு, திரண்டு - ஒன்றுகூடி, எழுந்து - உடனே பிரயாணித்து, பெரும் - பெருமைதங்கிய, வடிவு - தோற்றத்தில், அழகாய் - அழகாகியும், உருவமும் - ரூபத்தில், சிறிதாய்-சிறியதாகியும், எண்ணிறந்தனையோர் - கணக்கற்றுர்போன்று, விரி-விரிந்த பிரகாசமுள்ள, கதிர் - சூரியனையுடைய, ககனம் - வானந்தொடங்கி, புடவிமட்டு-பூமண்டலம்வரைகரும், ஒழுங்காய் - அணியணியாய், ஆமினு - ஆமினுவினது, திரு - தெய்வீகத்துவ, மனை-வீட்டினை, சூழ்ந்தார்-சூழவிறங்கினுர்கள், எ-று.

(போ-ரை.) கருப்பத்தினுற் பிறக்காது பிரகாசத்தினுற் காண்டற்கரிய தோற்றமாகிக் கண்களை மூடித் திறக்காதவும் உணுமுதலியன வுண்ணுதவும் துயிலாதவுமான வியற்கையினையுடைய அருமையான மலைபோலும் உயர்ந்த பெருமையை

யுடையமலக்குகளானவர்கள் ஜல்லஷானஹு-த்த ஆலாவினது சொற்களைத் தவறு தடங்காமை யோடு ஒன்றுகூடி உடனே பிரயாணித்துப் பெருமைதங்கிய தோற்றத்தில் அழகாகியும் ஸ்வரூபத்திற் சிறிதாகியுங் கணக்கற்றூர்போன் று விரிந்த பிரகாசமுள்ள சூரியனையுடைய வானந்தொடங்கிப் பூமண்டலம் வரைக்கும் அணியணியாய் ஆமினுவினது தெய்வீகத்துவ வீட்டினைச்சூழ இறங்கினூர்கள், என்பதாம்.

மலக்குகள் மாக்களனைய பிள்ளைபெறுதலா மியற்கையினையும் மண், நீர், காற்று, நெருப்பு இவைகளின் ஏதுவையும் உடையாரன்று; தனித்தனிப் படைப்பினர், ஒளியேதுவினர், ஆதல்பற்றிக் "கருவி னிற்றூன்று தொளிவினிலுருவாய்" என்றூர். ஆகலினுனே பூதங் களி னேதுவின் கருவிற்றூன்றியமாக்கள் அப் பாலரின்படைக்கோ லங்க ளினைத்தென வறியு நீர்மையினரலர் என்பது பெறப்பட்டது. கண்ணிமையாமையும் உண்ணுமையும் உறங்காமையும் அமரரது குண மாதல்பற்றிக் கண்ணிமைத் துண் டுறங்காத என்றவிடத்து அவர்க் குரிய குணத்திற்கொப்பப் பொருள்கூறினும். இமையா, உண்ணுஎன் பன இமைத்து உண்டு எனத் திரிந்து நின்றன. அமரர்கள் சதா வியா பகி என்பதூஉம் மலஞ் சலம் முதலிய வசுத்த பாசங்களும் பிற வும் இலாதவர் என்பதூஉங் கடவுளின் ஏவலிற் படுதலேயன்றிப் பிறழார் என்பதூஉம் முறையே இமையா, உண்ணு, உறங்கா என்பனவற்றுனே பெறப்பட்டன. மலக்குகளின் பெருமைமிக்க பெரிதென்பான் "அருவனையனையார்" என்றூர். அது,

"குன்றினனையாருங்குன்றுவர்"

என்ற வள்ளுவரானுமறிக. ஆகவே இதுகாறும் அவர்க ளித்தன்மைத் தனவாம் படைப்பினர் குணத்தினர் பெருமையினர் என்பன கூறி னூர் ஆசிரிய ரென்றறிக.

இக் கருத்தறியாதபோலி! வித்வான்கள் கண்ணிமைத் துண் டுறங்காத என்புழிக் "கண்களை யிமைத்து உணுமுதலியன வுண்டு உறங்காத" என்றும் அருவனையனையாருருவமுஞ்

சிறிதாய் எனச் செய்யுட் கிடந்தவாறேகூட்டி "அரிய மலைகளை யொத்தவர்களாகிய வவ்வானவர்கள் தமதுருவங்கள் சிறிதாகி" என்றும் பெருவடிவென்புழிப் "பெரியவடி" வென்றும் வாளாப் பொருள்கூறி யிடர்ப்படுவர். இக்கூற்றுரின் முதலுரையாரு மடங்குவர். இங்ஙனங்கூறிற் படுமிடர் என்னையோ? வெனின் கண்ணிமைத்து உணு முதலியன உண்டு நித்திரை செய்யாத வானவரொன்றால் கண்ணிமையாது உணு முதலியன உண்ணாது போமிடத்துத் துயிலுவரொன்பது அருத்தாபத்தியானே பெறுதுமாகலானும், அரிய மலைகளை யொத்தவர்களாகிய வவ்வானவர்கள் என்புழி அவர்கள் மலையின் அளவினரொன்பதூஉம், தமதுருவங்கள் சிறிதாய் என்புழி **ஆமினா**வின் மனையின்கண் அவர்கள் அமைதற் கொவ்வாமையாதல்பற்றித் தமது மலைகளையொத்த ரூபங்களைச் சிறிதா யமைத்தாங்குற்ற ரொன்பதூஉம், பெரிய வடிவென்றவிடத்து மலக்குகள் இயற்கையில் பருமிகளென்பதூஉம் பெறுதுமாகலி னவருரை யிடர்ப்படுமென மறுக்க.

இனி மலக்குகள் சிறையினையும் பல சிரங்களையும் இத்தன்மைத்தனவாம் எனு மளத்தற்கரிய பருமதத்தினையு முடையராய்ச் சிலரால் காணப்பட்டாரென வேதநூலோதுகின்றனவே எனின், நன்றுகூறினாய்; அம் **மலக்குகள்** அவ்வித கோலங்கொள்ளற்கு இயன்றவரேயன்றி அது அவரின தியற்கையினவாம் படைப்பன்றெனவுணர்க. இக்கருத்தேபற்றி ஆசிரியர் **மலக்குகளி** னியற்கையை முன்னர்க்கூறி அவரினது செயற்கையனவாங் குணங்களைப் பெருவடிவழகாய் உருவமுஞ் சிறிதாய் எனப் பின்னர்க்கூறினார். ஈண்டுப் பெருவடிவென்றது கட்புலனாகாப் படைப்பினராகிய **மலக்கு**கள் கட்புலனாகிய வுருதோற்றத்தில் வந்ததோர் அலகுண்மைபற்றி அவ்வடி வித்தன்மைத்தென்பதை. உருவமுஞ் சிறிதாய் என்பதூஉமது. இங்ஙனம் விரித்துக் கூறிற் பல்குமாகலி னிறுத்தினும் உய்த்துணர்க. பிரகாசவடிவாதல்பற்றிக் காண்டற்கரிய தோற்றமென்றும். உனாமருது என்றமையான் உடனே என்றசொல் பெறப்பட்டது. **மலக்கு**கள் கடவுளால் நியமிக்கப்பட்டுள்ளவழியே சதாநிற்கும் இயற்கையினராகலின் முன்னின்ற வவ்வினையொழித்து வேறுவினைக்கண் சார்ந்தார் என்பது

தோன்ற எழுந்து என்முரன்றி இருந்துங் கிடந்தும் எழுந்தா ரென்பதன்று. இவ்வாறு கடாசிகழ்த்து மறிவிலிகளுமுளவாதல்பற்றி இங்ஙனங் கூறலாயினேம். விரிகதிர் என்றமையான் பிரகாசம் வருவிக்கப்பட்டது. ககனத்தைச் சூரியனுற் சிறப்பித்தல் உயர்வின்பாலர்க்குமியற்கையாகலின் "விரிகதிர்ககனம்" என்முர். புடவிமட்டு என்றமையான் வானந்தொடங்கிஎன் முயிற்று. உருவமும் என்பது வினைப்படுதொகுதியாகலின்,

"இனைத்தெனவறிந்த வினைமுதற்கிளவி"

என்ற விதிபற்றி உம்மைவந்ததென்க. சூழ்ந்தார் என்றவதனன் இறங்கி என்பது பெறப்பட்டது. மலக்குகளும் ஹூறுலீன்களும் சுவர்க்கத்தின் புள்ளினங்களும் ஆமினவி னேவல்நோக்கி அவர் மனை சூழலான் திருமனை என்முர். உம்மைகள் விகாரவகையாற் றெக்கன.

(72) தேன்பெருக் கொழுகி வழிதருங் கனிகள்
சிதறிடுஞ் சோலைவாய்த் தெளிந்த
வானதி மூழ்கித் துகிலெடுத் துடுத்து
வளைபணித் தொகையெலா மணிந்து
கான்மலர் முடித்துக் கடுவரி வடிவேற்
கண்களி லஞ்சனங் குலவச்
சூன்முதி ராமி னுமனை யிடத்திற்
சூழ்ந்தனர் விண்ணவர் மகளிர்.

(ப-ரை.) விண்ணவர்மகளிர்-பல அரம்பைகளானவர்கள், சிதறிடும் - சிதறுற்றுக்கிடக்கும், கனி-பழவர்க்கங்களினது, தேன் - மகரந்தத்தின், பெருக்கு-பாய்ச்சலானது, ஒழுகி - வார்ந்து, வழிதரும் - வழிந்தோடாநிற்கும், சோலைவாய்-சோலையாகிய பொன்னுலகத்துள்ள, தெளிந்த - பிரகாசமும், வால் - பரிசுத்தமுமாகிய, நதி - ஆற்றின்கண், மூழ்கி - ஸ்நானஞ்செய்து, துகிலெடுத்து-சுத்தமாகிய வஸ்திரங்களைஎடுத்து, உடுத்து - அணிந்து, வளை - வளையலொடு, பணித்தொகை

எலாம்-நகைவகைக ளெல்லாவற்றையும், அணிந்து - சுமந்து, கான் - வாசனைபொருந்திய, மலர் - பூக்களை, முடித்து - கூந்தலிற்சூடி, கடிவிடந்தங்கிய, வடி - கூர்மையையுடைய, வேல்-வேல்போலும், வரி - செவ்வரிபடர்ந்த, கண் - விழிகளில், அஞ்சனம் - எழுதப்பட்ட மையானது, குலவ - பிரகாசிக்க, சூன்முதிர் - பிரசவகாலத்தை யடைந்திராநிற்கும், ஆமினு-ஆமினுவினது, மனையிடத்தில் - தெய்வீகத்துவம் பொருந்திய வீட்டின்கண், சூழ்ந்தனர் - சூழ விறங்கினார்கள் எ-று.

(போ-ரை.) பல வரம்பைகளானவர்கள் சிதறுற்றுக் கிடக்கும் பழவர்க்கங்களினது மகரந்தத்தின் பாய்ச்சலானது வார்ந்து வழிந்தோடாநிற்கும் சோலையாகிய பொன்னுலகத்துள்ள பிரகாசமும் பரிசுத்தமுமாகிய வாற்றின்கண் ஸ்நானஞ்செய்து சுத்தமாகிய வஸ்திரங்களையெடுத்து அணிந்து வளையலொடு நகைவகைக ளெல்லாவற்றையும் சுமந்து வாசனைபொருந்திய பூக்களைக் கூந்தலிற்சூடி விடந்தங்கிய கூர்மையையுடைய வேல்போலுஞ் செவ்வரிபடர்ந்த விழிகளில் எழுதப்பட்ட மையானது பிரகாசிக்க பிரசவ காலத்தை யடைந்திராநிற்கும் ஆமினுவினது தெய்வீகத்துவம் பொருந்திய வீட்டின்கண் சூழ விறங்கினார்கள், என்பதாம்.

சோலையென்ப தாகுபெயர். எவ்வித வசுத்தாபாசங்களை யுடையராயினும் அவ் வாற்றினிடத்துப் படுத்தப்படுவரேல் பரிசுத்தராவரென்பது தோன்ற "வால்நதி" என்றார். ஈண்டு அது **ஹௌலுல் கௌசரை** யுணர்த்திநின்றது.

இனி வானதிமூழ்கி என்புழிப் "பரிசுத்த யாற்றில் குளித்து" என்று பொருள்வரைந்த முதலுரையார் அந் நதி யிஃதென விரித்துக் காட்டாது "அதைப் பலர் சுவர்க்கத்து நதிஎன வாளா மயங்குவர்" என விகழ்ந்தும் போந்தார். ஆகவே அவர்க்கந்நதி * காவேரி என்பதே கருத்து போலும்.

வளைபணி என்புழி உடனிகழ்ச்சிப்பொரு ளுணர்த்தும் மூன்ருவது தொக்கது. மலர்முடித்து என்றமையா லதற்குரிய கூந்தல் பெறப்பட்டது. கடி என்பதை வேலோடுங் கூட்டுக. வேல் கண் உவமத் தொகை. ஆமிஉமனையதாகலின் தெய்வீகத்துவம் ஈண்டும் பெறப் பட்டது. இறங்கி என்றற்கு முன்னுரைத்தாங் குரைக்க. பிறவருவ னவு முய்த்துணர்க.

(73) மறுவறுத் திருந்த நிறைந்த பூரணமா
மதிக்குலந் திரண்டுவந் ததுவோ
வுறைதரு மமுதத் திரளைக ளுருவா
யொழுங்குட னெழுந்திடுந் திரளோ
கறைபடாச் சுவனக் காட்சிவாழ் வனைத்துங்
கலந்துட னிலங்கிவந் ததுவோ
குறைபடாச் சுவனத் தருவினி லுதித்த
கொழுங்கதிர்ச் செழுங்கனிக் குலமோ.

அரம்பைகளினது தோற்றம் இனைத்தென ஒருவாறு நுதலு வாருயினர்.

(ப - ரை.) மறு - அவ்வரம்பைகளினது தோற்றம் களங்கத்தை, அறுத்து - அறச்செய்து, இருந்த-இருக்கப்பெற்ற, நிறைந்தபூரணம் - நிறையின்வரை கண்ட, மா-பெருமைபொருந்திய, மதிக்குலம்-சந்திரன்களினதுகூட்டம், திரண்டு - ஒன்ருய்க் கூடி, வந்ததோ - இப்புவனத்தின்கண் வந்து விட்டதோ, உறைதரும் - அலது சுவர்க்கத்தி

* அது எம்போல்வரல்லாச் சிலராற் புகழ்ந்து கூறப்பட்டவோர்நதி.

விராநிற்கும், அமுதம் - இனிமைகளினது, திரளைகள் - துண்டங்கள், உருவாய் - பெண் ரூபங்கொண்டு, ஒழுங்குடன் - நிரைநிரையாக, எழுந்திடும் - தோன்றிய, திரளோ - கூட்டமோ, கறைபடா - இருளென்பதேயுறுத, சுவனம் - சுவர்க்கத்தினது, காட்சி - அற்புதமாகிய, வாழ்வு அனைத்தும் - வாழ்க்கைகளெல்லாம், உடன்கலந்து - ஒன்றுய்ச்சேர்ந்து, இலங்கி - பிரகாசித்து, வந்ததுவோ-வந்துவிட்டதோ, சுவனம் - அந்தச்சுவர்க்கத்தின்கண்ணுள்ள, குறைபடா - நிறைவாகிய, தருவினில் - பைந்தருக்களிலே, உதித்த - உண்டாகிய, கொழும் - நிறமுள்ள, கதிர்-கிரணங்களையுடைய, செழும் - செழுமையாகிய, கனிகுலமோ - கனிவர்க்கங்களோ, எ-று.

(போ-ரை.) அவ் வரம்பைகளினது தோற்றம் களங்கத்தையறச்செய்து இருக்கப்பெற்ற நிறையின் வரைகண்ட பெருமைபொருந்திய சந்திரன்களினது கூட்ட மொன்றுய்க்கூடி இப்புவனத்தின்கண் வந்துவிட்டதோ! அலது சுவர்க்கத்தி லிராநிற்கு மினிமைகளினது துண்டங்கள் பெண்ணுருவங்கொண்டு நிரைநிரையாகத்தோன்றிய கூட்டமோ! இருளென்பதே யுறுத சுவர்க்கத்தினது அற்புதமாகிய வாழ்க்கைகளெல்லா மொன்றுய்ச்சேர்ந்து பிரகாசித்து வந்துவிட்டதோ! அந்தச் சுவர்க்கத்தின்கண் ணுள்ள நிறைவாகிய பைந்தருக்களிலே யுண்டாகிய நிறமுள்ள கிரணங்களையுடைய செழுமையாகிய கனிவர்க்கங்களோ! என்பதாம்.

உவமையாகிய மதி இத்தன்மைத் தென்பதுதோன்ற பூரணத்தின் வரையுறுத்துவான்கருதி அப்பொருட்சொல் விரட்டுறவைத்தார். மறுவறுத்திருந்த நிறைந்த பூரணமாமதி என்ப தொன்றின்மையான் அரம்பைகளோடு இவ்வான்மதி பொருவாதென்பதூஉம் அரம்பைகளே அம்மதி என்பதூஉங் கருத்தாயின. சுவனம் இரட்டுறநின்று ஒன்றையொன்று சுட்டினமையா னங்ஙனம் வேண்டிய சுட்டெழுத்து விகாரவகையாற் றொக்கது. கறைபடாச் சுவனம் என்பதீண்டு இல்லியீனக் குறித்து நின்றது. இச்செய்யுளின்கண் ணின்ற ஓகாரங்கள் ஐயம்.

(74) அணித்துலைக் கனலி லுருக்கிடா தொளிரு
மாயிரங் கோடிமாற் றெனவுங்
கணித்திடாப் பசும்பொ னெடுத்தெடுத் தமைத்த
கவின்குலங் கூண்டெழுங் கணமோ
மணிக்கதி ரிழைத்துத் திரட்டிவைத் துருவ
வடிவமைத் தெழுந்திடுங் குழுவோ
துணித்துமின் குலங்கண் மறைபடா தெழுந்த
தொகுதியோ வெனவறி கிலமால்.

(ப - ரை.) உலை - கொல்லுலைப்பட்ட, கனலில் - தீயின்கண், அணித்து - சேர்ப்பித்து, உருக்கிடாது - உருகச்செய்யாது, ஒளிரும் - தானேபிரகாசிக்கும், ஆயிரம்கோடி-ஆயிரமாகப்பெருகிய கோடியளவான, மாற்றெனவும் - மதிப்பென்றும், கணித்திடா - நிஷ்கரிக்கக்கூடாவான, பசும் - உயர்த்தியாகிய பசிய நிறத்தினையுடைய,பொன்-பொன்னை, எடுத்து எடுத்து - வாரி வாரி, அமைத்த - செய்த, கவின் - அழகிய, குலம் - சுவக்கத்தின் மாளிகைகள், கூண்டு - ஒன்றுசேர்ந்து, எழும்-எழும்பிய, கணமோ-கூட்டமோ, மணி-இரத்தினதிகளின், கதிர்-கிரணங்களை, திரட்டிவைத்து - சேர்த்துவைத்து, இழைத்து - ஒளி

வோடுகலந்து, உருவம் வடிவம் - சொரூப தோற்றமாக, அமைத்து - அமைவுண்டு, எழுந்திடும் - எழுந்துவாராநிற்கும், குழுவோ-கூட்டமோ, துணித்து - அலதுவெட்டிய, மின்குலம்-மின்னலினது பகுதிகள், மறைபடாது - மறைவுபடாமல், எழுந்த - தோன்றிய, தொகுதியோ-தொகைகளோ, என - எனவோ, அறிகிலேம் - யாம் அறிகிலேம், எ-று.

(பொ-ள்.) கொல்லுலைப்பட்ட தீயின்கண் சேர்ப்பித் துருகச்செய்யாது தானே பிரகாசிக்குமாயிரமாகப் பெருகியகோடியளவான மதிப்பென்றும் நிஷ்கரிக்கக்கூடாவான உயர்த்தியாகிய பசியநிறத்தினையுடைய பொன்னை வாரிவாரி செய்த வழகிய சுவர்க்கத்தின் மாளிகைகளொன்றுசேர்ந்தெழும்பிய கூட்டமோ! இரத்நாதிகளின் கிரணங்களைச் சேர்த்துவைத் தொளிவோடு கலந்து சுரூபதோற்றமாக வமையுண்டெழுந்து வாராநிற்குங் கூட்டமோ! அலது வெட்டிய மின்னலினது பகுதிகள் மறைவுபடாமல்தோன்றிய தொகைகளோ! எனவோ யாமறிகிலேம், என்பதாம்.

உருக்கிடாதொளிரும் என்றவதனன் பிறவாகு மாடைகள் உருக்கா தொளிராவென்பதூஉம் பசும்பொன்னினும் மாடையினும் வேறுபாடினைத்தென்பதூஉம் பெறப்பட்டன. மாற்றெனவும் என்றவிடத்து நின்ற உம்மைப் பசும்பொன்னினது மாற்று இனைத்தென வளையுறுத்தற் கமையாதெனுஞ் சிறப் புணர்த்துகையான் உயர்வுசிறப்பும்மையாயிற்று.

இனி யது இத்தனை மாற்றெனத் துணியாமைக்கண் வந்தமையால் ஐயவும்மையென மயங்குவர் முதலுளர்யார். செம்பொனின்றகை இனைத்தென்பதில் ஐயநிகழுமேல் அவ்வா

றற்ற பொருளாலியன்ற பொருள் எங்ஙனஞ் சிறக்கும்? எனுங் கடா நிகழூஉமாகலின் பொருந்தாதென்க. அல்லதூஉம் "வெல்லினும் வெல்லுமவனென்றேடுணே" என்புழி வரும் ஐயவும்மையான் அவ்வீரனது துணை போலியாதலான் சிறப்பின்றென முடிபுறுமாறு போலும் என்றுங் கூறிமறுக்க.

பசும்பொன்னின் உயர்வுபற்றிச் சுவர்க்கம் வருவித் துரைக்கப் பட்டது.

இனி பசும்பொன் னெடுத்தெடுத்தமைத்த கவின்குலங்கூண் டெழுங்கணமோ என்புழிப் பசும்பொன்னை எடுத்தெடுத் துச்செய்த அழகினங் கூடி எழுந்த கூட்டமோ எனப் பொருள் வரைவர் முதலுரையார். அழகு எனப்படுவது தோற்றப்படும் வஸ்துவின் சினையுருவங்களால் அவ்வஸ்துக் களிலே பொதுவகையா னிகழும் ஓராரியகாட்சியை; அஃது செய்யப்படுவதன்று ஆயினும் செய்யப்படுவனவற்றிலமைந் தும் அமையாது முருத்தோற்ற மின்றிநிலைக்கும் வஸ்துவெ னலாம். அவ்வஸ்துவே செம்பொன்னினும் இலாதிருப்பின் அப்பொன்னு மோரிழிபினதாயுறும் ஆகவே அதுகொண்டு சிறந்த செம்பொனுனே அதைச் சிறப்பித்தற் பொருந்தா தெனமறுக்க.

இழைத்தவென்ற வதனன் ஒளிவோடென்பது அவாய்நிலையான் வந்தது. உருவம் வடிவம் என்புழி ஆகஎன்ற ஒருசொல் பெறப்பட் டது. அமைந்தென்பது வலிந்து நின்றது. மின்னல் வெட்டியவுடனே மறையு மியற்கையினதாகலின் மறைபடா தெழுந்த வென்றார். ஆகவே அவைகள் இயற்கைமாறிநின்றனவோ என்பது கருத்தாயிற்று. எனவோ எனற்பாலது "என" எனநின்றது. யாம் என்ப தவாய்நிலை. **நபி**பெருமானரது அவதாரகாலத்தினவாஞ் சரிதையினை யெல்லாம் வகைப்படக்கிளந்தார் **சபா**நாயகமென்பதே வேதநூலாகலின் யாமெனுந் தோன்றுவெழுவாய் அந் நாயகியை யுணர்த்திநின்றது.

இனி முதலுரையார் அது இன்னுரொனத் துணிந்து கூறுமையான் அவர் கூறுவனவெல்லாம் உடன்பாடென்பது தமக்குங் கருத்தன்றென்க.

ஓகாரங்கள் ஐயப்பொருளி னின்றன. ஆல் அசைநிலை. பிற வரு வனவெல்லாங் கொள்க.

(75) இருட்டடை கிடக்குங் கருங்குழற் பின்ன
லெழுபதி னுயிர மிலங்க
விரித்தபொன் னிழைப்பூந் துகிலுமே கலையும்
விட்டொளிர் வீசிடத் துலங்கத்
தரித்தமுத் தார முடுக்குல மனைத்துந்
தான்குடி யிருந்தெனத் தயங்கக்
கரித்தகண் ணிமையா முலைக்குவ டசையாக்
கன்னியர் திரண்டிருந் தனரால்.

(ப - ரை.) அசையா - அசைவிலாத, முலைகுவடு - முலை யாகியமலைகளையும், இமையா - இமைவிலாத, கண் - விழிகளையுமுடைய, எழுபதினுயிரம் - எழுபதினுயிரங்கணக்கான, கன்னியர்-கூறுலீன் பெண்கள், பொன்இழை - பொன்னினுலாய நூற்களை, விரித்து - விரிவாக்கி நெய்யப்பட்ட, பூந்துகில் - பூம்பட்டாடைகளும், மேகலை-மேக லாபரணங்களும், ஒளிவிட்டு - கதிரொறிந்து, வீசிட - உலகத்தார்க்குத் தானமாக ஈயாநிற்கு மாறுபோல், துலங்க - பிரகாசிக்கவும், முத்தா ரம் - முத்துமாலைகளானவை, உடுக்குலம் அனைத்தும் - நட்சத்திரங்களெல்லாம், குடி இருந்து என - குடியிருந்தாற்போல, தயங்க - ஜொலிக்கவும், தரித்த - அணிந்து, இருட்டு - இருளானது, அடைகிடக்கும் - நீங்காது வீற் றிருக்கும், கரும் - கருமையாகிய, குழல் - கூந் தலினது, பின்னல் - ஜடைகளானவை, இலங்க- பிரகாசமாகவே பிரகாசிக்க, திரண்டு - ஆமினு வின் பாகங்களிற்கூடி, இருந்தனர் - ஏவல் நோக்கிநின்ருர்கள், எ-று.

(பொ-ரை.) அசைவிலாத முலையாகிய மலைகளையும், இமை விலாத விழிகளையுமுடைய எழுபதினுயிரங் கணக்கான ஹூறுலீன் பெண்கள் பொன்னிழைலாய நூற்களை விரிவாக்கி நெய்யப்பட்ட பூம் பட்டாடைகளும் மேகலாபரணங்களும் கதிரெறிந்து உலகத்தார்க்குத் தானமாக வீயாநிற்கு மாறுபோலப் பிரகாசிக்கவும் முத்துமாலைகளானவை நட்சத்திரங்களெல்லாங் குடியிருந் தாற்போல ஜொலிக்கவும் அணிந்து, இருளானது நீங்காது வீற்றிருக்குங் கருமையாகிய கூந்தலினது சடைகளானவை பிரகாசமாகவே பிரகாசிக்க ஆமினுவின் பாகங்களிற் கூடியேவ ணேக்கிநின்ருர்கள், என்பதாம்.

என்றுங் கன்னித்துவ முடையாளென்பதுதோன்ற முலைக்குவடசையாவென்ருர். முலைக்குவடென்ப தருவகம். ஆமினு அவர்கட்குளவாந் தொழும்பியற்றற்பொருட்டு மிக்க கவலையுடைத்திருந்தா ளென்னுங் குறிப்புத்தோன்ற "கண்ணிமையா" வென்ருர். இமையா வியற்கையினளெனினு மமையும். வீசிட என்பது இழிந்தோர் மேற்றதாகலின் உலகத்தார்க்குத் தானமாகவென்ற சொற்கள் பெறப்பட்டன. உலகத்திற்குத் தானமாகவீந்திடக் கதிரெறிந்து பிரகாசிக்கவும் எனப் பொருள்கூறினுமமையும். திரண்டிருந்தனர் என்புழி ஆமினுவின்பாகங்களில் என்ற சொற்கள் பெறப்பட்டன. உம்மைகள் விகாரவகையாற் ருெக்கன. தான்என்பது உரையசைக்கட்டுறைச் சுவைப்படநின்றது. இருந்தால்என விருத்தற்பாலதான வினையெச்சம் இருந்து என நின்றது. தரித்து என்பது தரித்த என எதுகையின்பம்பற்றித் திரிந்து நின்றது. ஆல் அசைநிலை.

(76) பண்ணமைத் தீஞ்சொ லரம்பையர் மேனிப்
பரிமளந் தெருவெலாங் கமழ
விண்ணகத் திரவிக் கதிரொளி மணிகள்
விடுவெயில் விழுதுவிட் டொழுகத்

தண்ணகைத் தரளக் கதிரிரு டுணிப்பத்
தனையெலாம் பொன்மைபோர்த் திருப்ப
மண்ணகத் திருந்த வாமினு மனையை
வானவர் பதியென லாமால்.

(ப - ரை.) பண் - இசைகள்ஏழும், அமை - அமைந்திரா நிற்கும், தீ-இனிய, சொல் - சொற்களையுடைய அரம்பையர் - ஹூறுலீன்பெண்களினது, மேனி-ஜடத்தின், பரிமளம் - நறுநாற்றமானது, தெரு வெலாம்-மக்காபுரத்து வீதிகளெல்லாம், கமழ - பரிமளிக்கவும், விண்ணகத்து - வானகத்தினும் உயர்ந்துற்ற, இரவி - சூரியனின், கதிர்-கிரணங் களைப்போலும், ஒளி - பிரகாசத்தினையுடைய, மணிகள் - இரத்தினங்கள், விடு - எறியும், வெயில்விழுதுவிட்டு-ஒளிவாகிய விழுதுகளைப் பரப்பி, ஒழுக - வாராநிற்கவும், தண்-குளிர்ச்சி பொருந்திய, நகைத்தரளம் - பற்களாகிய முத் துக்களின், கதிர் - பிரகாசமானது, இருள் - மயக்கங்களை, துணிப்ப - அறச்செய்யவும், தனை எலாம் - மக்கமாநகரமுழுவதும், பொன்மை போர்த்து இருப்ப - பொன்மயமே விரிந் திருக்கவுமான காரணம்பற்றி, மண்ணகத்து - பூமண்டலத்தின்கண், இருந்த - இருந்த மனை களில், ஆமினுமனையை-ஆமினுவினது வீட்டை, வானவர்பதி எனலாம் - சுவர்க்கலோகமென லாம், எ-று.

(போ-ரை.) இசைகளேழு மமைந்திராநிற்கு மினிய சொற் களையுடைய ஹூறுலீன்பெண்களினது ஜடத் தின்நறுநாற்றமானது மக்காபுரத்துவீதிகளெல் லாம் பரிமளிக்கவும் வானகத்தினு முயர்ந்

துற்ற சூரியனின் கிரணங்களைப்போலும் பிர காசத்தினையுடைய விரத்நாதிக ளெறியு மொ ளிவாகிய விழுதுகளைப் பரப்பிவராநிற்கவுங் குளிர்ச்சிபொருந்திய பற்களாகிய முத்துக்க ளின் பிரகாசமானது மயக்கங்களை யறச்செய்ய வும் மக்கமாநகரமுழுவதும் பொன்மயமே விரிந்திருக்கவுமான காரணம்பற்றிப் பூமண்ட லத்தின்கண்ணிருந்த மனைகளில் ஆமினாவினது வீட்டைச் சுவர்க்கலோகமெனலாம், என்ப தாம்.

வெயில்விழுது, நகைத்தரளம் என்பன வுருவகம். மணிகளென் பது ஈண்டு ஹூறுலீன்க ளணிந்திருந்த நகைகளி னிரத்தினாதிகளைக் குறித்துநின்றது. சூரியன துயர்வைப்பற்றி விண்ணகத்திரவி என் றார். உலக மாய்கையின் மயக்கங்களை இருள் என்றார். மனையில் என் பது ஏற்புழிக்கோடலாற் பெறப்பட்டது. இருந்த வென்பது கால மயக்கம். உம்மைகள் விகாரவகையாற் றொக்கன. இச்செய்யுள் புரா ணிகர்துணிபு. பிற வருவனவெல்லாங் கொள்க.

(77) பறவைக ளனைத்து மேவலின் படியே
படியினு மந்தர மனைத்து
நிறைதரப் பெருக வதிலொரு வெண்பு
ணித்திலக் கதிர்கள்கான் றொழுக
வுறைதரு மாமி னாதிரு மனையி
னுட்புகுந் தெதிர்வரு வதுகண்
டறைதர மனமும் பயந்திட வொதுங்கி
யஞ்சிநின் றதிசயித் தனரே.

(ப - ரை.) ஏவலின்படி - கடவுளி னுத்தரவுபிரகாரம்வந்த, பறவைகள் அனைத்தும் - சுவர்க்கத்தின் பட்சி சாதிகளெல்லாம், படியினும் - மக்கத்திலும், அந்தரமனைத்தும் - ஆகாயத்தளவினும், நிறை தர - நிறையும்படியாக, பெருக - மலிந்திருப்ப,

அதில் - அப்பறவைகளில், ஒருவெண்புள்-ஒரு வெள்ளியபட்சியானது, திரு-தெய்வத்தன்மை யுள்ள, மனையின்உள்புகுந்து - மனையினுள்ளே புகுந்து, எதிர்வருவது - எதிரோவருவதை, நித்திலம் - ஆணிமுத்தின், கதிர்கள் - கிரணங்கள், கான்று ஒழுக - கக்குண்டொழுகாநிற்ப, உறைதரும் - வீற்றிருக்கும், ஆமினா - தேகசௌந்தரியமுள்ள ஆமினா அவர்கள், கண்டு - நோக்கி, பயந்திட - திடுக்கிட, மனமும் - உள்ளத்தினும், அஞ்சி - அச்சமுற்று, அறைதர - தமது முகத்தைத் திரைசெய்து, ஒதுங்கிநின்று - சரீரத்தையொடுக்கி, அதிசயித்தனர் - இஃதென்னவென் றுச்சரியப்பட்டார்கள், எ-று.

(போ-ரை.) கடவுளி னுத்தாரப்பிரகாரம்வந்த சுவர்க்கத்தின் பட்சிசாதிகளெல்லாம் மக்கத்திலும் ஆகாயத்தளவினும் நிறையும்படியாக மலிந்திருப்ப அப்பறவைகளிலொரு வெள்ளிய பட்சியானது தெய்வத்தன்மையுள்ள மனையினுள்ளேபுகுந்து எதிரோவருவதை ஆணிமுத்தின் கிரணங்கள் கக்குண்டொழுகாநிற்ப வீற்றிருக்குந் தேகசௌந்தரியமுள்ள ஆமினாஅவர்கள் நோக்கித் திடுக்கிட உள்ளத்தினும் அச்சமுற்றுத் தமது முகத்தைத் திரைசெய்து சரீரத்தை யொடுக்கி இஃதென்னவென் றுச்சரியப்பட்டார்கள் என்பதாம்.

ஏவலின்படியே என்பதன் ஏகாரம் இசைநிறை. படி என்பது ஈண்டு மக்கத்தை. அந்தரம் அனைத்தும் என்றமையான் ஆகாயமுழுவதும் என்பதே கருத்து. பெருக அதில்என்பது "பன்மையி லொருமையும்" என்றவிதிபற்றி யமைக்கப்பட்டது. பிறவாகும் புட்களுமுள வாதல்பற்றி வெண்புள் என்றார். ஒருபுள் என்றமையான் ஒப்பற்ற

புள்ளெனினு மமையும். ரித்திலக்கதிர்கள் கான்றெழுக என்பதை வெண்புள்ளுடன் கூட்டித்

"தரளத்தாற் படைக்கப்பட்டபுள்" எனக்கொள்வர் முதலுரையார். அது பொருள் வியப்பின்றுதல்பற்றிப் பொருந்தாதென்க.

அறைதர என்றமையான் முகம் தானே பெறப்பட்டது. மனமும் என்ற உம்மை ஆக்கப்பொருளிடத்து நின்றது. ஏகாரம் ஈற்றசை.

(78) வருந்திநொந் திருந்த வாமினு திருமுன்
வந்துநின் றழகுறும் வெண்பு
ளிருந்தவெண் சிறையை விரித்தொளி சிறந்தே
யிலங்கிட வீசிய காற்றாற்
பொருந்திய சரீர வேர்வையுந் தீர்ந்து
புளகெழச் சிலிர்த்தன ரோமந்
திருந்திழை மனத்துட் பயங்கர மகன்று
தேகமுங் குளிர்ந்தன வன்றே.

(ப - ரை.) அழகு உறும் - அழகுபொருந்திய, வெண்புள் - வெள்ளிய பட்சியானது, வருந்தி - கர்ப்பவேதனையால் துன்புற்றும், நொந்து - மெலிவுற்றும், இருந்த - பயந்துமிராநின்ற, ஆமினு - ஆமினு அவர்களின், திருமுன்வந்துநின்று - மேன்மையான சமுகத்தில் வந்துநின்று, இருந்த வெண் சிறையை - தமக்குற்றிருந்த வெள்ளிய சிறைகளை, ஒளிசிறந்து - பிரகாசம்மிகுந்து, இலங்கிட - ஜொலிக்கும்படியாக, விரித்து - பரப்பி, வீசிய - வீசாநின்றது, காற்றால்-அதனுனிகழூஉமுயிர்ப்பினுனே, திருந்திழை - திருந்திய வாபரணங்களையுடைய ஆமினுஅவர்களின், சரீரம் - தேகத்தின்கண், பொருந்திய - உண்டாயிருந்த, வேர்வையும் - சுவேதநீரும், தீர்ந்து - வறந்து,

புளகெழ - மகிழ்ச்சிபூப்ப, ரோமமும் சிலிர்த்தன - ரோமங்களுந் தளிர்த்தனவாம், பயங்கரம் - அன்றியுமச்சங்களெல்லாம், அகன்று - நீங்கி, மனத்துள் - அகமும், தேகமும் - சரீரமும், குளிர்ந்தன-குளிர்ச்சி பூத்தனவாம், எ-று.

(போ-ரை.) அழகுபொருந்திய வெள்ளிய பட்சியானது கர்ப்பவேதனையால் துன்புற்றும் மெலிவுற்றும் பயந்துமிராநின்ற ஆமினு அவர்களின் மேன்மையான சமுகத்தில் வந்துநின்று தமக்குற்றிருந்த வெள்ளிய சிறைகளைப் பிரகாசம் மிகுந்து ஜொலிக்கும்படியாகப் பரப்பி வீசாநின்றது. அதனுனிகழூஉ முயிர்ப்பி னுனே திருந்திய வாபரணங்களையுடைய ஆமினு அவர்களின் தேகத்தின்கண் உண்டாயிருந்த சுவேத நீரும் வறந்து மகிழ்ச்சிபூப்ப உரோமங்களுந் தளிர்த்தனவாம். அன்றியும் அச்சங்களெல்லாம்நீங்கி அகமுஞ் சரீரமுங் குளிர்ச்சிபூத்தனவாம், என்பதாம்.

வெண்புள் என்றமையான் வெண்சிறையெனற் பொருந்தா தாசிரியர்க்கெனின் வெண்மையின தாற்றல் இனத்தென்பது தெரித்தவிடத்து பொருந்து மென்க. ஒளிசிறந்திலங்கிட வென்பதைச் சிறைகளினது சிறப்பாய்க்கொண்டு விரித்து என்பதனோடு கூட்டுக.

அதை வீசுதலோடுகூட்டுவர் முதலுரையார். அதில் பொருள் வியப்பின்றாகலின் பயனில்கூற்றென்க.

சிறந்தே என்பதன் ஏகாரம் இசைநிறை. வீசியது எனற்பாலது வீசிய எனக் குறைந்து நின்றது.

வீசிய காற்றாலெனச் செய்யுட்கிடந்தவாறே பொருட்கூறுவாருஞ் சிலர். அஃதே முதலுரையார்க்கு முடன்பாடு.

வேர்வையும் தேகமும் என்ற உம்மைகளான் முறையே ரோமமும் எனவும் மனத்துள்ளும் எனவும் உம்மை பெறப்பட்டன.

இக்கருத்தறியாது தம் மதமே பெரிதென வுள்ளிட்ட முதலுரையார் ஆசிரியரை ஒருமை பன்மை யறியாதாரொனும் தவறுளம்பற்றிக் குளிர்ந்தன என்பதைக் குளிர்ந்தது எனத் திருத்திப் போந்தார். அவர்க் கிவ்வழக்கே இயற்கை என்க.

புளகம் என்ப தீறுகெட்டுப் புளகு எனநின்றது. திருந்திழை அன்மொழித்தொகை. பயங்கரமென்பது ஈண்டுப் புள்ளினது வருகையானும் கருப்பவேதனையானும் உயிர்மே னிகழ்வதென்னோ! வென ஆமினா அவர்கட்கு நிகழும் உள்ளச்சத்தைக்குறித்து நின்றது. உம்மைகள் விகாரவகையாற் றொக்கன. அன்று அசைநிலை. ஏகாரம் ஈற்றசை.

(79) அண்டரி லொருவர் மரகதக் கிண்ணத்
தமுதினை யேந்திவந் தடுத்துக்
கொண்டவர் கொடுப்பக் கூறுலீன் வாங்கிக்
கொடியிடை மடமயிற் கீய
முண்டகக் கரத்தாற் றுங்கியே பருக
முதிர்பர தாபமு நீங்கிக்
கண்டெனு மொழியார் கருப்பநோ யகன்று
கலக்கமுந் தெளிந்தன ரன்றே.

(ப - ரை.) அண்டரிலொருவர் - அதூஉமன்றி மலக்குகளிற் றகுதியான ஒருவர், மரகதம் - சுவர்க்கத்துப் பச்சையிரத்தினத்தாலாய, கிண்ணத்தில் - பாத்திரத்திலே, அமுதினை - தேவாமிர்தத்தை, ஏந்தி - சுமந்து, வந்து - அவணுற்று, அடுத்து - நாயகியைச்சமீபித்து, கொண்டவர் - இருக்கப் பெற்றவர்களைநோக்கி, ஈய - நீட்ட, கூறுலீன் - கூறுலீனென்று சொல்லப்பட்ட வோரரம்பைப் பெண், வாங்கி - அதை யிருகையானுமேந்தி, கொடி - கொடிபோலும், இடை - இடையினையுடைய, மடமயிற்கு - இளமயிலாகிய ஆமினா அவர்கட்கு, கொடுப்ப - கொடுக்க, முண்டகம்

கரத்தால் - தாமரைமலர்போலுங் கையினல், தாங்கி - மிக்கநொய்மையவாகவாங்கி, பருக - அருந்த, முதிர் - உடனேமுதிர்தலாகிய, பர தாபமும் - இரக்கமும், கருப்பநோய் - பிரசவ வேதனையும், அகன்று - மனத்தின்கண் ணக லுதலாகிய, கலக்கமும் - அச்சமும், நீங்கி - தோற்றுதுவிலகி, கண்டு எனும்-கற்கண்டுபோ லும் இனிய, மொழியார் - சொற்களையுடைய ஆமினுஅவர்கள், தெளிந்தனர் - தெளிவுற்றிருந் தார்கள், எ-று.

(போ-ரை.) அதூஉமன்றி மலக்குகளிற் றகுதியான வொரு வர் சுவர்க்கத்துப் பச்சை யிரத்தினத்தாலாய பாத்திரத்திலே தேவாமிர்த்தத்தைச் சுமந்து அவணுற்று நாயகியைச் சமீபித் திருக்கப் பட்டவர்களை நோக்கி நீட்டகூறுலீ னென்று சொல்லப்பட்ட வோரரம்பைப்பெண் அதை யிருகையானு மேந்திக் கொடிபோலு மிடை யினையுடைய விளமயிலாகிய ஆமினுஅவர்கட் குக் கொடுக்கத் தாமரைமலர்போலுங் கையி னல் மிக்க நொய்மையாக வாங்கி யருந்த, உடனே முதிர்தலாகிய விரக்கமும் பிரசவ வேதனையும் மனத்தின்கண் ணகலுதலாகிய வச்சமும் தோற்றுது விலகிக் கற்கண்டுபோலு மினிய சொற்களையுடைய ஆமினுஅவர்கள் தெ ளிவுற் றிருந்தார்கள் என்பதாம்.

அண்டரி லொருவர் என்பது ஈண்டுறிலுவானை யுணர்த்தி நின் றது. மரகதக் கிண்ணத்தி லமுதுகொடுவந்தார் மலக்காகலின் நாய கியை யடுத்தற் கிசையாது அங்ஙன மிருந்தார்மாட்டுக் கொடுத்தார் எனக்கொள்க. அடுத்துக் கொண்டவர் என்புழி ஈண்டு நாயகியைச்

சமீபித்துப் பரிகரித்துற்ற ஷஹாபுலீன்களை. கொடியிடை யுவமத் தொகை. மடமயில் முண்டகம் என்பன வாகுபெயர்கள்.

"ஈயென்கிளவி யிழிந்தோன்கூற்றே."

என்றார் தொல்காப்பியனார். ஆதல்பற்றி அமுதுகொண்டுற்ற வம் மலக்கு ஷஹாபுலீன்களினும் மிக்க சிறந்தானென்பது தோன்ற 'ஈய' வென்றார். இவ்வுயர்வுபற்றியே ஆசிரியர் அண்டரொன்றாது "அண்டரி லொருவர்" என்றார். கொண்டவர் ஈயவென்றவதனான் நான்கனுருபு விரித்துப் பொருள்கூறினு மமையும். கலகமென்பது ஈண்டு துறை சிப்பெண்கட் காள்விடுத்தபோது அவர்கள் அவண் வருவ தில்லெ மறுத்தார் எனுஞ்சொல் செவிச் சுடச்சுடப் புகுதலால் நெஞ்சகத்து விரிந்து நின்ற வச்சத்தை. அகன்றவென்னு மெச்சம் அகன்று எனத் திரிந்து நின்றது. உம்மைகள் விகாரவகையாற் றொக்கன. அன்று அசைநிலை. ஏகாரம் ஈற்றசை.

இச்செய்யுட்கு முதலுரையார் கூறுவனவெல்லாம் முரணுரையா கலின் எடுத்துக்கூறி மறுத்திலம். அவருரையானே அறிக. பிற வருவனவுங் கொள்க.

(80) பொன்னொளிர் கவினு முறக்குழைத் தெழுது
பூந்துகில் வெண்ணிறங் கவின
மின்னொளி கரப்பக் கதிர்விடுங் கலையை
விரைந்தொரு தட்டினி லேந்திப்
பன்னிய வமரர் தொகையினி லொருவர்
பரிவுடன் கொணர்ந்ததை வாங்கி
யன்னமோ மயிலோ வெனுமொரு மடமா
னமினுத் திருக்கையி லீந்தார்.

(ப - ரை.) பன்னிய - தேர்தலாகிய, அமரர் - மலக்குகளின், தொகையினில் - கூட்டத்திலே, ஒருவர் - தகுதி யாற் சிறந்தவர், ஆமினு - ஆமினு அவர்கட்காக, ஒளிர் - ஒளிவையும், பொன் - செம்பொன்னினை யும், உற - பொருந்த, குழைத்து - கலப்பித்து, எழுது - அதனாலெழுதும், பூ - பூக்களையுடைய,

கவினும் - அழகூஉம், துகில்-சுவர்க்கத்துப்பட்டாடைகளில், மின் - மின்னலினது, ஒளி - பிரபையானது, கரப்ப - மறையும்படியாக, வெண்ணிறம் - வெள்ளியநிறத்தினையுடைய, கதிர்-கிரணங்களை, விடு - எறியாநிற்கும், கலையை - ஒரு துகிலினை, கவின - அழகெறிப்ப, ஒருதட்டினில் - ஒரு பொற்றட்டிலே, ஏந்தி - சுமந்து, விரைந்து - துரிதமாய், பரிவுடன் - அன்போடு, கொணர்ந்து - கொடுவந்து, அன்னமோ - நடையால் அன்னப்பட்சியோ, மயிலோ - சாயலால் மயிலோ, எனும் - என்றையுறத்தக்க, ஒரு - ஒப்பற்ற, மடமான் - அரம்பையை, வாங்கி - கூப்பிட்டு, அதை - அப்பட்டாடையை, திரு - அழகிய, கையில் - கரத்திலே, ஈந்தார் - கொடுத்தார், எ-று.

(போ-ஙா.) தேர்தலாகிய மலக்குகளின் கூட்டத்திலே தகுதியாற்சிறந்தவர் ஆமிறுஅவர்களுக்காக ஒளியையும் செம்பொன்னினையும் பொருந்த கலப்பித்து அதனு லெழுதும் பூக்களையுடைய அழகூஉம் சொர்க்கத்துப் பட்டாடைகளில் மின்னலினது பிரபையானது மறையும்படியாக வெள்ளிய நிறத்தினையுடைய கிரணங்களை எறியாநிற்கும் ஒருதுகிலினை அழகெறிப்ப ஒரு பொற்றட்டிலே சுமந்து துரிதமாய் அன்போடு கொடுவந்து நடையா லன்னப்பட்சியோ! சாயலான்மயிலோ! வென் றையுறத்தக்க வொப்பற்ற வரம்பையைக் கூப்பிட்டு அப்பட்டாடையை அழகிய கரத்திலே சொடுத்தார், என்பதாம்.

பொன்னொளி உம்மைத்தொகை. பூந்துகில் என்புழி மலக்கு கொடுவந்தார்எனு மேதுவான் சுவர்க்கம் வருவித் துரைக்கப்பட்டது. பன்னியவமரர் என்பது ஈண்டு முகர்றபீன்களைக் குறித்துநின்றது. ஒருவர் என்றமையான் அத் தொகுதியிற் சிறந்தா ரொருவனாக் கொள்க. அன்னமோ மயிலோ வென்பதை ஆமினுவுடன் கூட்டினு மமையும். அவற்றின் ஓகாரங்கள் ஐயம். அதை என்னுஞ்சுட்டுக் கலையைக்குறித்து நின்றது. ஒரு என்பதைக் கலையோடு கூட்டினுமாம்.

இனி ஆமினுவினது சிறப்பு இனைத்தெனவும் இச் செய்யுளிற் கிடந்த அரிய கருத்து இனைத்தெனவும் உணராது முதலுரையார் தாங்கொண்ட போலிய கருத்துக்கிணங்க பொருளும் இலட்சணமுங் கூறிப்போந்தார். அவர் ஈந்தார் என்பதை ஆமினுவோடு படுத்துகையான் உறும் இட ரினைத்தென்பதை யறிந்திலர்போலும். பிறவருஉம் விகற்பங்களை யவருரை கொண்டு நோக்குக.

(81) செவ்விவீற் றிருந்து முகமதி யிலங்குந்
திருந்திழை யாசியா தமையு
மவ்வலங் குழலார் மறியமென் றுரைக்கு
மயிலையு மரம்பையர் தமையுங்
கவ்வையங் கடல்சூழ் புடவியிற் சிறந்த
காட்சிசேர் மக்கமா நகரி
னவ்விவேல் விழியா ராமினு விருக்கு
நறைமனை புகவிறை யுரைத்தான்.

(ப - ரை.) இறை - அல்லா ஜல்லஷான ஹூவத ஆலாவானவன், செவ்வி - அழகெலாம், வீற்றுஇருந்து - குடியிருந்த, முகம் மதி - முகமாகிய சந்திரன், இலங்கும் - பிரகாசியாநிற்கும், திருந்து - திருந்துதலாகிய, இழை - ஆபரணாதிகளையுடைய, ஆசியாதமையும் - ஆசியாவென்ற நாயகியையும், மவ்வல் - வனமல்லிகை நிறைந்த, அம்-அழகிய, குழலார்-கூந்தலையுடையாராகிய, மறியமென்று

உரைக்கும் - மறியம் அலையிஸ்ஸலா மென்று சொல்லப்படும், மயிலையும் - மயில்போல்வாரை யும், அரம்பையர்தமையும் - வேறுசில ஹூறுலீன் களையும், கவ்வை - சப்தத்தையுடைய, கடல்- சமுத்திரம், சூழ்-சூழ்ந்திராநிற்கும், புடவியில்- பூலோகத்திலே, சிறந்த-அரிய, காட்சிசேர்-அற் புதம் குவிந்திராநிற்கும், மக்கம் - மக்காவென் கிற, மா - மாட்சிமைபெற்ற, நகரில் - ஊரிலே, நவ்வி - அழகிய, வேல் - வேல்போலும், விழி யார் - விழிகளையுடைய, ஆமிறு - ஆமிறுஅவர் கள், இருக்கும் - வீற்றிருக்கும், நறை - வாசனை பொருந்திய, மனை - வீட்டில், புக-புகுதும்படி, உரைத்தான் - ஆக்யாபித்தனன், எ-று.

(போ-ரை.) அல்லா ஜல்லஷானஹு வத ஆலாவானவன் அழ கெலாம் குடியிருந்த முகமாகிய சந்திரன் பிர காசியாநிற்கும் திருந்துதலாகிய ஆபரணதி களையுடைய ஆசியா வென்ற நாயகியையும் வன மல்லிகை நிறைந்த அழகிய கூந்தலை யுடையா ராகிய மறியம் அலையிஸ்ஸலாம் என்று சொல் லப்படும் மயில் போல்வாரையும் வேறுசில ஹூறுலீன்களையும் சப்தத்தையுடைய சமுத் திரஞ் சூழ்ந்திராநிற்கும் பூலோகத்திலே அரிய அற்புதம் குவிந்திருக்கின்ற மக்காவெனும் மாட்சிமைபெற்ற ஊரிலே அழகிய வேல்போ லும் விழிகளையுடைய ஆமிறுஅவர்கள் வீற்றிரு க்கும் வாசனைபொருந்திய வீட்டில் புகுதும் படி ஆக்யாபித்தனன், என்பதாம்.

இருந்த என்பது திரிந்துநின்றது. செவ்விவீற் றிருந்து முகமதி யிலங்கும் என்பதை மறியமோடுங் கூட்டுக. அம் என்பது கூந்தலின்

நெளித்தலை யுணர்த்திநின்றது. ஈண்டுவந்துற்ற வரம்பையர் **ஆசியா மறியம்** இவர்களின் றகைமை இத்தன்மைத்தென்ப துணர்த்துவான் வந்தானெனக் கொள்க. கவ்வையங்கடல் என்புழி வந்த அம் இசை நிரப்பிநின்றது. அழகெனக் கொள்ளினுமாம். சேர் சூழ் என்பன வினைத்தொகை. கடவுளின் சந்நிதியமைந் திருத்தலினானே காட்சி சேர் மக்கமாநகர் என்றார். வேல்விழி உவமத்தொகை.

இனி, நவ்விவேல்விழி என்புழி மானையும் வேலையும்போன்ற விழி எனப் பொருள்கூறுவாருமுளர். அஃதே முதலுரையார்க்கு முடன்பாடு. அது உவமையிற் பொருந்தாதென மறுக்க. என்னை? மான்போன்றல் வேல்போலாது ஆகலானும் ஒருரு பின்மேலே ஒரோகாலத்து இருவாகுவமம் ஏற்றன் மரபா கா; ஆகலானும் அங்ஙனமாகுமேல் ஐயவணியா மாகலானும் என்க. **ஆசியா** அவர்களைப் **பிறு ஓளனு**டைய மனைவி என்று துணிந்து போந்தார் முதலுரையார். மனைவித்துவம் ஒரு காலத்தேனு நிகழ்ந்திலாமையான் அங்ஙனம் பொருந்தா தென்க. ஆயினும் மனைவி தோற்றமொன்றேயாம் அறிக. **மறியம் மசீஹாவுடைய** தாயார் என்பதினு மவ்வாறே கொள்க. பிறவருவன வெல்லா மமைத்துக் கொள்க.

(82) இறையவ னுரைப்பச் சுவனமா மடவா
　　ரெங்கணும் பரந்தெழு மொழுங்கு
மறியமு மழகு பழுத்தொளி ததும்பு
　　மானனு ராசியா தாமு
நிறைமதி யிரண்டு வானகத் திழிந்து
　　நிலத்திடை யுடுவொடுந் திரண்டே
யறைகழல் சிலம்ப வருவபோல் வந்தங்
　　காமினுத் திருமனை புகுந்தார்.

(ப - ரை.) இறையவன் - **அல்லா சுபுஹான ஹுவத ஆலா** வானவன், உரைப்ப - அவ்வாறு சொன்னவுட னே, அழகுபழுத்து - அழகுமுதிர்ந்து, ஒளி த்தும்பும்-பிரகாசம்வழியாநிற்கும், மான் அனர்-மான்போலும், ஆசியாதாமும் - **ஆசியா** நாயகி

யும், மறியமும் - மறியம் அலைகிஸ்ஸலா மவர்களும், எங்கணும் - எல்லாவிடத்தும், பரந்து - பரவுதலாக, சுவனம் - சுவர்க்கத்தின், மா-மாட்சிமைதங்கிய, மடவார் - ஹூறுலீன்களும், எழும் - எழும்பிய, ஒழுங்கு - முறையானது, நிறை - கலைகணிறைந்த, மதியிரண்டு - இரண்டு சந்திரன்கள், உடுவொடு - நட்சத்திரக் கூட்டத்தோடு, திரண்டு - கூடி, வானகத்து-ஆகாயத்தினின்று, இழிந்து - இறங்கி, நிலத்திடை-பூலோகத்தின்கண், வருவபோல் - வருவதேபோன்று, வந்து - வருதலைச்செய்து, அறை - புகழும்படியான, கழல் - பாதசரங்கள், சிலம்ப - சப்திக்க, ஆமினு - ஆமினுஅவர்களின் , திருமனை - தெய்வத்தன்மைபொருந்திய வீட்டின்கண், புகுந்தார் - பிரவேசித்தார்கள், எ - று.

(போ-ா.) அல்லா சுபுஹான ஹுவதஆலாவானவன் அவ்வாறு சொன்னவுடனே அழகுமுதிர்ந்து பிரகாசம் வழியாநிற்கும் மான்போலும் ஆசியா நாயகியும் மறியம் அலைஹிஸ் ஸலாம் அவர்களும் எல்லாவிடத்தும் பரவுதலாக சுவர்க்கத்தின் மாட்சிமைதங்கிய கூறுலீன்களும் எழும்பிய முறையானது கலைகள் நிறைந்த இரண்டு சந்திரன்கள் நட்சத்திரக் கூட்டத்தோடுகூடி ஆகாயத்தி னின் றிரங்கிப் பூலோகத்தின்கண் வருதலேபோன்று வருதலைச்செய்து புகழும்படியான பாதசரங்கள் சப்திக்க ஆமினுஅவர்களின் தெய்வத்தன்மை பொருந்திய வீட்டின்கண் பிரவேசித்தார்கள், என்பதாம்.

எங்கணும் என்பது ஈண்டு மிகுதிகுறித்து நின்றது. அழகுபமுத்து ஒளிததும்பும் மானனூர் என்பதை மறியமோடுங் கூட்டுக.

மானனுர் என்பது ஈண்டு மானினது நுண்ணிய அரிய வுணர்ச்சியா னே அந்நாயகிகளின் உணர்ச்சி இத்தன்மைத் தென்பதைப் பயப் பிப்பானுயினர் ஆசிரியரொனக்கொள்க. அது அவர்களின் மறதியின் மையைக் குறித்து நின்றது. நிறைமதி என்றமையான் கலைகள் வரு வித் துரைக்கப்பட்டன. ஆசியா மறிய மிவ்விருநாயகிகளை இரண்டு மதிகளெனவும் ஹூறுலீன்களை நட்சத்திரக் கூட்டங்களெனவும் கூறி னமையான் அவர்கட் கிடையே தகைமையானும் அவ்வாறெனவே கொள்க. தாம் உரை யசை. அறைகழல் சிலம்ப என்புழிச்,

"சொல்லுகின்ற அடிகளில் ஆபரணங்கள் ஒலிக்கும்படி" என்று பொருள்கூறுவர் முதலுரையார். அக்கூற்றில் பொருள் சிறக்காமையான் பயனில்கூற் றென்க.

திரண்டே என்பதின் ஏகாரம் இசைநிறை. கழல் ஆகுபெயர். அங்கு அசைநிறை.

இனி, அதை மக்கத்தில் எனப் பொருள் கொள்வர் முதலுரை யார்,

(83) படித்தலம் புகலு மாமினு வலது
பாரிசத் தாசியா தாமும்
வடித்ததெள் ளமிர்த மெனுமொழிக் குதலை
மறியமு மிடதுபா ரிசத்தி
லடுத்தவப் பொழுதி லரம்பையர் சிலர்வந்
தணிமுழந் தாடுடை கணைக்கால்
பிடித்தடி வருடி நின்றனர் மனையும்
பேரொளி பிறங்கின வன்றே.

(ப-ரை.) படி - பூலோகமும், தலம் - வானலோகமும், புகல் - புகழ்ந்துபேசும், ஆமினு - ஆமினுவினது, வலதுபாரிசத்து - வெற்றிக்குரிய வலதுபக்கத் திலே, வடித்த - வாசமாக்கப்பட்ட, தெள் - தெள்ளிய, அமிர்தம்எனும் - அமிர்தம்போலும், குதலைமொழி - மழலைச்சொற்களையுடைய, ஆசி யாவும் - ஆசியா நாயகியும், இடதுபாரிசத்தில் -

புகழுக்குரிய விடதுபக்கத்திலே, மறியமும் - மறியம் அலைஹிஸ் ஸலா மவர்களும், அடுத்த - நெருங்கிய, அப்பொழுதில் - அந்தநேரத்திலே யே, அரம்பையர் - தேவப்பெண்களில், சிலர் - பெருமைபொருந்தியவர்கள், வந்து-ஆமினுஅவர் களைச்சமீபித்து, அணி - அழகிய, துடை-துடை களையும், முழந்தாள்-முழங்கால்களையும், கணைக் கால் - கீழ்க்கால்களையும், பிடித்து - மெல்லப் பற்றியும், அடி - பாதங்களை, வருடி-தடவியும், நின்றனர் - தொழும்பியற்றி நின்றார்கள், மனை யும் - ஆமினுஅவர்களின் வீடும், (மக்கமாநகர முழுவதும்) பேரொளி - அடங்காப்புகழ்கள், பிறங்கின - நிறைந்திருந்தன, எ-று.

(போ-ரை.) பூலோகமும் வானலோகமும் புகழ்ந்துபேசும் ஆமினுவினது வெற்றிக்குரிய வலதுபக்கத்திலே வாசமாக்கப்பட்ட தெள்ளிய வமிர்தம்போலு மழலைச்சொற்களையுடைய ஆசியா நாயகியும் புகழ்க்குரிய விடதுபக்கத்திலே மறியம் அலை ஹிஸ்ஸலாமவர்களும் நெருங்கிய அந்த நேரத் திலேயே தேவப்பெண்களில் பெருமைபொ ருந்தியவர்கள் ஆமினுஅவர்களைச் சமீபித்து அழ கிய துடைகளையும் முழந்தாள்களையும் கீழ்க் கால்களையும் மெல்லப்பற்றியும் பாதங்களைத் தடவியுந் தொழும்பியற்றி நின்றார்கள். ஆமினு அவர்களின் வீடும் மக்கமாநகர முழுவதும் அடங்காப்புகழ்கள் நிறைந்திருந்தன, என்பது தாம்.

படிஎன்பது பூமியைக்குறித்து நின்றமையான் தலம் எனும் உல கப்பொதுப்பெயர் வானலோகத்தோடு ஈண்டுச் சுவர்க்கத்தையுங்

குறித்து நின்றது. படித்தலம் என்புழி ஆகுபெயராய் அவைகளின் உயிருள்ளன உயிரில்லன வனைத்தையு முணர்த்திநின்றது. வலது வெற்றிக்குரியதென்பது வெளி. வலதைக்காத்தலின் இடதுபுகழ்க் குரியதெனப்பட்டது. புகல் என்றமையால் புகழ்ந்து என்றசொல் பெறப்பட்டது. புகல் வினைத்தொகை. வடித்த தெள்ளமிர்தமெனு மொழி என்பதை ஆசியாவுடனுங் கூட்டுக. தாம் என்புழி முன்னு ரைத்தாங் குரைக்க. அணி என்பதை முழந்தாள் கணைக்கால் அடி என்பனவற்றோடுங் கொள்க: செய்யுளாதலின் தொடை முழந்தாள் கணைக்கா லென்னுது "முழந்தாடுடை கணைக்கால்" என்றார். சிலர் என்ற அருமையான் பெருமை பொருந்தியவனொன்றும். உய்த்துணர்க. உம்மைகள் விகாரவகையாற் றொக்கன. மனையும் என்ற உம்மையான் மக்கமாநகரமுழுவது மென்பது பெறப்பட்டது.

இனி, மனையும்என்ற உம்மையை ஆக்கஉம்மை யெனவும் பே ரொளி என்பதைப் பெரியஒளி யெனவுங் கொண்டு பிறங் கின வென்பதைப் பிறங்கினது எனத் தமதியற்கைக் கிலக் காய்த் திருத்தியும் அடங்காது "மனையும் என்ற உம்மை யை எச்ச உம்மையாய்க்கொண்டு மனையும் பிறவும் பிறங் கின எனப் பொருள்கூறுவாருமுளர்" என்றிழித்துப் பேசி யுந் தம தறியாமையை விளக்கிப் போந்தார் முதலுரை யார். ஆகலி னவருரை போலியாமென மறுக்க.

(84) மடந்தையு மகப்பே றடுத்திடுஞ் சமயம்
வானவர் குழுவினை நீந்திக்
கடந்துவந் தொருவர் நின்றன ரவர்செங்
கரத்தினிற் கிண்ணமொன் றேந்தி
யிடங்கொளா துறைந்த கூறுலின் களிலோ
ரேந்திழை கடிதினில் வாங்கி
யடர்ந்தில்லம் புகுந்து கொடுப்பதைப் பருகி
யாமினு மகிழ்ந்தன ரகமே.

(ப - ரை.) மடந்தையும் - (அங்ஙனமாக) ஆமினுஅவர்கட்கு, மகப்பேறு - பிள்ளையைப்பெறுகாலம், அடுத் திடும் - சமீபித்திடும், சமயம் - தருணத்தில்,

வானவர் ஒருவர் - மலக்குகளினின்றுமொருவர், கிண்ணமொன்று ஏந்தி - ஒரு பொற்கிண்ணத்தைக் கரகமலத்திற் றுங்கி, வந்துநின்றனர் - திருமனையடுத்து நின்றூர், இடம்கொளாது - இடமறநிறைந்து, உறைந்த - வீற்றிருந்த, கூறு லீன்களில் - அரம்பைகளில், ஓர் - ஒப்பற்ற, எந்திழை - அரம்பைப்பெண், அவர் - அம் மலக்கின், செம் - செம்மையாகிய, கரத்தில் - கையிலிருந்து, கடிதில் - விரைவாக, கடந்து - பாய்ந்து, வாங்கி - பெற்று, அடர்ந்து - அங்ஙனம் நெருங்கி யவர்களை நெருக்கி, இல்லம் - ஆமினுஅவர்களின் அறைவீட்டில், புகுந்து - பிரவேசித்து,கொடுப்ப-கொடுத்தவுடனே, ஆமினு- ஆமினு அவர்கள்வாங்கி, அதை - அக்கிண்ணத்தின் பானகத்தை, பருகி-குடித்து, அகம்மகிழ்ந்தனர் - நெஞ்சங்குளிர்ந்து சந்தோஷித்திருந்தார்கள், எ-று.

(போ-ரை.) அங்ஙனமாக ஆமினுஅவர்கட்குப் பிள்ளையைப் பெறுகாலஞ் சமீபித்திடுந்தருணத்தில் மலக்குகளில்நின்றும் ஒருவர் ஒரு பொற்கிண்ணத்தைக் கரகமலத்திற்றுங்கித் திருமனையடுத்து நின்றூர், இடமறநிறைந்து வீற்றிருந்த அரம்பைகளி லொப்பற்ற அரம்பைப்பெண் அம் மலக்கின் செம்மையாகிய கையிலிருந்து விரைவாகப்பாய்ந்து பெற்று அங்ஙனம் நெருங்கியவர்களை நெருக்கி ஆமினுஅவர்களின் அறைவீட்டில்பிரவேசித்து கொடுத்தவுடனே ஆமினு அவர்கள் வாங்கி அக் கிண்ணத்தின் பானகத்தைக் குடித்து நெஞ்சங் குளிர்ந்து சந்தோஷித்திருந்தார்கள், என்பதாம்,

மடந்தையும் என்புழி உம்மை ஆக்கப் பொருளிடத்து வந்தது. மகப்பே றடுத்திடு என்புழி இடு என்பது, வினையிடைச்சொல்எனக.

அது "இடுவிடுமுதலிய வினையிடைச்சொல்லே" என்ற விதியானறிக.

ஒரு வானவரொன்னுது வானவர்குழுவினை நீந்திவந் தொருவர் என்றமையான் அம் மலக்கை மூகர்றபீன்களி லொருவரெனக்கொள்க.

அம் மலக்குக் கொண்டுவந்துற்ற அமிர்தம் மகப்பேற்றிற்குரிய துன்பம் ஒன்றே யகற்றுமென்னுங் கருத்துபற்றி மகப்பேறடுத்திடுஞ் சமயம் என்ருர். இன்னணமாகலின் அதற்கேற்ற பானகம் பெறப்பட்டது. அது பருகி என்றதனுனுமறிக. வந்துநின்றனர் என்றவதனுன் திருமனை என்பது பெறப்பட்டது. அவர் என்பது ஈண்டுக் இன்னணங் கொண்டுவந்துற்ற வம் மலக்கைச் சுட்டிநின்றது. கொடுப்ப அதை என்பது கொடுப்பதை எனத் தொக்குநின்றது. ஏந்திழை அன்மொழித்தொகை. அடர்த்து என்றிருத்தற்பாலது எதுகை யின்பம்பற்றி மெலிந்து நின்றது. ஏந்தி என்றமையான் கரம் என்பதூஉம், இடங்கொளாது என்றமையான் நெருங்கி என்பதூஉம், அடர்ந்து என்றமையான் அங்ஙனம் நெருங்கியவர்களை என்பதூஉம், கொடுப்பதை என்றமையான் வாங்கி என்பதூஉம் பெறப்பட்டன. ஈண்டு அதை எனுஞ் சுட்டுப் பானகத்தைக் குறித்து நின்றது. ஈற்றேகார மீற்றசை.

(85) பானகம் பருக வொளிவும்வந் திறங்கிப்
பகலவன் கதிரொனப் பரப்ப
வானவர் மகளிர் மருத்துவம் புகுத
மறியமு மாசியா தாமும்
தேனவிழ் பதுமச் செழுங்கரங் கொடுத்துச்
சேர்ந்தணை தருகுறச் சிறந்த
கானமர் குழலா யஞ்சலென் றுரைப்பக்
கனிந்திள கினகருப் பமுமே.

(ப - ரை.) பானகம் - ஆமினுஅவர்கள் தேவபானகத்தை, பருக - குடித்தமாத்திரத்திலே, பகலவன்-சூரியனது, கதிரொன - பிரகாசத்தைப்போல, ஒளிவும் - ஓரரிய சோதியானது, இறங்கிவந்து -

வானத்தினின்று கீழ்நோக்கி ஆமினு மனையகத் துற்று, பரப்ப - தமது பிரபையைப் பரவச் செய்யவும், வானவர்மகளிர்-அங்குற்ற அரம்பை கள், மருத்துவம்புகுத - பிரசவவைத்தியத்திலே ஆயத்தமா யிருக்கவும், ஆசியாவும் - ஆசியா நாயகியும், மறியமும் - மறியம் அலைஹிஸ்ஸலா மவர்களும், தேன் - மகரந்தம், அவிழ்-விரியும், செழும் - செழிய, பதுமம் - தாமரை மலர்போ லும், கரம் - கையால், கொடுத்து - சார்த்து, சேர்த்து - கலந்து, அணைந்து - தழுவி, அரு குற - சமீபித்திருக்கவும், சிறந்த - அருமை யாகிய, கான்அமர் - வாசனையமைதலான, குழ லாய் - கூந்தலையுடைய ஆமினுவே? அஞ்சல்-பய ப்படவேண்டாம், என்று உரைப்ப - என்று மலக்குகளில் மூகர்றபீன்களால் சொல்லிக்கொண் டிருக்கவும், கருப்பமும் - பிள்ளையானது, கனி ந்து - இனிமையாகி, இளகின - கருப்பையில் தரிப்பின்றி நெகிழ்ந்த, எ-று.

(போ-ரை.) ஆமினுஅவர்கள் தேவபானகத்தைக் குடித்த மாத்திரத்திலே சூரியனது பிரகாசத்தைப்போ ல ஓரரிய சோதியானது வானத்தினின்று கீழ் நோக்கி ஆமினுமனையகத்துற்றுத் தமது பிரபை யைப் பரவச்செய்யவும் அங்குற்ற அரம்பை கள் பிரசவ வைத்தியத்திலே ஆயத்தமாயிருக் கவும் ஆசியா நாயகியும் மறியம் அலைஹிஸ்ஸலா ஸலாமவர்களும் மகரந்தம் விரியும் செழிய தாமரைமலர்போலும் கையால் சார்த்துக் கல ந்து தழீஇச் சமீபித்திருக்கவும் அருமையாகிய வாசனையமைதலான கூந்தலையுடைய ஆமினுவே

பயப்படவேண்டாமென்று மலக்குகளில் மூகர் றபீன்களாற் சொல்லிக்கொண் டிருக்கவும் பிள் ளையானது இனிமையாகி கருப்பையில் தரிப் பின்றி ஞெகிழ்ந்தஎன்பதாம்.

ஒளிவும் கருப்பமும் என்புழி உம்மைகள் ஆக்கம். ஒளிவாகலின் இறங்கி, என்றமையகன் அதற்குரிய வானம் பெறப்பட்டது. பரப்ப என்புழிப் பிரபை செய்யுள் விகாரத்தாற் சிதைந்த வதனுன் வருவிக் கப்பட்டது. உலகு வழக்குப்பற்றிப் பிரசவ வைத்தியத்தை மருத்து வம் என்முர். அவிழ் வினைத்தொகை. பதுமம் ஆகுபெயர். அமர் முதனிலைத்தொழிற்பெயர். உம்மைகள் விகாரவகையாற் ருெக்கன மூகர்றபீன்கள் அவாய்நிலை.

இச் செய்யுள், நபிபெருமானரவர்கள் மனுஷீகமரபுவழாது காத்தற்பொருட்டு அமர்ந்திராநின்ற மாட்சிமைதங்கிய கருப்பையா கிய பேருலகத்தினின்று இவ்வுலகும் இரட்சணையுற எழுந்தருளி னுர்க ளென்பதை நுதலூஉமாகலின், அவ்வருளே உயிர் பொருட் கினிய தென்பான் “கனிந்து” என்றும் அவ்வினிமையே உலகெலா நிறைந்து பரவுமென்பான் கருதி அப்பொருடோன்ற “இளகின” வென்றுங் கூறினுர். கருப்பமென்பது அதனுட்படும் நபிபெருமா ணை யுணர்த்துகையான் ஆகுபெயர். இளகினது என்புழித் துவிகுதி கெட்டுநின்றது. பிற வருவனவெல்லாம் உய்த்துணர்க.

(86) கோதறப் பழுத்து மதுரமே கனிந்த
கொவ்வைவா யரம்பையர் வாழ்த்தித்
தீதற நெருங்கி யேவல்செய் திருப்பச்
செழுங்கம லாசனத் திருந்த
மாதருக் கரசி யாமினு வுதர
மனையிடத் திருந்துமா நிலத்தி
லாதரம் பெருக நல்வழிப் பொருளா
யகுமது தோற்றின ரன்றே.

(ப - ரை.) கோது அற - குற்றமென்பதே யுருது, பழுத்து- கனிந்து, மதுரம் - இன்பமானது, கனிந்து - புதைதலாகிய, கொவ்வை - கொவ்வைக்கனி

போலுஞ் சிவந்த, வாய்-வாயினையுடைய, அரம்பையர் - ஹூறுலீன்கள், வாழ்த்தி - துதித்து, தீது அற-ஏதுமோ ரிடைதலுமின்றி, நெருங்கி-செறிந்து, ஏவல்செய்து - ஏவற்றொழிலையெல்லாம் முடித்து, இருப்ப - இன்னுமுளவாம் ஏவல்நோக்கி நிற்கவும், செழும்-செழிய, கமல ஆசனத்து-தாமரைப்பொகுட்டின்கண், இருந்த-வீற்றிருந்த, மாதருக்கு - சீதேவிகளுக்கும், அரசி - நாயகமாகிய, ஆமினு - ஆமினுஅவர்களின், உதரம் மனையிடத்திருந்து - அடங்காப் புகழ்க்குரிய கருப்பமாகிய வீட்டினின்று, மா - மாட்சிமைதங்கிய, நிலத்தில் - இப்பெரிபூமியிலும், ஆதரம் பெருக - தமது அன்பானது இடையறுது பெருகாநிற்கும், நல் - உபகாரமாகிய, வழி - பாதைக்குரிய, பொருளாய் - வஸ்துவாய், அகுமது - அஹ்மது எனும் அட்சர வடிவாய் வந்த முகம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், தோற்றினர் - இவ்வளவெனப்படாது விரிவுதலாகிய புதுமையையுடைய சந்திரன்க ளதுசோதியாய் வாராநின்ற ஒப்பற்ற மாட்சிமைதங்கிய கிரணங்களையுடைய அழகிய நிலவுபோன்ற திருமேனியையும் கிருபையானது குடியிருக்கும்படியான செம்மையாகிய தாமரைமலர்போலும் உபயநோக்கங்களையு முடையராய் உதயமானுர்கள், எ-று.

ஸலவாத்துல்லாஹி அலைஹி.

(போ-ா.) குற்றமென்பதே யுறுது கனிந்து இன்பமானது புதைதலாகிய கொவ்வைக்கனிபோலுஞ் சிவந்த வாயினையுடைய ஹூறுலீன்கள் துதித்து ஏது மோரிடைதலுமின்றிச் செறிந்து ஏவற்

ருெழிலையெல்லாம் முடித்து இன்னுமுளவாம் ஏவல் நோக்கி நிற்கவும், செழிய தாமரைப் பொகுட்டின்கண் வீற்றிருந்த சீதேவிகளுக்கும் நாயகியாகிய ஆமினுஅவர்களின் அடங்காப் புகழ்க்குரிய கருப்பமாகிய வீட்டினின்று மாட்சிமைதங்கிய இப்பெரிய பூமியிலும் தமது அன்பானது இடையருது பெருகாநிற்கும் உபகாரமாகிய பாதைக்குரிய வஸ்துவாய் அஹ்மது எனும் அட்சரவடிவாகிய முகம்மதுஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் இவ்வளவெனப்படாது விரிவுற்ற புதுமையையுடைய சந்திரன்களது சோதியாய் வாராநின்ற வொப்பற்ற மாட்சிமைதங்கிய கிரணங்களையுடைய அழகிய நிலவுபோன்ற திருமேனியையும் கிருபையானது குடியிருக்கும்படியான செம்மையாகிய தாமரைமலர்போலும் உபய நோக்கங்களையு முடையராய் உதயமானுர்கள் என்பதாம், (ஸலவாத்துல்லாஹி அலைஹி.)

ஹறுறுலீன்கள் நபிபெருமானுரவர்களின் புகழே யாண்டும் இடையறுதலின்றி அலர்த்துதலான் முதிர்தலின் "கோதறப்பழுத்து" என்றும் அவ்வாறு புகழ்ந்து தழும்பேறிப் பயந்த பயனுற்றலினுனே இன்புற்றிருந்தவாயாதலின் "மதுரமே கனிந்த கொவ்வைவாய்" என்றுங் கூறினுர். கொவ்வைவாய் என்பதைக் கொவ்வைக்கனிபோலுஞ் சிவந்த வாய் என விரிக்க.

இனி, கோதறப் பழுத்து மதுரமே கனிந்து என்பதைக் கொவ்வையோடுகூட்டி "சக்கையறப்பழுத்து இன்பங்கனிவான கொவ்வைக்கனி" என வாளாப் பொருள்கூறி யிடர்ப்படுவர் முதலுரையார்.

ஹறுறுலீன்கள் சூக்குமதேகிகளாகலின் நெருங்குதலால் துன்பநிகழாதென்பான்கருதித் "தீதறநெருங்கி" என்ருர். ஹறுறுலீன்க

ளாகலின் நினைக்கப்படுங் கருமங்களை நினைத்தவிடத்திலேயே முடிப்ப ரென்பது கருதி வேலையென்னாது "ஏவல்" என்றார். வேலை என்பது ஈண்டு ஏவலுக்குப் பின் நிகழுஉந்தொழிலை. ஆதலின் அறிக. ஏவல் ஆகுபெயர். செய்திருப்ப என்றமையான் இன்னுமுளவாம் ஏவனோக்கி நின்றாரென்பது அருத்தாபத்தியானே பெறப்பட்டது. கொவ்வை கமலம் என்பன ஆகுபெயர்கள். கொவ்வைவாய் என்ப துவமத்தொகை. ஆண்டு அதற்குரிய சிவப்பு பெறப்பட்டது. நபிபெருமானாரவர்களின் தாயாகிய ஆமினா அவர்கள் இவ்வுலகத்தின்கண் உதயஞ்செய்தற்குமுன்னர்ச் சீதேவி கமலாசனம் வீற்றிருந்தாள். அவள்பிற்றை அவ்வாசனத்துக் கியாம் பாத்திரமலேம் எனும் வெட்கத்தினானே யதை இழக்கப் பெற்றாள் என்பதுதோன்ற "கமலாசனத்திருந்த" என விறந்தகாலத்தாற் கிளத்தாரென்றுணர்க.

லோககாருண்ய நாயகமவர்கள் அமைவுற்றிருந்த வயிறாகலின் அடங்காப் புகழ்க்குரிய வயிறென்றும். கமலாசனம் வடசொன்முடிபு. வானுலகத்தினுஞ் சுவர்க்கத்தினு மோயாது கிருபாமாரி பொழிந்து நிலத்தினுந் தோற்றாநின்று கிருபாமாரி பொழியவந்தமையான் "நிலத்தினும்" எனவும், உலகத்திருப்போர்க்கும் நாயகி என்பதுதோன்ற "கமலாசனத்திருந்த மாதருக்கும்" எனவும் உம்மைகள் பெறப்பட்டன. இம்மையில் உலகத்திற்கு அருளானவர் என்பது தோன்ற "ஆதரம் பெருக" என்றும், மறுமையி னல்வழிப்பயின்றார்க்கு அருள் புரிதல்பற்றி "நல்வழிப் பொருளாய்" என்றுங் கூறினார். இது வேத நூற் பயிற்சியென்க. இவற்றானிகழூஉ மரியகருத்துகளை வேதநூ லுணர்ந்தாரன்றி அறித லரிதென்க. நபிபெருமானா ரவர்கட்கு முகம்மது என்பதே சிறந்தபெயராகலின் "முகம்மது பிறந்தனர்" என்று கூறற்பாலதை "அகுமது பிறந்தனர்" என்று கூறியவாறு என்னையோ ஆசிரியர்? எனின், மதித்தற்கரிய சாட்சாதி கடவுளின் சந்நிதிக்குத் தகும் இயல்புகளின்றியமையா வணக்கம் புரிந்து கலந்து விளங்கா நிற்கும் மகத்வமுடைமை இந்நாயகர்க்கேயாகலின் அவ் வணக்கமே அவரது வடிவமென்பான் வணக்கவடிவுறுத்தும் உறுப்புகளாகிய எமது வேதபாடையின் அட்சரவமைதியா லெழூஉம் ஒலிவடிவேபற்றி "அகுமது" என்றார். ஆகலின் ஈண்டு அது ஆகுபெயரென்க. இக் கருத்தேபற்றி ஆசிரியர் புராணமுதற் செய்யுளைத் "திரு" எனும் மங்கலச்சொல் கொண்டு நுதலுவா ராயினர்.

அல்லதூஉம், அகுமதென்பது எமது வேதபாடையின் மதித்தற் கரிதாய்ப் புகழுகிறவர் என்னும் பொருட்பாடுடைய தோர்சொல் ஆக லின் உலகத்தார் நினைவினு மொவ்வாது அரும்பேற்றினவா யமைந் துற்ற ஒப்பற்ற புகழாக சர்வதயாபரக்கடவுளைப் புகழும் மகத்வ முடையாரொனுங் காரணம்பற்றி அகுமது என்றுரொனினு மமையும். இங்ஙனம் அதைக் காரணப்பெயர் என்க.

தோன்றினர் என்றமையான் இத்தன்மைத்தனவாய் என்பது வேண்டுதலினுனே "பெருகியகோடிசந்திரப் பிரகாசமாய், வருமொரு பெருங்கதிர் மதியம்போலவே, கருணைவீற்றிருந்த செங்கமலக்கண் ணிணை" என்று முதற்செய்யுளிற்கூறிப் போந்தனவற்றை ஈண்டுங் கூறலாயின. பிறவருவனவெல்லாம் உய்த்துணர்க. நபிபெருமானு ரவர்களின்புகழை இனைத்தென முற்றக்கூறற்குச் சாட்சாதி கடவுளே தகுதியன்றிப் பிறவுளர் யார்? ஆதலினுனே வருவனவெல்லாங் கருத் துக் கிசைந்தவா யமைத்து ஆண்டுமடங்காது இதுவேயுமன்றி யுள வாம்புகழ் மிக்க மலிவென ஓதாது ஒழிகற்க.

(87) கிடந்தொளி பரப்பி வாசங்கொப் பளித்துக்
கிளர்கிபு லாவைமுன் னோக்கி
யிடங்கொளந் தரநேர் சிரசினை யுயர்த்தி
யெழில்பெறச் சுஜூதுசெய் திணைத்தாட்
டிடன்பெற மடித்துக் குறியிடக் கையாற்
சேர்த்தொளிர் வலக்கைகான் மேல்வைத்
துடனணிக் கலிமா விரலினை யுயர்த்தி
யுதித்தனர் முகம்மது நபியே.

(ப - ரை.) கிடந்து - இருந்தபடி யிருந்து, ஒளி - பிரகாசத் தை, பரப்பி - பரவச்செய்தும், வாசம் - பல வகை நறுநாற்றங்களை, கொப்பளித்து - தேக மானது உமிழாநிற்கவும், கிளர் - உயர்தலாகிய, கிபுலாவைமுன் - தேவசந்நிதியாகிய கதுபாவின் திசையளவில், நோக்கி - பார்த்தும், இடம் -

பெருமை, கொள் - அமைதலாகிய, அந்தரம் - ஆகாயத்தளவில், நேர்-தகுதிபூண்ட, சிரசினை- தலையை, உயர்த்தி-அதிகப்படுத்தியும், இணைத் தாள் - உபயபாதங்களை, திடன்பெற - உறுதி பட, மடித்தும் - மடக்கியும், குறி - நிமித்தப் பொருளாகிய வஸ்துவை, இடக்கையால்-புகழ்க் குரிய இடதுகையால், சேர்த்து - அணைத்தும், ஒளிர் - பிரகாசிக்கின்ற, வலக்கை - வெற்றிக் குரிய வலதுகரத்தை, கால்மேல்வைத்து-வலது காலின்மேலேவைத்தும், உடன் - அத்துடன், அணி - அழகிய, கலிமாவிரலினை - மந்திரத்திற் குரிய விரலினை, உயர்த்தியும் - உயரப்பண்ணி யும், எழில்பெற - முறைவழாது அழகாய், சுஜூதுசெய்து - சாட்டாங்கஞ்செய்து, முகம் மதுநபி-முகம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல் லம் ஆண்டவரவர்கள், உதித்தனர் - உதயமாயி னார்கள், எ-று.

(போ-ள.) இருந்தபடியிருந்து பிரகாசத்தைப் பரவச் செய்தும் பலவகை நறுநாற்றங்களைத் தேக மானது உமிழாநிற்கவும் உயர்தலாகிய தேவசந் நிதியான கஃபாவின் திசையளவில் பார்த்தும் பெருமையமைதலாகிய ஆகாயத்தளவில்தகுதி பூண்ட தலையை அதிகப்படுத்தியும் உபய பாதங்களை உறுதிப்பட மடக்கியும் நிமித்தப் பொருளாகிய வஸ்துவைப் புகழ்க்குரிய இடது கையால் அணைத்தும் பிரகாசிக்கின்ற வெற்றிக் குரிய வலதுகரத்தை வலதுகாலின்மேலே வைத்தும் அத்துடன் அழகிய மந்திரத்திற் குரிய விரலினை உயரப்பண்ணியும் முறை

வழாது அழகாய்ச் சாஷ்டாங்கஞ்செய்து முகம்
மதுஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவ
ரவர்கள் உதய மாயினர்கள், என்பதாம்.

பிரகாசமனைத்துந் தமது சோதிக்குமேல் அதிகம் பரவுமேல் அவைகளி னுற்றலால் அங்ஙனமே குன்றுமென்பது வெளி. ஆகலின் பிரானவர்களுடைய சோதி யவ்வாறன்று எனைத்துணையாந் தன்மை யவாய்ப் பெருகினவிடத்துங் குன்ருது இருந்தபடியே இருக்கும் என்பதுபற்றிக் "கிடந்தொளிபரப்பி" என்ருர். கிபுலாஎன்பது அடங்காப் பெரும்புகழ்க் குரியதாதலால் கிளர்எனும் அடைகொடுத்துக் கூறினர். அரிய பொருளாகிய கடவுளை உன்னி வேண்டுவன வேண்டுங்காலத்துத் தலையைக், கரத்தைப், பார்வையை ஆகாயத்தளவில் உயர்த்துதல் பற்றி "இடங்கொளந்தரம்" என்ருர். இறைவன் பெருமைஒருவாறு மடங்காதெனும் பொருட்டாய்ப் புலாதிகளால் நுகரப்படும் வஸ்துக் களில் நுகரற்கு அரிதாக விளங்கும் ஆகாயமே, ஆதல்பற்றி இத்தன் மைத்தாய்க் கட்புல விடயங்களி லடங்காத் தூய்மைத்துவமுடை யான் என்னுங் கருத்தினராய்ச் சிரசினை ஆகாயத்தளவில் உயர்த்தினர் நபிபெருமானுரெனக் கொள்க. ஈண்டுச் சிரசென்பது முகத்தைக் குறித்து நின்றது. ஆகவே முகத்தை ஆகாயத்தளவி லுயர்த்தினு ரெனக் கொள்க. இக்கருத்தே இங்ஙன மடங்காது பெருகுமேனுங் கொள்க. அல்லாஜல்லஷானஹுத்தஆலா இத்தன்மைத்தனவாம் பொருளென்பதுதோன்றக் கலிமா விரலினை யுயர்த்திக் காண்பித்தார். அது இணையற்றவனென்னும் பொருடரூஉம் 'லாஷரீகலஹு' என்னு மோரரிய வசனத்தைக் குறித்துநின்றது. அதனல் பயக்குங் கருத்து களை வேதாகமநூல்களாலறிக.

இயற்கையினின்று அதிகப்படுத்துஞ் செயலை யுடைத்தாயிருந் தனர் என்பதை "உயர்த்தி" என்ருர். ஒளி என்பதை இடதுகரத் தோடுங்கூட்டுக. வலதுகை என்றமையால் காலைவலதென்ரும். எட்டு அவயவங்களும் படத்தக்கவிதமாய்ப் பட்டிருப்ப சுஜூதுசெய்தார் என்பதுதோன்ற "எழில்பெற" என்ருர். உம்மைகள் விகாரவகை யாற் றெக்கன. கிபுலாவைநோக்கியும், அந்தரத்தளவில் சிரசினை யுயர்த்தியும், இணைத்தாண்மடித்தும், குறியிடக்கையால் சேர்த்தும், வலக்கை கான்மேல்வைத்தும், எழில்பெறச் சுஜூதுசெய்தும் பிறந்தா

றென்றவதனுன் முறையே அவ்வவ் வுறுப்புகள் தோன்றும்போழ்து அவ்வக்குணங்கொண் டிருந்தன வென்றும் முழுத்தோற்றத்திற்குங் காரணமாய காலத்திலே சுஜூது செய்தாரெனவுங் கொள்க. செய்யுளாகலின் முறைப்பாடின்றிப் பிறழ்ந்துநின்றன. நிமித்தகாரணப் பொருளாகிய வஸ்துவென்பது ஈண்டு ஆனுடம்பை. அது மிக்க சிறப்புக்குறித்து நின்ற ஓரரிய வஸ்துவாகலின் "குறி" என்றார். அது ஆகுபெயரென்க. அறுசையளாவிசிற்குந் தகுதிக்குரிய சிரசாகலின் நேர் எனும் அடைகொடுத்துக் கூறினர். மான்மத மென்றமையான் திருமேனி வருவித் துரைக்கப்பட்டது. ஈண்டு வானமட்டிலகிய ஒளிவும் பிரானவர்களின் திருமேனியால் உமிழப்பட்டதெனக்கொள்க.

இக்கருத்தறியாத முதலுரையார், அந்தரநேர் சிரசினை யுயர்த்தி என்புழி ஆகாயத்திற்கு நேரே சிரசினை யுயரப்பண்ணி எனப் பொருள்கூறுவர். ஆகாயத்திற்கு மாறலாக உயரப் பண்ணலென்பது ஒன்றின்மையால் உயர்த்தி என்பதனுனே ஆகாயத்திற்கு நேரே எனும் பொருள் தோன்று மாகலின் அவரினது உரை போலியென மறுக்க.

(88) சிரசினி னெய்தோய்த் திருவிழிக் கருமை
சிறந்திடக் கொப்பூழுங் கொயலாய்
மருவுசுன் னத்துஞ் செய்யலாய்த் துடக்கின்
வருங்குறி யொன்றுமி லாதாய்ப்
பரவுகஸ்தூரி மனையெலா நிறைந்த
பரிமளங் கமகம கமென
பெருகிய வொளிவு வானமட் டுலவப்
பிறந்தனர் முகம்மது நபியே.

(ப - ரை.) சிரசு - தகுதிபூண்ட சென்னியானது, நெய் - நறுநெய்யினுல், தோய்த்து - நனைக்கப்பட்டும், இருவிழி - உபயநோக்கங்கள், கருமை - சுறுமாவால், சிறந்திட - சிறக்கப்பட்டும், கொப்பூழும்- நாபியானது, கொயலாய் - அறுக்கப்பட்டும், மருவு - பொருந்துமாறு, சுன்னத்தும்-விருத்த சேதனமும், செய்யலாய்-செய்யப்பட்டும், வரும்-

பிள்ளைப்பேற்ருல் நிகழும், துடக்கின் - துடக்குகளின், குறி - அடையாளங்கள், ஒன்றும் இலாதாய் - ஏதும் இல்லாமையாயும், பரிமளம்-மிகுமணத்தின், நிறைந்த - பூரணப்பட்டுள்ள, கஸ்தூரி - திருமேனியாலுமிழுண்ட மான்மதமானது, மனை எலாம் - மக்காபுரத்துள்ள எல்லா மனைகளிலும், பரவு-பரவுதலாய், கமகமகமென- இன்னபடியென மதித்தற்கரிதாய்ப் பரிமளிக்கவும், பெருகிய - இவ்வளவெனப்படாது பெருகுதலாகிய, ஒளி - பிரகாசமானது, வானமட்டு- வானலோகம்வரையும், உலவ - பிரகாசியாநிற்கவும். முகம்மதுநபி - முஹம்மதுஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்கள், பிறந்தனர் - உதயமாயினூர்கள், எ-று.

(போ-ரை.) தகுதிபூண்ட சென்னியானது நறுநெய்யினுல் நனைக்கப்பட்டும், உபயநோக்கங்கள் சுறுமாவால் சிறக்கப்பட்டும், நாபியான தறுக்கப்பட்டும், பொருந்துமாறு விருத்தசேதனமுஞ் செய்யப்பட்டும், பிள்ளைப்பேற்ருல் நிகழுந் துடக்குகளி னடையாளங்கள் ஏதுமில்லாமையாயும், மிகுமணத்தின் பூரணப்பட்டுள்ள திருமேனியால் உமிழுண்ட மான்மதமானது மக்காபுரத்துள்ள எல்லா மனைகளிலும் பரவுதலாய் இன்னபடியென மதித்தற்கரிதாய்ப் பரிமளிக்கவும், இவ்வளவெனப்படாது பெருகுதலாகிய பிரகாசமானது வானலோகம்வரையும் பிரகாசியாநிற்கவும் முகம்மது ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்கள் உதயமாயினூர்கள் என்பதாம்.

சிரசினில் என்புழி இன், இல் இசைநிரப்பிநின்ற சாரியைகள். இருவிழி கருமை என்றமையான் அதற்கேற்ற சுறுமா பெறப்பட்டது. கருமை என்பதை ஆகுபெயராய்ச் சுறுமா எனக் கொள்ளினுமாம். மருவுஎன்பதை ஈண்டுக் கொப்பூழோடுங் கூட்டுக. செய்யத்தக்கவாறு செய்திருந்த தென்பான்கருதி மருவென்ற அடை கொடுத் தோதினர். கொப்பூழுங் கொயலாய், சுன்னத்துஞ் செயலாய் என்றமையான் அக் குறிகள் பிற்றைச்செய்தனவேயொழிய இயற்கையனவன்று. என்னே? எவ்விதபடைப்பாதிகளிலும் மரபுவழீஇ யவற்றின் அவயவங்களில் சில விரிந்தும் குறைந்தும் பிறழ்ந்தும் இருப்பச் சில தோன்றுதல் வெளியாகலின் அவ்வாறு நபிபெருமானாரவர்களிலும் மரபுவழீஇ கொப்பூழ் கொய்யப்பட் டுள்ளதுபோலவும் சுன்னத்து செய்யப்பட் டுள்ளதுபோலவும் இருக்கப் பிறந்தார்களோஎனும் ஐயம் சிலர்க்கு நிகழூஉமாதல்பற்றி அவ் வையந்தொலைப்பிப்பான் கொய்யலாய் செய் யலாய் என்று ராசிரியர். ஆகவே அக்கருமங்கள் மலக்குகளால் அங் ஙனமே செய்யப்பட்டன வென்று அறிக. இது நபிபெருமானா ரவர் கண்மேலே நிகழுஞ் சில சரித்திரங்களானுமறிக. வரும் என்றவத னல் பிள்ளைப்பேற்றுலென்பது பெறப்பட்டது. நறுநாற்றங்களில் மான்மதம் மிக்க சிறந்ததென்பான் அதைப் பரிமளமென்றும் அம் மான்மதத்தினும் நபிபெருமானாரவர்களின் திருமேனியாற் கக்குண்ட மான்மதமோ இனைத்தென வறிதற் கியலாவென்பான் நிறைந்த மான் மதமென்றுங் கூறினர். தலமெனப்படு மெல்லாவற்றினும் கட்புல விடயத்தான் அளத்த லரிதாய் வானமே தோற்றுதல்பற்றி எவ்விடத் தினும் நபிபெருமானாரவர்களின் ஒளி நிறைந்ததென்பான் வானமட் டுலவ வென்றுரல்லது வானமட்டுந் தான் பரவின தென்னும் அலகு டைத் தன்றெனக்கொள்க.

இனி, கொப்புள் என்பது கொப்பூழ் எனும் பொருள் சிறவாமை யால் கரலிகிதங்களாலாய வழுவென்றடங்காது முன்பாட மென மறுத்துக் 'கொப்புழ்' எனத் திருத்திப் போந்தார் முதலுரையார். இவ்விருகூற்றினும் கொப்புள் என்பதற்குக் குமிழிஎன்னும் பொருள் பயந்து குமிழிபோறலால் நாபி யைக் கொப்புள் என்று ராசிரியரெனினு மொருவாறமை யும். மற்றைய கொப்புழ் என்பது என்னபொருளோ? எப் பாடையின் மொழியோ? யாமறியேம்.

இதுவேயுமன்றி அண்டரிலொருவர் என்ற செய்யுளினும் செவ்வி வீற்றிருந்த முகமதி இலங்க என்ற செய்யுளினும் முறையே "வந்தெடுத்துக்கொண்டவர்" என்றும் "நறுமனைபுகஇறை உறைத்தான்" என்றும் வரைந்து அவற்றின் உரையிலே வந்து அடுத்து என்றும் இறை உரைத்தானென்றும் முரணாகக் கூறினமையா லிவைகளில் தமக்கு முடன்பாடு இஃதெனப் படாதாயினர் என யாமுங் கூறுவாம். அது கரலிகிதங்களாலாய வழுவேயன்றித் தவறன் றென்பார்க்குக் கொப்புள் என்பதுவு மெழுத்துவழுவெனலாம். அங்ஙனங் கூருது தாம்பிடித்ததையே சாதிப்பேமெனுங் கருத்தினராய் அது முன்பாடமென மதத்துக்கூறிப் போந்தமையான் நுங் கூற்றுப் பொருந்தாதென மறுக்க.

பிறவருவெனவெல்லா மமைத்துக்கொள்க.

(89) செம்மையங் கோட்டுக் கடகரிக் கலகந்
தீர்ந்தபி னைம்பதா நாளி
லம்மதி மாசத் தொகையினில் றபீயு
லவ்வலிற் பனிரண்டாந் தேதி
யெம்மனைக் கும்பே றெனவரும் பொருளா
யிசைத்திடுந் திங்களி ராவின்
மும்மையென் றுரைக்கும் புவனமும் புரக்க
முகம்மது நபிபிறந் தனரோ.

(ப - ரை.) செம்மை - சிவந்த, கோட்டு - கொம்பினையும், கடம் - மதத்தினையுமுடைய, கரி - யானைகளாலுறும், கலகம் - தியக்கமானது, தீர்ந்தபின் - ஒழிந்தபின்னர், ஐம்பதாம்நாளில் - ஐம்பதாந் தினத்தில், அம் - அழகிய, மதி - சந்திரனது, மாசத்தொகையினில்-பன்னிரண்டுமாதங்களில், றபீயுலவ்வல் - றபீயுலவ்வலென்கிற மாதத்தின், பனிரண்டாந்தேதி - ஆண்டுப் பன்னிரண்டா நாளாகிய, இசைத்திடும் - புகழும்படியான, திங்

கள்இராவில் - திங்கட்கிழமையிரவிலே, எம் மனைக்கும் - எல்லாரதுவீட்டிற்கும், பேறுஎன வரும் - வரப்பிரதாபமென்றுவரும், பொருளாய் - வஸ்துவாகியும், மும்மைஎன்று - மூன்றுயிருக்குந்தன்மையினவென்று, உரைக்கும்-சொல்லப்படும், புவனமும் - உலகங்களையெல்லாம், புரக்க - இரட்சிப்பதற்காகவும், முகம்மதுநபி-முஹம்மதுஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்கள், பிறந்தனர் - உதயமாயினார்கள், எ-று.

(போ-ரை.) சிவந்த கொம்பினையும் மதத்தினையு முடைய யானைகளாலுறும் தியக்கமானது ஒழிந்தபின்னர் ஐம்பதாந்தினத்தில் அழகிய சந்திரனது பன்னிரண்டு மாதங்களில் றபியுலவ்வல் மாதத்தின் ஆண்டுப் பன்னிரண்டாம்நாளாகிய புகழும்படியான திங்கட்கிழமை இரவிலே எல்லாரது வீட்டிற்கும் வரப்பிரதாபமென்றுவரும் வஸ்துவாகியும் மூன்றுயிருக்குந் தன்மையினவென்று சொல்லப்படும் உலகங்களையெல்லாம் இரட்சிப்பதற்காகவும் முகம்மதுஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்கள் உதயமாயினார்கள் என்பதாம்.

சத்துருக்களின் வினம் ஒழியாது தோய்ந்த கோடென்பான் செம்மையங் கோட்டென்றார். அம் கட்டுரைச் சுவைப்படகின்றது. கலகந்தீர்ந்தபின் ஐம்பதாநாளென்றமையான் கலககாண்முதல் பிறந்தநாட் கடையாய் ஐம்பத்தொருநாள் என்பதே யாசிரியர் கருத்தென்க.

"ஸன்ஆன் நகரத்து அரசன் ஆப்றஹாம் என்பவனால் தமது சாதியாரும் மதத்தாரும் தொழும்பொருட் டியற்றிய ஓரிய பீடத்தின்கண் மக்காபுரத்தாரொருவர் மலத்துக்கிருந்து பகரவீகாரத்தைச்

சுவட்டினமையான் அவ்வரசன் இத்தன்மைத்தனவாம் கருமம் எமது விரோதிகளாகிய மக்கிகளாலன்றி நடவாவெனப் பயின்று அவர்க ளால் வணங்கப்படும் மக்காபுரத்துக் கஃபா வென்கிற பீடத்தை யிடிப்பேமென மதந்துபேசிப் பலாத்காரமுள்ள வீரர்களோடு யானைக் கூட்டங்களைத் திரட்டி அவைகட்கு மஹ்மூது எனும் ஓர் யானையைத் தலைமைபடுத்தி ஆங்குற்றபோழ்து நடந்தனவெல்லா நடந்தன" அதையே இங்ஙனம் கடகரிக்கலகம் என்றார். இங்ஙனம் விரித்துக் கூறிலம், வேண்டுவோர் வேதாகம நூல்களா லறிக.

பிறவாற்றா லாகு மாதங்களு முளவாதல்பற்றி "மதிமாதம்" என்றும் எவற்றானுகு மாதங்களினும் மதிமாதமே சிறப்புடைத்தென் பான் "அம்மதிமாதம்" என்றும் கூறினார். அது இன்ன ஏதுவால் என வெடுத்துக் காட்டல் இங்ஙன முறையாகாமைபற்றி நிறுத்தி னேம்.

எம்மனைக்கும் என்றமையான் மனைகளடங்கிய உலகத்திற் கென் பதே கருத்து. தினங்களில் நபிபெருமானார் உதயமாதற் கேதுவாய வத்திங்கட்கிழமையே எல்லாத் தினங்களினுஞ் சிறந்ததென்பான் இசைத்திடுந் திங்கள் என்றார். ஆகவே பிறவருந் திங்கட் கிழமையெல் லாம் அத்தன்மைத்தனவாஞ் சிறப்பின தன்றெனக் கொள்க. எம்ம னைக்கும் பேறென வரும்பொருளாய் முகம்மது எனக் கூட்டுக.

இனி, அதை இசைத்திடுந் திங்கள் என்பதனோடுகூட்டி "எந்த மனைக்கு மிலாபம்போல அடுத்தடுத்து வராநிற்கும் வஸ் துவாய்ப் பொருந்துந் திங்கடகிழமை" எனப் பொருள் வரைந்து, "நபிபெருமானார் பிறந்த திங்கட்கிழமையிராவா னது, எந்தமனைக்கு மோரிலாபப் பொருளாய்ப் பாராட் டும்படி வருவதாகலின், ஆசிரிய ரங்ஙனங் கூறினார்" என விசேடவுரையுங் கூறி இடர்ப்பட்டுப் போந்தார் முதலுரை யார். நபிபெருமானார் பிறந்த திங்கட்கிழமையைப் பெறு தல் சூனியமென்ப திவர் பேரறிவிற்குப் புலப்பாடின்றி மறைந்தாற்போலும்.

இதுவேயுமன்றி எம்மனைக்கும் என்புழி வரும் முற்றும்மையை எச்சப்பொருளாய்க் கொண்டு அது "முஸ்லீங்களது மனை யைமாத்திரங் குறித்து நின்றது" எனவும் பதருரைவரைந்

தும் போந்தார்; என்னை? முஸ்லீங்களெனப்படும் ஒரு சாதி யின்மையானும் முஸ்லீம்எனும் பொருட்குரியராய் இயற்றும்பொருட்டுக் காபிரீன்கட்பேரிலேயே பிரானவர்களை யனுப்பப்பட் டிருக்கின்றமையானும் அப் பொதுமை யான் பிரானவர்கள் எல்லாரது வீட்டிற்கும் பிரதான பொருளேயாய் முஸ்லீங்க ளாக்குவிக்கும் மகத்துவ முடையானென்பது தோன்ற எம்மனைக்கும் என முற்றும்மை கொடுத்துக் கூறினு ராகலின் என்க.

"முற்றிய வும்மைத் தொகைச்சொன் மருங்கின்
எச்சக் கிளவி யுரித்து மாகும்"

என்ற சூத்திரத்தின் ஆற்றலினுனே முற்றும்மையை எச்ச வும்மையாய்க்கொண்டார். அவ் வும்மையை முற்றும்மையா யாக்குமிடத்து உறுமிழுக்குப் பெரிதெனக் கருதி உரித்துமாகுமென்ற உம்மையான் நிகழும் பொருளினையு முட்கொள்ளாது போந்தார்போலும். இவர திழுக்கை அங்ஙனமே கூறுமிடத்து மிகப் பல்குதலான் எமக் குறுஞ் சாவகாசமின்மையைக் கருதி சிற்சில கூறி அறிவுளார்க்குப் போதுமெனுந் துணிபான் நிறுத்துவாம்.

(90) பூதலத் தரசு பதியென வுதித்த
புகழ்பெறு மக்கமா நகரிற்
சீதவொண் கதிர்சேர் கஃபத்துல் லாவின்
றிசையினில் வடகிழக் காக
வேதமொன் றணுகாச் செமுறத்து லுஸ்தா
வெனுமொரு தலத்தினி னடுவே
மாதவ ரபித்தா லிபுதிரு மனையின்
முகம்மது நபிபிறந் தனரோ.

(ப - ரை.) பூதலத்து - பூலோகத்திற்கு, அரசுபதி என - தலைநகரமெனும், மக்கம் - மக்காவென்கிற, மா - மாட்சிமைதங்கிய, நகரில் - பட்டணத்தில், சீதம் - குளிர்ச்சிபொருந்திய, ஒண் - அழகிய, கதிர்

சேர் - கிரணங்க ளடைகிடக்கும், கருபத்துல் லாவின் - அல்லாவுடைய வீடென்கிற சந்நிதி யின், திசையினில் - திக்குகளில், வடகிழக்காக - வடக்கின் கீழ்ப்புறமாக இருக்கும், ஏதம்ஒன் றும்அணுகா - குற்றமெனப்பட்ட வொன்றும் நெருங்காத, ஒரு-ஒப்பற்ற, செமுறத்துலுஸ்தா எனும்-ஜமுறத்துல் உஸ்தாவென்று சொல்லப்பட் ட, தலத்தினில்நடுவே - மா சிறப்புற்றவிடத்தி னுப்பணில் விளங்கும், மாதவர் - பெரியதவத் தினையுடைய, அபித்தாலிபு - அபித்தாலிபு என் பவர்களினது, திரு - தெய்வீகத்துவ, மனையில்- வீட்டின்கண், முகம்மதுநபி - மூஹம்மதுஸல்லல் லாஹு அலைஹிவஸல்ல மவர்கள், பிறந்தனர் - உதயமாயினுர்கள், எ-று.

(பொ-ரை.) பூலோகத்திற்குத்தலைநகரமெனும் மக்காவென் கிற மாட்சிமைதங்கிய பட்டணத்தில் குளிர்ச் சி பொருந்திய அழகிய கிரணங்க ளடை கிடக்கும் அல்லாவுடைய வீடென்கிற சந்நிதி யின் திக்குகளில் வடக்கின் கீழ்ப்புறமாகவிருக் கும் குற்றமெனப்பட்ட வொன்றும் நெருங்கா த ஒப்பற்ற ஜமுறத்து லுஸ்தா வென்று சொல் லப்பட்ட மா சிறப்புற்றவிடத்தின் நாப்பணில் விளங்கும் பெரிய தவத்தினையுடைய அபித்தா லிபு என்பவர்களினது தெய்வீகத்துவ வீட் டின்கண் மூஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம் அவர்க ளுதயமாயினுர்கள் என்பதாம்.

இவ்வுலகத்தைப் படைத்தற்குப் பன்ணுண்முன் ஜலரூபமாய்க் கிடந்தகாலத்தே வெள்ளிய தோற்றமாய் மலக்குகளாற் பிரதக்க ணஞ் செய்வான் விளங்கி உலகம் படைத்தபிற்றையும் அத்தோற்றம்

ஆங்கே விளங்கப் பிரதக்கணமருது நின்று மனுமூல பிதாவாகிய **ஆதம் அலை ஹிஸ்ஸலாம**வர்கள் இவ்வுலகத்தின்கண் தோற்றஞ்செய்த பிற்றை அவ்வரிய தோற்றம் நிகழுமிடத் தோர் பீடமியற்றித் தாமும் பிரதக்கணஞ் செய்வான் ருெடங்கி நின்றமையான் நம்மனோர்க்கெல்லாம் அஃதின்றியமையாக் கருமமாய் முடிந்து நிகழ்ந்து வருங் காரணம்பற்றி, **மக்க**மே நகரங்கட்கெல்லா முதன்மை என்பது தோன்ற, "பூதலத்தரசுபதியெனவுதித்த புகழ்பெறுமக்கமாநகர்" என்றுர். உதித்த என்பது ஈண்டுப் புகழின் மறைவின்மையை யுணர்த்திநின்றது. **மலக்கு**களால் பிரதக்கணஞ்செய்து விளங்கிய ஒளிவடிவு நம்போலியர் கட்புல விடயத்திற் ருேன்றிலதாயினும் அது **அக்கதுபத்துல்லா**விலேயே யாண்டும் நிலைத்திருக்கும் உண்மைபற்றிச் "சீதவொண் கதிர் சேர்க்குபக்துல்லா" என்றுர். சேர் வினைத்தொகை. **நபி**பெருமானு ருதயஞ்செய்யு மிடமாகலின் **ஐமுறத்துலுஸ்தா**வை யங்ஙனஞ் சிறப்பித்துக் கூறினு ராசிரியரெனக் கொள்க. ஒன்றும் என்றமையான் அத்தலத்தின் சிறப்பு இனைத்தென வடங்கா வென்பது கருத்தாயிற்று. அதுபற்றியே அதை "ஒருதலம்" என்றுர். வேதநூல்களால் மறுக்கப்பட்டாரில் **அபித்தாலிபு** அவர்களும் ஒருவராகலின் அவரை மாதவர் **அபித்தாலிபு** எனற் பொருந்தா தாசிரியர்க் கெனின் அற்றன்று ; பிரானவர்களின் உதயம் **அபித்தாலி**பின் மனையில் என்பதோர் தவப்பேற்றுக் குடைத்தாயினமைபற்றி அங்ஙனங் கூறினுர். அதனுனே **அபித்தாலிபு** அவர்கட்கு ஒருவாறு நற்பயன் பயக்குமென்பதுங் கருத்தாயிற்று.

இனி **அபித்தாலி**பின் வீட்டிற் பிறந்தார் என முடிப்பின் **மக்க**மும் **கதுபா**வின் வடகிழக்கும் **ஐமுறத்துலுஸ்தாவு** மொருங்கேமுடிந்து பொருட்பயக்குமாகலின் எடுத்துக்கூறல் வேண்டிற்றிலை ஆசிரியர்க்கெனின், அங்ஙனமன்று; உலகத்தில் **மக்கம்** சிறந்ததென்பதூஉம் அதிலிருக்கப்பட்டன வெல்லாவற்றினுங் **கதுபா** மிகச் சிறந்ததென்பதூஉம் (அதன் திசைகளில் **மதீன** மிருக்குந் திசை மிகச்சிறந்ததென்பது வெளி) அதுபற்றி **ஐமுறத்துலுஸ்தா**வும் **அபித்தாலி**பின் மனையும் அத்தனைத் தகையினவென்பதூஉந் தோன்ற எடுத்துக் கூறினுரெனக் கொள்க. நடுவே என்பத னேகாரம் அவதாரமாயவிடத்தின் சிறப்பு குறித்துநின்றது. ஏகார மீற்றசை.

(91) நெறிநிலை திரியா மருண்மத மிகுந்து
நெடுநில மெங்கணும் பரந்து
துறவறந் தவறி யில்லற மடிந்து
சுடரிலா மனையது போலக்
குறைபடுங் கால மிருளெனுங் குபிரின்
குலமறுத் தறநெறி விளக்க
மறுவிலா தெழுந்த முழுமதி போல
முகம்மது நபிபிறந் தனரோ.

(ப - ரை.) நெறி - சன்மார்க்கத்தின், நிலை - முறைமைகள், திரியா - நடைபெறாது, மருள் - மௌட்டிய மயக்கத்தின், மதம் - வெறியானது, மிகுந்து - அதிகரித்து, எங்கணும் - எல்லாவிடத்தினும், பரந்து - விரிந்து, துறவறம் - மெய்ஞ்ஞானவழிகளை, தவறி - பிழைத்தும், இல்லறம் - உலகப் பேற்றிலேயே, மடிந்து-அழிவுற்றும், சுடரிலா-வெளிச்சமில்லாது பாழாகிய, மனையதுபோல - மாளிகையையொப்ப, நெடு - பெரிய, நிலம் - பூமியானது, குறைபடும் - பழிப்புற்றிருக்கும், காலம் - காலத்திலே, இருள் எனும் - இருள் போலும், குபிரின் - அம் மௌட்டிய வெறி கொண்ட குபிரர்களின், குலம் - கூட்டத்தை, அறுத்து - அறச்செய்து, அறம்-தருமநூலையும், நெறி - மெய்ஞ்ஞானவழிகளையும், விளக்க-காட்டுவிப்பான்வேண்டி, மறுவிலாது - களங்கமில்லாது, எழுந்த - உதயமாகிய, முழு - பூரணப்பட்ட, மதிபோல - சந்திரனைப்போல, முகம்மதுநபி - முகம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்கள், பிறந்தனர் - உதயமாயினார்கள், எ-று.

(போ-ரை.) சன்மார்க்கத்தின் முறைமைகள் நடைபெறுது மௌட்டிய மயக்கத்தின் வெறியானது அதிகரித்து எல்லாவிடத்தினும் விரிந்து மெய்ஞ் ஞானவழிகளைப் பிழைத்தும் உலகப் பேற்றிலேயே அழிவுற்றும் வெளிச்சமில்லாது பாழாகிய மாளிகையையொப்பப் பெரியபூமியானது பழிப்புற் றிருக்குங் காலத்திலேயே இருள்போலும் மௌட்டிய வெறிகொண்ட குபிரர்களின் கூட்டத்தை அறச்செய்து தருமநூலையும் மெய்ஞ்ஞானவழிகளையுங் காட்டுவிப்பான் வேண்டிக் களங்கமில்லாது உதயமாகிய பூரணப்பட்ட சந்திரனைப்போல **முகம்மது** ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் ஆண்டவ ரவர்கள் உதயமாயினர்கள், என்பதாம்.

**இபுறாஹிம் அலைஹிஸ்ஸலா** மவர்களின் மார்க்கமே அந்நான் முறையாயினும் அது நடைபெறுமைபற்றி "நெறிநிலைதிரியா" என்றும், அந்நெறிநிலையிற் றவறி மௌட்டியவெறியே யதிகரித்து அதனுனே மூழ்கினர் என்பது தோன்ற முறையே "துறவறந் தவறி" என்றும், "இல்லறமடிந்து" என்றுங் கூறினர். ஆகவே உலகம் மௌட்டியமே பல்கிமெய்ஞ்ஞான மிழவுற்றிருந்தமையான் சுடரிழந்தமனை அதற் குவமமாயிற்று. திரியா, சுடரிலா என்புழித் து விகுதி கெட்டு நின்றது. இல்லற மடிந்து என்றவதனுன் மடியாது வாழ்ந்திருத்தல் பொருந்துமெனக் கொள்க. அளத்தலாகாப் பெருமைபற்றிப் பூமியை நெடுநிலமென்றார். எங்கணும் என்றமையான் பூலோக முழுவதும் என்பது கருத்து. மனையது என்புழி அது என்பது பகுதிப்பொருள் விகுதி. குறை முதனிலைத் தொழிற்பெயர். ஒற்றனை ஒற்று என்றாற் போலக் குபிரனைக் **குபிர்** என்றது. **குபிரர்** மனக்கண்ணோடா ஊனக் கண்ணினரோ யாகலின் அம்மனவிருளைப்பற்றி ஊனக்கண்ணோடுற்ற விருளை யவரோ டுவமானித்தார். **குபி**ரென்பது ஈண்டு ஊனக்கண்ணை பற்றி அஃதாற்றலான் வேதம் வழீஇயுற்றார்மே னின்றது. அறம், நெறி என்பன வாகுபெயர்கள். மனவிருளை மாற்றலான் பிரானவர்களை

"மருவிலாதெழுந்த முழுமதிபோல" என்றார். சுடரிலாமனே என்ற மையான் றம்பொருட்கேற்ற பாழ் என்றசொல் பெறப்பட்டது.

இனி, நெறிநிலேதிரியா என்பதை நெறிநிலை திரிந்து எனத் தமது சிற்றறிவிற்கேற்பக்கொண்டு "சன்மார்க்கநிலைமை மாறுபட்டு" எனப் பொருள் வரைந்து போந்தார் முதலுரையார். சன்மார்க்கம் யாண்டுங் கெடா, அங்ஙனம் நடவாரே யன்றி. ஆகலின் அது உரையாகாவென மறுக்க.

இச்செய்யுட் ககன்ற பொருளிருப்பினும் ஒருவாறு முடித்தாம்; அறிவுளார் உய்த்துணர்க. உம்மைகள் விகாரவகையாற் றொக்கன. ஏகாரம் ஈற்றசை. பிறவருவனவெல்லாங் கொள்க.

(92) பானுவின் கதிரா லிடருறுங் காலம்
படர்தரு தருநிழ லெனலா
யீனமுங் கொலையும் விளைத்திடும் பவநோ
யிடர்தவிர்த் திடுமரு மருந்தாய்த்
தீனெனும் பயிர்க்கோர் செழுமழை யெனலாய்க்
குறைஷியின் றிலதமே யெனலாய்
மானிலந் தனக்கோர் மணிவிளக் கெனலாய்
முகம்மது நபிபிறந் தனரோ.

(ப-ரை.) பானுவின் - சூரியனது, கதிரால் - வெப்பத்தினானே, இடருறும் - சீவசாதிகள் துன்புறுநிற்கும், காலம் - காலத்திலே, படர்தரும் - திடீரென முளைத்துப் படராநிற்கும், தரு - மரத்தினது, நிழலாய் - நிழல்போலாகியும், ஈனமும் - இழியதொழிலும், கொலையும் - கொலைத்தொழிலும், விளைத்து இடும் - உண்டு படுத்தும்படியான, பவம் நோய் - பாதகமாகிய பிணியினது, இடர் - ஆபத்தை, தவிர்த்திடும் - விலக்குமென்னத்தக்க, அரும் - அரிதாகிய, மருந்தாய் - அமிர்தமாகியும், குறைஷியின் - குறைஷி வம்மிசத்தார்களின், திலதம் எனலாய் - நெற்றிகளுக்

கெல்லாம் ஒருதிலதம்போலாகியும், தீன் எனும்- தீன் என்று சொல்லுஞ் சன்மார்க்கமாகிய, பயிர்க்கு - புல்லுக்கு, ஓர் - ஒப்பற்ற, செழும் மழை எனலாய் - செழிய மழைபோலாகியும், மா - பெரிய, நிலம் தனக்கு - பூமிக்கு, ஓர்மணி - தெரிந்த நன்மைபயக்கும், விளக்கு எனலாய் - தீபம்போலாகியும், முகம்மதுநபி - முகம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்கள், பிறந்தனர் - உதயமாயினர்கள், எ-று.

(போ-ள.) சூரியனது வெப்பத்தினாலே சீவசாதிகள் துன்புறுநிற்கும் காலத்திலே திடீரென முளைத்துப் படராநிற்கும் மரத்தினது நிழல்போலாகியும் இழிய தொழிலும் கொலைத் தொழிலும் உண்டுபடுத்தும்படியான பாதகமாகிய பிணியினது ஆபத்தை விலக்குமென்னத்தக்க அரிதாகிய அமிர்தமாகியும் குறைஷி வம்மிஷத்தார்களின் நெற்றிகளுக்கெல்லாம் ஒரு தில்தம்போலாகியும் தீன் என்றுசொல்லும் சன்மார்க்கமாகிய புல்லுக்கு ஒப்பற்ற செழிய மழைபோலாகியும் பெரிய பூமிக்குத் தெரிந்த நன்மைபயக்கும் தீபம்போலாகியும் முகம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவர்கள் உதயமானார்கள் என்பதாம்.

வெப்பத்தின லிடர்ப்படுதல் பிராணிகளாகலின் வருவித் துரைக்கப்பட்டன. ஈண்டு அவைநிலவாழ் பிராணிகளெனக்கொள்க. வெப்பந் தணிதற் கேதுவாய தரு படர்தற்கு நெடுங்காலங் வேண்டும். அங்ஙனமேல் பிராணிகள் வெப்பந்தாழாது மடியுமாகலின் திடீரென முளைத்துப் படர்தரும் மரமென்பது தோன்றத் "துன்புறுங்காலம்" என்றார். ஈனம் என்பது ஈண்டுப் பாவ வினைகண்மே னின்றது. பாவ வினைக

ளெல்லாவற்றினும் கொலை மிகக்கொடிதென்பான் கொலையை விதந்து கூறினர்.

துறைஷியின் திலதமே என்றவதனுன் மாக்களில் அக்குலத்தாரே உயர்வுடையாரெனக் கொள்க. தீன் என்பது ஈண்டு எல்லா நபிமார்களது தீனையுங் குறித்துநின்றது. திலதம் என்றமையான் அதற்குரிய நெற்றி பெறப்பட்டது. ஈனமும் கொலையும் என்பன எழுவாய்த்தொடர். உம்மைகள் விகாரவகையாற் றொக்கன. ஏகாரம் இசைநிறை. ஆல் அசைநிலை. ஈற்றேகாரம் ஈற்றசை.

இனி, ஈனமும் கொலையும் விளைத்திடும் பவநோய் தவிர்த்திடும் அருமருந்து என்புழி "இழிவையும் கொலைத்தொழிலையும் விளைக்காநின்ற பாவமென்னும் நோயினது இடரைத் தவிரச் செய்யும் அரிய மருந்து" எனவும், மணிவிளக்கென்புழி "மாணிக்க விளக்கு" எனவும் பொருள்கூறுவர் முதலுரையார். ஈனத்தொழிலே பாவத்தை விளைக்குமன்றிப் பாவம் ஈனத்தொழிலை விளைப்பதன்று. அது ஈனத்தொழிலை விளைக்குமேல் அதனிடர் அத்தொழிலின் பயனு யடங்கும். அங்ஙனமே நபிபெருமானர் கொலை தவிர்ப்பவந்தாரென முடியும். நபிபெருமானர் பவநோயால்வரு மிடராகிய நரகம் உருது தவிர்ப்பிப்பான் வந்தமையான் அவருரை போலியாமென்க. நன்மைகளை விளைக்குங் காரணம்பற்றி மணிவிளக் கென்றமையால் அதை மாணிக்கவிளக்கு என்பதுவும் போலியுரை என்க.

பிறவருவனவும் பயின் றடங்குக.

(93) செங்கதிர் பரப்பி யுலகெலாம் விளக்கித்
திரிதின கரனும்வெண் ணமுதந்
தங்கிய கிரணச் சசியுமந் தரத்திற்
றவழ்தரு முடுக்குல மனைத்தும்
பொங்கொளி யெவையுஞ் சுவனநா டனைத்தும்
பூதலம் விசும்புமற் றனவு
மிங்கெழின் முகம்ம தொளிவினி லென்று
லிவர்க்கெவை யுவமைசொல் லுவதே.

(ப - ை.) செம் - சிவந்த, கதிர் - கிரணங்களை, பரப்பி - பரவச்செய்து, உலகு எலாம் - உலகமுழுவதை யும், விளக்கி - பிரகாசத்தால் தீட்டி, அந்தரத் தில் - ஆகாயத்தின்கண், திரி - உலாவாநிற்கும், தினகரன் - சூரியனும், வெண் - வெள்ளிய, அமுதந்தங்கிய - பெருமைபொருந்திய, கிர ணம் - கலைகளையுடைய, சசியும் - சந்திரனும், தவழ்தரு - நகரும்படியான, உடுக்குலம் அனைத் தும் - நட்சத்திரக் கூட்டங்கள் யாவற்றும், பொங்கு - பொலிவாகிய, ஒளி - பிரகாசங்கள், எவையும் - அனைத்தும், சுவனநாடு - சுவர்க்க லோகங்களும், விசும்பு - வானலோகங்களும், பூதலம் - பூலோகங்களும், அனைத்தும் - அவற் றில்வா முயிரடங்கலும், மற்றனவும் - பிறவாகு வனவும், எழில் - பெருமைபொருந்திய, முகம் மது - எங்கள் நாயகமாகிய **முகம்மது** ஸல்லல்லா ஹுஅலைஹிவஸல்லம் ஆண்டவரவர்களின், ஒளி வினிலென்றல் - பிரகாசத்தினலே பெறப்பட் டனவென்று சொல்லுகையால், இங்கு - இவ் விடத்தில், இவர்க்கு - இந்நாயக ரவர்கட்கு, உவமை - உவமமாக, சொல்லுவது-யாம் சொல் லப்புகுவது, எவை - யாவுள, (ஒன்றுமில்லை) எ - று.

(போ-ை.) சிவந்த கிரணங்களைப் பரவச்செய்து உலக முழுவதையும் பிரகாசத்தால் தீட்டி ஆகாயத் தின்கண் உலாவாநிற்குஞ் சூரியனும், வெள் ளிய பெருமைபொருந்திய கலைகளையுடைய சந் திரனும் நகரும்படியான நட்சத்திரக் கூட் டங்க ளியாவற்றும் பொலிவாகிய பிரகாசங்க

ளனைத்தும் சுவர்க்கலோகங்களும் வானலோகங்களும் பூலோகங்களும் அவற்றில் வாழுயிரடங்கலும் பிறவாகுவனவும் பெருமை பொருந்திய எங்க ணாயகமாகிய முகம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவ ரவர்களின் பிரகாசத்தினுலே பெறப்பட்டனவென்று சொல்லுகையால் இவ்விடத்தில் இந் நாயகரவர்கட்கு உவமமாக யாம் சொல்லப்புகுவது யாவுள? (ஒன்றுமில்லை) என்பதாம்.

அந்தரம் என்பதைச் சசியும் உடுக்குல மனைத்தும் என்பனவற்ளுேடுங் கூட்டுக. சூரியனைச் சந்திரனைப்போலாது உடுக்குலத்தின் நடை காட்சியாற்றலா லறிதற்கு முடியாமைபற்றித் "தவழ்தருமுடுக்குலம்" என்ருர். விண்மீன் ஒருபெயர்க்குப் பலவாய்ப் பலபெயருடைத்தாதல்பற்றி "உடுக்குலமனைத்தும்" என்ருர். திரி என்பதைச் சசியோடுங் கூட்டுக. சுவனாடு ஆணையாற்றலா லடங்குமாகலின் முதன்மைஎன்பதுவும், பூதலம் காட்சியாற்றலா னடங்குமாகலின் கடையதென்பதுவும், விசும்பு அவ்விருவாற்றலானு மடங்குமாகலின் இடையதென்பதுவும் நோக்கி முறைபடக்கூறினும். அவைகள் செய்யுளாகலின் பிறழ்ந்துநின்றன. அனைத்தும் என்பது ஈண்டுக் கூறப்பட்டனவேயுமன்றிப் பிறவருவனவெல்லாம் அமைந்துநின்றனவென்க. அங்ஙனமாகுமேல் மற்றனவும் எனல்வேண்டா தாசிரியர்க்கு எனின், சிருட்டிக ளனைத்தும் ஆணையாற்றலானும் காட்சியாற்றலானும் அறிவுறப்பட் டடங்கும் என்பது வெளியாயினும் இவ் விருவாற்றலாலன்றி உள்ளத்தி னெகிழ்வினுன் ஜனிக்கும் அனுதி வஸ்துக்களும் உளவென்பான்கருதி அங்ஙன முறுவனவு நிகராவெனும் வற்புறுத்தற்கு ஈண்டுக் கூறுகையான் வேண்டுமென்க. உம்மைகள் விகாரவகையாற் ருெக்கன.

இனி, வஸ்துக்களைச் சிருஷ்டித்தற்கு நபிபெருமானு ரவர்களின் ஒளியே முதற்காரணமெனச் சில அறிவிலிகள் கூறுப. அஃதொருவாற்ருனும் பொருந்தாதென்பது யாம் முன்னர்க்கூறியவாற்ருனறிக. எவை? என்னும் வினு எதிர்மறுத்துநின்றது. ஐகாரம் முன்னிலையசை. யாமென்பது அவாய்நிலை. ஏகார மீற்றசை. இச்செய்யுளிற்

கூறக் கிடந்தனவெல்லாம் வேதவாணையாற்றலென்பது வெளியாதல் பற்றி வேதத்தை எடுத்துக் கூறுது ஒளிவினி லென்றுலெனப் போந்தாராசிரியர். ஆகவே யாமும் சொல்லுகையாலென்று போந்தாம். உய்த்துணர்க.

(94) மகிதலம் புகழீ சாநபி பாரில்
வந்தநாட் டொடுத்திடை விடாது
பகுமத மிலேயென் ருறுநூ ருண்டு
பாரிசுக் காரர்கள் வணங்கும்
புகையுடன் கெழுமிப் பொறிபல தெறிப்பப்
புரிந்தெழு மக்கினிக் கொழுந்து
திகைதொறுந் தெரிய வெரிந்தசெந் நெருப்புத்
தேய்ந்துநூந் தழிந்தன வன்றே.

(ப - ை.) பாரிசுக்காரர்கள் - **மஜூசிக்காபிர்**கள், மகி-பூமியும், தலம் - வானமும், புகழ் - புகழாநிற்கும், ஈசாநபி - **ஈசாஅலே**ஹிஸ்ஸலா**ம**வர்கள், பாரில் - பூமியில், வந்தநாள் - **நபி**யாக வந்திருந்த நாட்களிலும், இடைவிடாது - கொஞ்சமேனும் விடாமல், தொடுத்து - பற்றுதலாகவே, பகு - பலதாய, மதம் - மார்க்கங்கள், இலேஎன - வேறு இல்லேயென்று துணிவாக, வணங்கும் - வணங்கிவரும், புகையுடன் - புகையோடு, கெழுமி - அமைந்து, பொறிபல - பலகங்கிகளும், தெறிப்ப - சிதறுநிற்ப, எழும் - எழும்பிய, அக்கினிக்கொழுந்து - தீச்சுவாலேகள், திகைதொறும்- எல்லாத்திசைகளிலும், தெரிய - தெரியும்படியாக, ஆறுநூறு ஆண்டு - அறுநூறு வருஷகாலங்களாக, எரிந்த - எரியாநின்ற, செம் - சிவந்த, நெருப்பு - நெருப்புக் குவியல்களெல்லாம், அன்று - பிரானவர்கள்பிறந்த வப்பொழு

தே, தேய்ந்து நூந்து - சுவாலைகள் அறவழிந்து, அழிந்தன - போயின, எ-று.

(போ-ரை.) மஜூசிக்காபிர்கள் பூமியும் வானமும் புகழா நிற்கும் ஈசாஅலைஹிஸ்ஸலாமவர்கள் பூமியில் நபியாக வந்திருந்த நாட்களிலும் கொஞ்சமேனும் விடாமல் பற்றுதலாகவே பல தாய மார்க்கங்கள் வேறு இல்லையென்று துணிவாக வணங்கிவரும் புகையோடமைந்து பலகங்கிகளும் சிதருநிற்ப வெழும்பிய தீச்சுவாலைகள் எல்லா திசைகளிலும் தெரியும்படியாக அறுநூறு வருஷகாலங்களாக எரியாநின்ற சிவந்த நெருப்புக் குவியல்களெல்லாம் பிரானவர்கள் பிறந்தவப்பொழுதே சுவாலைகள் அறவழிந்து போயின வென்பதாம்.

மகிதலம் என்புழிப் படிதலம் புகலும் என்றற் குரைத்தாங்குரைக்க. நபிபெருமானாரவர்கள் இத்தன்மைத்தவரொன்பதுதோன்ற ஈசாநபி பாரில்வந்தநாளும் என்புழி வேண்டிய உயர்வுசிறப் பும்மை விகாரவகையாற் றொக்கி நாள்என நின்றது. ஈசாநபி பாரில் வந்த நாள் என்றமையான் ஈண்டு அவர்கள் பிறந்ததன்றி நபிபட்ட மடைந்தபிற்றையும் அழிந்திலை என்னும் வியப்புணர்த்திப் போந்தா ராசிரியரொன் றறிக. மஜூசிக்காபிர்கள் ஓரிடத் திருந்தாரொனும் அலகுண்மை யின்மையான் அவர்க ளிருக்குமிடத்தெல்லாம் வணங்கும் பொருட்டு நெருப்புக் குவியல்கள் வேண்டுமென்பது வெளியாகலின் அவைகளெல்லாம் ஒருங்கே பாழாகினவென்பான்கருதி "அழிந்தன" என்று பன்மையாற் கூறினர்.

இச்செய்யுளின் கருத்தறியா வாசிரியனை யுள்ளிட்ட மாணுக்கர் படுமிடர் மிக்க மலிவென்க. முதலுரையாரு மிச்செய்யுளை நன்குணராதவராய் "ஈசாநபி பாரில் வந்தநாடொடங்கி ஆறுநூறுவருஷங்கள்வரையும் ஓயாமல் வணங்கின நெருப்பு" எனப் பொருள்கூறி யிடர்ப்படுவர்.

ஆகவே மஜூசிக்காபிர்கட்குத் தீவணங்குங்கொள்கை ஈசாநபி பாரில் பிறந்தவன்று கிடைத்ததென்பதூஉம் ஈசாஅலை ஹிஸ்ஸலாம் பிறந்தநாண்முதல் நபிபெருமானார் பிறந்த நாள்வரையும் அறுநூறுவருஷமென்பதூஉ மிவர்க்குக் கருத் துபோலும். இவை பயனில்கூற்றாமென மறுக்க. பிறவரு வனவெல்லா மாய்ந்தாய்ந் தறிக. ஏகார மீற்றசை.

(95) படியிடை புடைப்பப் பெருக்கெடுத் ததிரப்
பாயலை சுருட்டிவிட் டெறிய
விடுகடல் சாவா வெனும்பதி யிடத்தில்
வெறுந்தரை யாயின வறந்து
குடிலமட் டோங்கி மஞ்சடை கிடக்குங்
கொத்தள மொருபதி னான்கு
மிடிபட வீழ்ந்து சேருவா னகர
மெங்கணுங் கலங்கிய தன்றே.

(ப - ரை.) பாய் - தாவும், அலை - வெள்ளிய அலைகளை, சுருட்டி - திரைத்து, படியிடை - பூமியின்கண், விட்டெறிய - வீசும்படியாக, விடு - ஏவா நிற் கும், கடல் - சமுத்திரமானது, சாவா எனும் - சாவா என்று சொல்லப்படும், பதியிடத்தில் - நகரத்தில், அதிர்-அதிர்ச்சியுண்டாக, புடைப்ப- திடீரெனக் குமிழித்துவீங்க, பெருக்கு எடுத்து- பிரவாகித்து, வறந்து - உடனேகாய்ந்து, வெ றும்தரை ஆயின - வெறுமையாகிய நிலமாகி னது, சேருவான் - அன்றியும் நௌஷேர்வானி ராஜனது, நகரம் - இராஜதானிப் பட்டணத் தில், குடிலமட்டு - ஆகாயம்வரையில், ஓங்கு- உயர்ந்து, மஞ்சு அடைகிடக்கும் - மேகங்கள் அடைந்திராநிற்கும், பதினான்கு - பதினான்கா கிய விலக்கமுள்ள, ஒரு - ஒப்பற்ற, கொத்தள மும் - கோட்டைகளும், இடிபட - தம்மிற்

ருமாகவே யுடைபட, வீழ்ந்து - சிதைவுற்று, எங்கணும் - அவ்வரசனது தலங்கண்முழுவதி னும், கலங்கியது-பெரும்பயம் பிடித்திருந்தது, எ - று.

(போ-ரை.) தாவும் வெள்ளிய அலைகளைத் திரைத்துப் பூமி யின்கண் வீசும்படியாக எவாநிற்கும் சமுத் திரமானது **சாவா**வென்று சொல்லப்படு நகரத் தில்அதிர்ச்சியுண்டாகத் திடீரெனக்குமிழித்து வீங்கப் பிரவாகித்து உடனே காய்ந்து வெறு மையாகிய நிலமாயிற்று. அன்றியும் **நௌஷேர் வா** னிராசனது இராஜதானிப் பட்டணத்தில் ஆகாயம்வரையு முயர்ந்து மேகங்க ளடைந் திராநிற்கும் பதினான்காகிய விலக்கமுள்ள வொப்பற்ற கோட்டைகளும் தம்மிற் ருமாக வுடைபடச் சிதைவுற்று அவ்வரசனது தலங் கண் முழுவதினும் பெரும்பயம் பிடித்திருந் தது, என்பதாம்.

"பாயலைசுருட்டிவிடுகடல்" என்புழிக் கடலினது இயற்கை கூறினானென்க. **சாவா** எனும் பதியிடத்தில் அதிரப்புடைப்பப் பெருக் கெடுத்து வறந்து வெறுந்தரையாயின என்புழிச் **சாவா**வெனுந் தலத் திற்குரியகடல் திடீரெனப் பிரவாகித்து உடனே வறந்து வெறுந்தரை யாயிற்றென்பது கருத்தேயன்றி, கடல் முழுவதும் பிரவாகித்து வெறுந்தரையாயிற்றென்பதன்று எனவறிக.

பிரானவர்கள் பிறந்த வன்றிரவே **சாவா**கடல்பிரவாகித்து உட னே இல்லாமையாயிற்றென்பதே முதனூற் கொள்கை யாகலின் ஆசிரிய ரங்ஙனங் கூறினார்.

இக் கருத்தறியாதார் புடைப்பப் பெருக்கெடுத்து என்புழிக் கடலின தியற்கையெனக் கொள்வர். இதுவே முதனூலா யார்க்கு முடன்பாடு.

அங்ஙனம் புடைத்தலும் பெருக்கெடுத்தலும் கடலுக் கியற்கையன் றாகலானும் முதனூலோடு முரணுமாகலானும் அது போலியுரையென்க.

அன்று அசைநிலை. ஏகாரம் ஈற்றசை.

(96) சிலையெடுத் துருவாய் வைத்தபுத் தனைத்தும்
சிரசுகீழ்ப் படமுகங் கவிழ்த்த
சலமதி லிபுலீ சியற்றிய சிங்கா
சனமுமன் றிடிந்தன வைஷத்தான்
குலமுமன் றொதுங்கி வானகம் புகாமற்
கூண்டுநக் கேத்திர மெரிந்து
நிலமிசை வீழ்ந்த வினுஞ்சில புதுமை
நிகழ்த்துதற் கரியதன் றிரவே.

(ப - ரை.) இபுலீசு - இபுலீசுல்லஈ னவன், சலமதில் - பொய்யினால், இயற்றிய - நிலைபடுத்திய, சிங்காசனம் - பீடங்களில், சிலையெடுத்து - மலைக் கற்களைஎடுத்து, உருவாய் - பலவகைப்பட்ட ரூபமாக, வைத்த - சமைத்துநிறீஇய, புத்து அனைத்தும் - விக்கிரகங்களெல்லாம், சிரசு - தமதுதலைகள், கீழ்ப்பட - பூமியிற்றாக்க, இடிந்தன - தகர்ந்துவீழ்ந்தன, ஷைத்தான் - இபுலீசையும், குலமும் - அவனது கூட்டங்களையும், முகம்குப்புற - முகங்கள் கவிழும்படியாக, ஒதுங்கி - கரந்தும், வானகம் - வானலோகத்தின்கண், புகாமல் - புகுதவிடாமல், நக்கேத்திரம் - நட்சத்திரங்கள், கூண்டு - கூடுதலாய், எரிந்து - சுவாலித்து, நிலமிசை - பூமியிலே, வீழ்ந்த - விழுந்தன, இனும் - இங்ஙனமன்றி, அன்றிரவு - நபிபெருமானு ருதயமாகிய வந்த இரவின்கண், சிலபுதுமை - நடந்த சிலகார

ணங்கள், நிகழ்த்துதற்கு - இன்னதென்று நாம் சொல்லுதற்கு, அரியது - மிக்க அருமையானது, எ-று.

(போ-ரை.) இபுலீசுல்லஊ னவன் பொய்யினுல் நிலைபடுத்திய பீடங்களில் மலைக்கற்களை யெடுத்துப் பல வகைப்பட்ட ரூபமாகச் சமைத்து நிறீஇய விக்கிரகங்களெல்லாம் தமது தலைகள் பூமியிற்ருக்கத் தகர்ந்து வீழ்ந்தன, இபுலீசையும் அவனது கூட்டங்களையும் முகங்கள் கவிழும்படியாகக் கரந்தும் வானலோகத்தின்கண் புகுதவிடாமல் நட்சத்திரங்கள் கூடுதலாய்ச் சுவாலித்துப் பூமியிலே விழுந்தன. இங்ஙனமன்றி நபிபெருமானு ருதயமாகிய அந்த இரவின்கண் நடந்த சில காரணங்கள் இன்னதென்று நாம் சொல்லுதற்கு மிக்க அருமையானது என்பதாம்.

சிலை எடுத்து என்றமையான் அதற்குரிய மலை பெறப்பட்டது. சமைத்து என்பது சொல்லெச்சம். முகங் கவிழ்த்தலை ஈண்டு இபுலீசோடுங் கூட்டுக.

அதைப் புத்துகளோடுங் கூட்டுவர் முதலுரையார். சருவாந்தரியாமித்துவக் கடவுளை யுட்கொள்ளவிடாது சர்வ சூன்ய சகாய ஜகத் ரூபமான வன்னிதா தோற்றத்திற் கேதுவாய ஆட்சிக்குடையான் இபுலீசாகலின் "சலமதிலிபுலீசியற்றியசிங்காசனமும்" என்ருராசிரியர்.

இனி, அதற்குக் "கடல்மே லியற்றப்பட்ட சிங்காசனம் இடிந்தது" எனப் பொருள்கூறுவர் முதலுரையார். கடன்மேலாயதோர் ஆசனம் இபுலீசுக் குளதென்பது வேதாகமக் கொள்கை யன்மையான் அங்ஙனம் இபுலீசுக்கு ஆசனமுளதென அவர்க்குப் பயப்பித்த போதகாசிரியரோ இடர்ப்பட்டாரெனக் கூறி அவ்வுரை போலியாமென மறுக்க.

ஷைத்தான்குலம் உம்மைத்தொகை. ஷைத்தான்களை நபிபெருமானுரவர்கள் பிறந்த வன்றுமுதல் வானகம்புகாமல் நக்கேத்திரங்

கொண் டெறியுமாறு தேவர்கட்குக் கடவு ளாக்யாபித்தானென வேதம் அலறுகையா னங்ஙனங் கூறினு ராசிரியனெனக் கொள்க. ஒதுங்கியும் என்புழி இழிவுசிறப்பும்மை விகாரவகையாற் றெக்கது. வானகம் புகாமல் நக்கேத்திரம் எரிந்தமையான் தமது கூட்டத்தார்மாட்டு வான கத்து நடப்பன நவிற்றற்கு இயலாவாய்த் தலைகவிழ்ந்தா னென்பது தோன்ற "முகங்கவிழ்த்த" என்றார்.

நபிபெருமானுரவர்க ளுதயமாய வன்றிரவில் நிகழ்ந்துற்ற சில வரிய வற்புதங்கள்நோக்கினோர் கண்ணினு மனத்தினு மடங்காவாய் மனுஷீக பாஷை வடிவிற்கு ஒருவாற்றானும் புலப்பாடின்றி அவைக ளெல்லா மாற்றலினனே ஒரோ தன்மைத்தனவாயின என்பது தோன்ற "நிகழ்த்துதற்கரியது" என ஒருமையாற் கூறினர். பிறவருவனவெல் லா மமைத்துக்கொள்க.

முதலுரையார் இச்செய்யுட்குப் பொருண்முடிந்தவா றறியாது தமது அறிவிற் கிலக்காய்ச் செய்யுளைத் திருத்திப் போந் தார். அவைஎல்லா மவருரையானே காண்க.

(97) சிறந்தநன் மதலை தனைவிரைந் தெடுப்பத்
தெரிவையர் மனத்தினி னினைப்ப
மறந்திகழ் விழியார் தொடத்தகா தென்றன்
முகம்மதை விரைவினி லேந்தி
நிறந்திகழ் சுவனப் பதியினிற் கொடுவம்
மென்றன னெடியவ னதனு
லறந்திக ழாமி னுத்திரு மனைபுக்
கடுத்தவர் பிள்ளையை யெடுத்தார்.

(ப - ரை.) சிறந்த - அரிதாகிய, நன் - நன்மைபயக்கும், மதலைதனை - பிள்ளையை, தெரிவையர் - அவ்வி டத்திருந்த பெண்கள், விரைந்து - துரிதமாய், எடுப்ப - அணைத்தெடுப்பான்வேண்டி, மனத்தி னில் - உள்ளத்தின்கண், நினைப்ப - உன்னிய மாத்திரத்திலே, நெடியவன் - அல்லாஜல்ல ஷான ஹுத்த ஆலா ஜீபுறீலை விளித்து, என்

தன் - என்னுடைய, முகம்மதை - முகம்மதாகிய குழந்தையை, மறம் - ஒவ்வாமையின்குணம், திகழ் - விளங்காநிற்கும், விழியார்-பார்வையை யுடையவர்கள், தொடத்தகாது, முதன்மையா கத் தொடுதற்குத் தகுதியன்று, அதனல் - ஆத லினுலே, வினைவினில் - நீவிர் கடிகையிலே, ஏந்தி - அக்குழந்தையைச் சுமந்து, நிறம்திகழ் - ஒளி பிரகாசியாநிற்கும், சுவனம் - சுவர்க்கங்க ளுக்கு, பதி - பதியாகிய இல்லியீனில், கொடு வம் என்றனன் - கொடுவருவீராகவென் ருக்யா பித்தனன், அவர் - ஜிபுறியீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள், ஆமினு - ஆமினு அவர்களின், திரு- தெய்வீகத்துவமுடைய, மனைபுக்கு - மனையின் கண் புகுந்து, அறம் - தருமவேதம், திகழ் - தோற்றுநிற்கும், பிள்ளையை - வஜீகரமுள்ள நபிகணுயகமவர்களை, அடுத்து - மிக்கமரியாதை யோடு நெருங்கி, எடுத்தார் - தூக்கினுர்கள், எ-று.

(போ-ரை.) அரிதாகிய நன்மைபயக்கும் பிள்ளையை யவ்வி டத்திருந்த பெண்கள் துரிதமாய் அணைத்தெ டுப்பான்வேண்டி உள்ளத்தின்கண் உன்னிய மாத்திரத்திலே அல்லா ஜல்லஷான ஹுத்த ஆலா ஜிபுறியீலை விளித்து என்னுடைய முகம்ம தாகிய குழந்தையை ஒவ்வாமையின் குணம் விளங்காநிற்கும் பார்வையை யுடையவர்கள் முதன்மையாகத் தொடுதற்குத் தகுதியன்று, ஆதலினுலே நீவிர் கடிகையிலே அக்குழந்தை யைச் சுமந்து ஒளி பிரகாசியாநிற்கும் சுவர்க் கங்களுக்குப் பதியாகிய இல்லியீனில் கொடு

வருவீராகவென் ருக்யாபித்தனன். ஜிபுறியீல் அலைஹிஸ்ஸலா மவர்கள் ஆமினு அவர்களின் தெய்வீகத்துவமுடைய மனையின்கண் புகுந்து தருமவேதந் தோற்றுநிற்கும் வஜீகரமுள்ள நபிகணுயகமவர்களை மிக்க மரியாதையோடு நெருங்கித் தூக்கினர்கள் என்பதாம்.

ஏனைய நபிகளால் பயவாது அரும்பேற்றினவாய் அமர்ந்த பயன் இந்நாயகராற் பயக்குமென்பது தோன்ற "சிறந்தநன்மதலை" என் முர். தெரிவை என்பது ஈண்டு ஆசியா, மறியம் இவர்களைக் குறித்து நின்றது. பிள்ளையை எடுக்க நினைத்தற்குமுதலே "மறந்திகழ் விழியார் தொடத் தகாதென்றன் முகம்மதை விரைவினி லேந்தி நிறந்திகழ் சுவனப் பதியினிற் கொடுவம்"என நெடியோன் ஓதாதது தெரிவையர் நினைத்தபின்னர் யங்ஙனம் ஓதியவா றென்னையோ? வெனின் பிறத் தலைச்செய்யப்படுவாரை எடுத்தலைச்செய்தல் உலகவழக்கில் இனைத் தென்பது வெள்ளிடை மலைபோல் விளங்கலானே உலகத்திற் கரும் பேற்றினதாய்த் தோற்றஞ்செய்ய வாராநின்ற நபிபெருமாணைப் பூமிபடாது எடுத்தற்கு அங்குற்றிருந்தார் அத்துணையாந் தகைமைத் தவொன்பதூஉம் அவர் அக்கருமஞ்செய்தற்கு நினைத்தலும் அது நிகழ் தலும் ஓரேவிடத்தாம் என்பதூஉம் எவர்க்கும் நன்கு விளங்குமாற்ற லுடையன. ஆகவே அத்தெரிவையர் நினைத்த கருமம் முடித்தற் கிடை காலமுறுதலின்மையென்பதே பெரும்பான்மைய ரறிவிற்குப் புலப்படுமோயினும் சில பிரத்தியட்ச ஆணையாற்றலினுனே அங்ஙனம் காலம் இடையுறுமெனத் துணியும் கூரிய நுண்ணறிவுளார் அக்காலத் தின் அளவு இத்துணையாம் கழிய சிறிதென்பதில் ஐயந் திரிபறநிற்பர். ஆகலின் அத்துணையாங்காலத்தின்கண் கடவுள் ஜிபுறியீலவர்களைக் கூவி அங்ஙனங் கூறியதும் ஜிபுறியீலம் மொழிக்கிசைந்துவந்து பிள் ளையை எடுத்து இனிவரும் செய்யுட்களிற் கூறப்படுவனவெல்லாஞ் செய்து முடித்ததும் இத்துணையாஞ் சிறியகாலத்தென்பது தோற்று வித்துத் தேவரது தன்மையை யொருவா றுணர்த்தற்காக அங்ஙனங் கூறலாயின னென்க. அது பிறவருஞ் செய்யுட்களானுங் கூறுவர். நெடியவன் என்றது மனத்திற்கும் புலப்பாடின்றி யளத்தலமையாது உயர்ந்து தோன்றுகையான் வந்ததோர் காரணப்பெயரொன்க.

இனி, அது நீண்டகாலத்தை யுடையவன்எனும்பொருட்டு என்பர் முதலுமையார். காலம் கடவுளை யணுகாதென்பது அவரது ஆசிரியரும் பயின்றிலர் போலும்.

கண்களின்குணம் இனைத்தென்ப துணர்த்துவான் "மறந்திகழ்" என்றார். விழியார் என்றபொதுமையான் அது ஆடே மகடூஉ விரு பாலர்க்கு மாயிற்றெனக்கொள்க. இதுபற்றியே அபூஜகலும் அவன் போல்வாரும் **நபி**பெருமானாரவர்களைக் காணுமாறு காணு தொழிந்து போயினாரறிக.

இக் கருத்தறியாதார் கொலைபுரியும் விழியார்என வாளாப்பொ ருள்கூறுவர். இக் கொள்கையே முதலுமையார்க்கு முடன் பாடு.

மிறந்திகழ் என்பதை ஈண்டுச் சுவனத்தொடு கூட்டுக. சுவனப் பதி என்புழிச் சுவனத்திற்குப் பதி என விரிக்க, பதி எனுந் தலைமைப் பெயர் தம்பொருளாற்றலினானே **இல்லியீனை** யுணர்த்தி நின்றது. கடவுளினது தகுதிக்கேற்பனவாங் கிரியை யியற்றவும் அவ்வுழை யொழுகவும் இந்நாயகரோ யுரியானொன்பது தோன்ற என்றன் **முகம்மது** என உடைமைப்பொருட்டாய்க் கூறினான். தொடத்தகாது என்றமையான் முதன்மையாக என்றது செய்யுணோக்கத்தாற் பெறப் பட்டது. **அல்லாஜல்லஷான ஹுவத ஆலா ஜிபுறியீ** லவர்களை **நபி** பெருமானாரவர்கள்பொருட்டுச் செய்வனசெய்தற்கு நிறீஇயதாக வேத அளவை யாகமத்தான் நன்குணரப்படுதலின் **ஜிபுறியீலை** யிங்ங னங் கூறாராயினும் அவர் எனச் சுட்டிப் போந்தா ராசிரியர். ஆகலின் **ஜிபுறியீலை** வருவித் துரைக்கப்பட்டது. இனி **மலக்கு**களும் **கூறு லீன்**களும் **ஆமினா**மனைநிறைந்து ஏவல்நோக்கி நின்றமையான் ஈண்டு **ஜீபுறியீல்** வேண்டாவெனச் சில போலியறிவினர் கடாநிகழ்த்துவர். அவர்க் கங்குற்றிருந்தாரெல்லாம் **ஆமினா**வினது ஏவனோக்கிநின்றாரல் லது பெருமானாரது ஏவற் கன்றெனப் பயிற்றுக. கொடுவம்மின் என் பது செய்யுளாகலின் விகாரவகையாற் கடைகுறைந்து கொடுவம் என நின்றது.

இனி, அதைப் பொருளருமொழி எனக்கருதி கொடுவம்மின் எனப் படுத்தியும் சுவனப்பதி என்பதைச் சுவனத்தினில் எனப் புரட்டியும் போந்தார் முதலுமையார். இவ்வாறு

செய்யுளைக் கலைத்துத் தமது சிற்றறிவிற்கேற்பப் பொருள் கூறிப் போதலே யவர்க் கியற்கையாதல்பற்றி மும்மலங் களுங் கழீஇ தெளிந்த பெரியோர் கருத்தெனச் சற்று மஞ்சாது துணிந்தமையா லாண்டாண்டு மிடர்ப்படுவர், காண்க.

அறந்திகழ் என்பதைப் பிள்ளையோடுங் கூட்டுக.

அதை ஆமினு மனையோடுகூட்டி மயங்குவர் முதலுனாயார்.

அது பயனில்கூற்ருமென மறுக்க.

பிறவருவனவு முய்த்துணர்க.

(98) அமரருக் கிறைவன்ஜிபுறியீல் வரிசை
யகுமதை யெடுத்தினி தேந்தித்
தமருடன் சுவனப் பதியினிற் கொடுபோய்ச்
சலநதி தொறுமுழு காட்டி
இமைதிறந் திருகண் மையினை யெழுதி
யெண்ணெயிட் டமிர்தமு மூட்டிச்
சுமைதர வாசந் திகழ்த்தியெண் டிசையுஞ்
சுற்றியே சிலமொழி பகர்வார்.

(ப - ரை.) அமரருக்கு - வானவர்கட்கும், இறைவன் - குருவாகிய, ஜிபுறியீல் - ஜிபுறியீல் அலைஹிஸ் ஸலாமவர்கள், வரிசை - மகிமைபொருந்திய, அகுமதை - நபிகளுயகமவர்களை, இனிது எடுத்து - மகிழ்வினுனேதூக்கி, ஏந்தி - இருகரத்தினுந் தாங்கி, தமருடன் - தமக்குரிய கூட்டத்தோடு, சுவனப்பதியினில் - இல்லியீனென்கிற சுவர்க்கத்தில், கொடுபோய் - கொடுசென்று, சலம் - குளிர்ச்சிபொருந்திய, நதிதொறும்-யாறுகடோறும், முழுகாட்டி - ஸ்நானஞ்செய்வித்து, இரு கண்-இரண்டுகண்களின், இமைதிறந்து - இமைகளைத்திறவித்து, மையினைஎழுதி - சுறுமாவைத் தீட்டி, எண்ணெய் இட்டு - சிரசின்கண் நறு

நெய்தோய்த்து, அமிர்தமும் ஊட்டி - தகைமை பொருந்திய அமுதருத்தி, வாசம் - பரிமளாதிகள், சுமைதர - கனக்கும்படியாக, திகழ்த்தி - திருமேனியின்கண் தோற்றுவித்து, எண்திசையும்-எட்டாகியடங்குந் திக்குகளெல்லாம், சுற்றி-தெரியும்படியாக வலம்வந்து பெயர்நிறுவி, சில-அரியனவாகிய சில, மொழி - வார்த்தைகளை, பகர்வார் - சொல்லத் தொடங்கினுர்கள், எ-று.

(போ-ரை.) வானவர்கட்குங் குருவாகிய ஜிபுறியீல் அலைஹிஸ்ஸலா மவர்கள் மகிமைபொருந்திய நபிகளுயகமவர்களை மகிழ்வினுனே தூக்கி இருகரத்தினுந் தாங்கித் தமக்குரிய கூட்டத்தோடு இல்லியீனென்கிற சுவர்க்கத்தில் கொடுசென்று குளிர்ச்சிபொருந்திய யாறுகடோறும் ஸ்நானஞ்செய்வித்து இரண்டு கண்களி னிமைகளைத் திறவித்துச் சுறுமாவைத் தீட்டிச் சிரசின்கண் நறுநெய் தோய்த்துத் தகைமைபொருந்திய அமுதருத்திப் பரிமளாதிகள் கனக்கும்படியாகத் திருமேனியின்கண் தோற்றுவித்து எட்டாகியடங்குந் திக்குகளெல்லாந் தெரியும்படியாக வலம்வந்து *பெயர்நிறீஇ அரியனவாகிய சிலவார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினுர்கள் என்பதாம்.

ஜிபுறியீல் நபிபெருமானுரவர்கட்கும் அமரருக்குங் குருவென்பது வேதாகம வளவை. அப்பொருளுணர்த்து மும்மை விகாரவகை

* பெயர்நிறுவலாவன;—அமரர்காள்! நீவிர் உட்கொண்டு விளங்குங் கலிமா இம்மஹானது. இவரோ இறைவன தன்பி னேதுவால் விளங்கு மாண்பினர். இவர் பெயரோமுகம்மதெனப்படும். என்பன வற்றை. இக்கருத்தேபற்றிச் சுற்றி எங்கணும் பெயர்விளக்கினைப் பின்வருஞ் செய்யுளிற் கூறுவர், உய்த்துணர்க.

யாற் றெக்கது. நபிபெருமானாரவர்கட்கு ஜிபுறயீல் முதன்மையாக மறையுணர்த்துகையான் குருவென் றறிக. அமரரென்ற பொதுமை யான் ஜிபுறயீல் எல்லார்க்குங் குருவாயினு ரென்பது கருத்தாயிற்று.

இனி, அமரருக்கு இறைவர் ஜிபுறயீல்எனத் திருத்தி அமரர் களுக் கரசராகிய ஜிபுறயீல் எனப்பொருள்கூறுவர் முத லுரையார். ஜிபுறயீல்மலக்குகளுக்கு அரசென்பது வே தாகம வளவை யன்மையான் அவருரை யிழுக்காமென மறுக்க.

ஜிபுறயீல் நபிபெருமானு ரமர்களைத்தமது கரங்களி லெடுத் தலைச் செய்தற்குரிய தவப்பேற்றினனே அது செய்தாராதலின் அவ ர்க்கு அத்தொழிலினு மினியனவாய பிறதொழில் யாண்டுஞ் செய்தில ரென்பது தோன்ற "இனி தெடுத்தேந்தி" என்றார். தமருடன் என்ற ஒற்றுமைநயத்தானே தம்முடன் வந்தாரன்றி நபிபெருமானு ருத யத்திற்சா யங்குற்றிருந்த மலக்குகளும் ஜிபுறயீலோடு போயினர்க ளென்பது கருத்தாயிற்று.

இனி, "சுவர்க்கத்தில் தேனதி பானதி சுரநதி சலநதி என நான்கு நதிக ளுண்மையான் நதியெனப் பொதுப்படக் கூருது 'சலநதி' எனப் பிரித்துக் கூறினர்" எனக் கொண்டு அதை "நீருடைய ஆறு"எனப் பொருள்கூறுவர் முதலுரையார். முழுகாட்டியென்றும் நதிதொறும் என்றுங் கூறினமை யானே நீருடைய நதிஎன்பதூஉம் அந் நதி பலவாயின வென்பதூஉம் தெற்றெனத் தோன்றுமாகையால் குளிர்ச்சி பொருந்திய ஆறெனத் தோற்றுவிப்பான் சலநதி யென்று ரல்லது அவர்கூறியவா றன்றென மறுக்க.

அமுதமும் எனு மும்மை ஆக்கவும்மை. எண்ணெயிட்டு வாசந் திகழ்த்தி என்றமையான் முறையே அவைகளுக்குரிய சிரசும் தேக மும் பெறப்பட்டன. எண்டிசையு மென்றமையான் எல்லாவுலகங் களினுங் கொண்டு சுற்றினுரென்பது கருத்தாயிற்று. சிலமொழிஎன் றது அரிய தன்மையினை யுணர்த்தி நின்றது. சுற்றிச் சிலமொழி பகர் வார் என்றமையான் சுற்றும்போதே பகர்வார் என்பது கருத்து. பெயர்சிறுவி என்றசொல் அதிகாரவகையாற் பெறப்பட்டது. அது வருஞ்செய்யுளானு மறிக.

(99) ஆதிநா யகன்றன் றிருநபி யிறசூ
லாமிவர் தங்கலி மாவைப்
பூதலத் துறைந்த படைப்பெவை யவையும்
போற்றுதல் செய்யவும் வேண்டு
மீதலா லமர ரிவர்கலி மாவுக்
கிசைந்தன ரென்பது மிசைத்துச்
சூதர மொழியா ராமினு விடத்திற்
றோன்றலைக் கொடுத்தகன் றனரோ.

(ப - ரை.) ஆதிநாயகன் - எவற்றினு முதன்மையாகிய நாயகத்துவமுடைய கடவுளினது, திரு - மேன்மை தங்கிய, நபி இறசூலாம் - நபியாயும் றசூலாயும் வரப்பட்டவர், இவர் - இம்மஹானது, கலிமாவை - ஸ்தோத்திரவசனத்தை, பூதலத்து - பூமியின்கண், உறைந்த - தங்கிய, படைப்பு எவை - சிருட்டிகளெவையோ, அவையும் - அவைகளெல்லாம், போற்றுதல் - வளர்த்தலை, செய்யவும் - தமக்குத் தொழிலாக்கோடலும், வேண்டும் - கடமையாமென்பதையும், ஈதலால் - இதுவல்லாமல், இவர்கலிமாவுக்கு - இம்மஹானது ஸ்தோத்திர வசனத்திற்கே, அமரர் - மலக்குகளெல்லாம், இசைந்தனர் - உடன்பட் டிருக்கின்றனர், என்பதும் - என்பதையும், இசைத்து - சொல்லிக் காண்பித்து, சூது - வஞ்சனையாகிய இரும்புக்கு, அரம் - அரம்போலும், மொழியார் - சொற்களையுடையாராகிய, ஆமினுவிடத்தில் - ஆமினுவினிடத்திலே, தோன்றலை - அரிய தோற்றமாய்வந்த மகவை, கொடுத்து அகன்றனர் - மரியாதையொடுகொடுத்து அவ்விடத்தினின்று நீங்கினர்கள், எ-று.

(பொ-ரை.) எவற்றினு முதன்மை யாகிய நாயகத்துவ முடைய கடவுளினது மேன்மைதங்கிய நபியா யும் றசூலாயும் வரப்பட்டவர், இம் மஹானது ஸ்தோத்திரவசனத்தைப் பூமியின்கண் தங்கிய சிருட்டிக ளெவையோ அவைகளெல்லாம் வளர்த்தலைத் தமக்குத் தொழிலாக்கோடலும் கடமையாமென்பதையும், இதுவல்லாமல் இம் மஹானது ஸ்தோத்திர வசனத்திற்கே மலக்கு களெல்லாம் உடன்பட்டிருக்கின்றனர் என்ப தையும் சொல்லிக் காண்பித்து வஞ்சனையாகிய இரும்புக் கரம்போலும் சொற்களையுடையாரா கிய ஆமிறுவினிடத்திலே அரிய தோற்றமாய் வந்த மகவை மரியாதையோடு கொடுத்து அவ் விடத்தினின்று நீங்கினுர்கள், என்பதாம்.

பிறவாகும் நாயகரும் உளராதல்பற்றிக் கடவுளை ஆதிநாயகன் என்றுர். ஏனைய நபிகள் இத்துணையாஞ் சிறப்பினரல்லர் என்பது தோன்ற "திருநபி" என்றுர். ஆகவே திரு என்பது தெய்வீகத்து வங் குறித்ததன்று. என்னை? நபியாயினுரொல்லாம் தெய்வீகத்துவ முடையாரோயாகலின். நபி றசூல் என்புழி வேற்றுமை இனைத்தென் பது முன்னர்க்கூறினு மாண்டுக்காண்க. மதவேறுபாடுக ளனைத்தை யும் மறுத்து இஃதொன்றே மதம் எனச் சாதித்தற்காய் அம்மதத்திற் குரிய கடவுளையும் அவரது தோற்றத்திற் கேதுவாய நபிபெருமானு ரவர்களையும் ஸ்தோத்திரஞ்செய்வான் நிறீஇய வொப்பற்ற வசனத் தைக் கலிமா என்றது. கலிமா வென்பது ஈண்டு எம்மார்க்கபாடை யில் வாக்கியம் எனும் பொருளது. இங்ஙனமேல் பொருளைப் பயப்பி த்து நிற்கும் ஒவ்வொரு சொன்னிலையையும் வாக்கியமென்பவாகலின் ஸ்தோத்திரவசனத்தை வாக்கியமென்பது எற்றிற்கோ? வெனின் நன்று கடாயினுய், வாக்கியங்களின் சிரேட்டமும் ஒப்பறுந் தன் மையு முடைமைபற்றி அப்பொருண் மெய்ப்பொருள் விளக்குவான் வேதியர் அங்ஙன முறைபடுத்தினுர். ஆகவே அது ஆகுபெயரால் ஸ்தோத்திர வசனத்தை யுணர்த்திநின்றது; அறிகவென்க: கலிமா என்

பது கடவுளையும் நபிபெருமானு ரவர்களையும் ஸ்தோத்திரஞ் செய்யும் வசனத்திற்காகலின் இவர் தங் கலிமா எனற் பொருந்துங்கொல்லோ? வெனில்; கடவுளை ஸ்தோத்திரஞ் செய்விப்பான் பொருட்டுவந்துள்ள ஏனைய நபிகளுக்கு இக்கலிமா கொடுக்கப்படாமை இந்நாயகரது பொருட்டு ஒப்பற நிலைபடுத்தி வைத்திருந்த காரணம்பற்றி யங்ஙனம் பொருந்தும் என்க. படைப்பு எவை அவையும் என்று பொதுப் படக் கூறினமையான் உயர்திணை அஃறிணையா யடங்கும் எல்லாவஸ் துவும் அக் கலிமா ஓதுமென்பதாயிற்று. உம்மை முற்றும்மை. கலி மா நாட்கு நாள்வளர்த்தப்படுந்தன்மைத்தென்பது தோன்ற வற் புறுத்துவான் வேண்டிப் "போற்றுதல் செய்யவும் வேண்டும்" என் ஞர். செய்யவும் என்புழி உம்மை ஆக்கப்பொருளி னின்றது. என்ப தும் என்ற சொல் சொல்லெச்சமாய் முன்னருங் கூட்டப்பட்டது.

இவ்வாறு ஓட்டிப் பொருள்கூற வறியாமுதலுரையார் உரை கூறப்புகுந்தது இழுக்கு ஆகலின் அவர் "போற்றுதல் வேண்டுமென்பதுவும்" எனச் செய்யுளைத் திருத்தி வாளாப் போவர். அன்றியும் இசைத்து என்பதை உரைத்து என் றுந் திருத்துவர். இத்திருத்தலுக்குக் காரணம் என்னுதல் வரோ வறியேம்.

இவர் கலிமாவுக் கிசைந்தனர் என்றமையான் பிறவாகுங் கலிமா வுளவென்பதுவு மவைகளுக்கு அமரர் உட்படிந்திலர் என்பதூஉங் கருத்தாயின. ஆகவே அங்ஙனம் வேண்டிய தேற்றேகாரம் விகார வகையாற் றொக்கது. மலக்குகள் மனுபிதாவாகிய ஆதம் அவர் களைப் படைத்தற்குப் பன்னூண்முன் படைக்கப்பட்டு இப் பெருமானு ரவர்களின் கலிமா ஓதாநின்றார் எனும் வேதாகமத்தானு மறிக. அமர ரிவர் கலிமாவுக் கிசைந்தனர் என ஜிபுறியீல் ஓதுகையால் நபி பெருமானுரவர்களை வானத்தின்மேலே எடுத்துக்காட்டில என்பதா யிற்றெனக் கடா நிகழ்த்தும் போலியறிவினருஞ் சிலர். அவரை எண் டிசையுஞ் சுற்றி என்றவிடத்து யாங் கூறியவாற்றானும் பின்வருஞ் செய்யுளில் சுற்றிஎங்கணும் பெயர்விளக்கி என்றதனானும் தெளிக்க. சூதரம் நான்கனுருபுதொக்க வேற்றுமைத்தொகை. அரமொழி உவ மத்தொகை. சூதரமொழி என்பது ஏகதேச உருவகம்.

"அரம்பொருத பொன்போலத் தேயும்".

என்றார் வள்ளுவரும். அரம் காரியஞ் செய்வதுபோன்று பொருதி மெல்லமெல்லத் தேய்த்து இரும்பின் வலி கெடுத்துவிடும். அதுபோல **ஆமினு**வினது மொழி சூதைத்தேய்த்துத் தானே விளங்குமென்பான் கருதி அங்ஙனங் கூறினு ராசிரியராகவே அதுகொண்டு **ஆமினு** சூது மொழியாரென்பதே கருத்தாயிற்று.

(100) அந்தர மவனி கடன்மலை யெழுதீ
வகத்தினு மெண்டிசை முழுதுஞ்
சுந்தர வதன முகம்மதைக் கொடுபோய்ச்
சுற்றியெங் கணும்பெயர் விளக்கிச்
சந்தமென் முகத்தா மனாமலர் குளிரத்
தடஞ்சிறை வானவர் திரண்டு
வந்தது மாமி னுத்திரு மனையில்
வைத்தது மொருநொடிப் பொழுதே.

**(ப - ரை.)** தடம் - பெருமைபொருந்திய, சிறை - சிறைகளையுடைய, வானவர் - **ஜிபுறியீல் அலைஹிஸ்ஸலா**மவர்கள், திரண்டு - தமது பரிவாரங்களோடு கூடி, வந்ததும் - கடவுளினது உத்தரவின்படி **நபி**பெருமானாரவர்களை எடுத்துச் செல்ல **ஆமினு** அவர்களின் றிருமனையிடத் துற்றதும், சுந்தரம்- அழகிய, வதனம் - முகத்தினையுடைய, முகம்மதை - **மூகம்மது சல்லல்லாஹு அலைஹிவ ஸல்லம்** அவர்களை, கொடுபோய் - கொண்டுபோய், எண்திசை - எட்டாகிய திசையிலடங்கும், அந்தரம்முழுதும் - வானலோக முழுவதும், அவனி எங்கணும் - பூலோக முழுவதும், கடல் - கடலினும், மலை - மலையினும், எழுதீவு அகத்தினும் - ஏழுதீவுகளினும், சுற்றி-திரிந்து, பெயர்விளக்கி-அவர்களின் றகைமைகளை விளக்கஞ்செய்துவிட்டு, ஆமினு - **ஆமினு**அவர்களின், சந்தம் - நிறம்பொருந்திய, மென் - மென்மை

யான, முகம் - முகமாகிய, தாமரைமலர் - தாமரைமலரானது, குளிர - குளிர்ச்சிபூப்ப (அவர்களினது.) திருமனை - தெய்வீகத்துவ மனையின்கண், வைத்ததும் - கொடுவந்து சேர்த்ததும் ஒருநொடிபொழுது - ஒரு நொடி நேரத்திலே, எ-று.

(போ-ரை.) பெருமைபொருந்திய சிறைகளையுடைய ஜிபுறயீல் அலைஹிஸ்ஸலா மவர்கள் தமது பரிவாரங்களோடுகூடிக் கடவுளின துத்தாரப்படி நபிபெருமானாரவர்களை யெடுத்துச் செல்ல ஆமினா அவர்களின் றிருமனையிடத் துற்றதும் அழகிய முகத்தினையுடைய முகம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்ல மவர்களைக் கொண்டு போய் எட்டாகிய திசையிலடங்கும் வானலோகமுழுதும் பூலோகமுழுதும் கடலினும் மலையினும் ஏழுதீவுகளினும் திரிந்து அவர்களின் றகைமைகளை விளக்கஞ் செய்துவிட்டு ஆமினா அவர்களின் நிறம்பொருந்திய மென்மையவான முகமாகிய தாமரைமலரானது குளிர்ச்சிபூப்ப அவர்களினது தெய்வீகத்துவ மனையின்கண் கொடுவந்து சேர்த்ததும் ஒரு நொடி நேரத்திலே என்பதாம்.

அந்தரம் என்பதனோடு முழுதும் என்பதைக் கூட்டுக. பூமிபோ லாதுவான லோகம் பாழ்ந்தலமின்றிச் சிறந்திருத்தலினானே "அந்தரமுழுதும்" எனப் பொதுப்படக் கூறினர். எங்கணும் என்பதை அவனியோடு கூட்டுக. அவனி எங்கணும் என்புழி வழக்குப் பற்றித் தொழிலும் பொழிலுஞ் செழித்து மானிடாதி குடிபடு மிடங்கள் என் றடங்குவாருமுளர் என்பது கருதி அவ்வழியுறாது காத்துக் கடன் மலை பாலை முதலிய வெல்லா விடங்களினும் பெயர்விளக்கினர் என்பது பயப்பித்துத் தருவான் வேண்டி விதந்தும் "கடன்மலை எழு

தீவகத்தினும்'' என் றேதிஞ ராசிரியர் என்றறிக. இதனனே படைக கப்பட்டன வெல்லாவற்றினும் நபிபெருமானுர் எடுத்துக் காட்டப் பட்டு அவைகளெல்லா மவர்களை அறிந்து உள்ளிட்டன வென்பதே கருத்தாயிற்று. சந்தமென்முகத் தாமமைமலர் என்பதை ஆமினு வுடன் கூட்டுக. மலக்குகளின் சிறை அவர்கள் நாடிய வளவினதாய் விரியுமாகலின் "தடஞ்சிறை" என்ருர்.

அதை அகன்ற சிறை என்பர் முதலுனாயார். அது பொருந்தாது என்னை? ஓர் பெரிய அளவினதாய் விரிந்துள்ள வஸ்துவை அகன்ற தென்பாரேயன்றி அடங்கா தகலுமாற்ற லுடைய தோர் வஸ்துவை அகலமென்ருராசிரிய ராகலின், அத்தன் மையிற் பெருமையுடையதென்பது கருத்தாதல்பற்றி.

வானவர் என்பது ஈண்டு ஜிபுறியீலை யுணர்த்திநின்றது. திரண்டு என்றமையாற் பரிவாரம் பெறப்பட்டது. ஒரு நொடி பொழுது என்றது மானுஷீக பாடையின் மிக்க ஒரு சிறியகாலத்தை யுணர்த்துந் தன்மைத்து. அது இனைத்தென்பதை முன்னர் யாம் விரித்துக் கூறி னும் ஆண்டுக்காண்க.

இச்செய்யுட்கு முதலுனாயார் கூறுவனவெல்லாம் முற்ற முரணு தல்பற்றி எடுத்துக்கூறி மறுத்திலம்.

ஏகாரம் ஈற்றசை. இச்செய்யுளான் மேலேகூறப்பட்ட இரு செய்யுட்களினு மமர்ந்தனவெல்லா மிவ்வளவினதென்பதுகூறி அங்ங னந் தொகுத்து நின்றனவற்றை விரித்தும் போந்தார், உய்த்துணர்க.

(101) வள்ளலென் றுதவிப் பெயர்நிலை நிறுத்தி
வளந்தரு புகழபுல் காசீ
முள்ளக நிறைந்த செம்மலர்ப் பதந்தொட்
டொளிர்பெறு மிணைவிழிக் கேற்றி
விள்ளரும் பவளம் விரிந்தன கனிவாய்
விளங்கிட வாழ்த்தெடுத் துவந்து
தெள்ளமு தனைய முகம்மது நபியைச்
சபாதிரு மடிமிசைக் கொண்டார்.

(ப - ரை.) சபா - சபாவென்று சொல்லப்படும் நாயகியான வர்கள், வள்ளலென்று - வரையாது கொடுப்பவ

றென்று சொல்லும்படி, உதவி - தியாகங் கொடுத்து, பெயர் - நாமத்தை, நிலைநிறுத்தி - நிலைபடநாட்டி, புகழ் - கீர்த்தியாகிய, வளம்-அரிய பதவிக்கு, தரு - ஒருதருப்போலும், அபுல்காசீம் - **அபுல் காசீம்மரைக்காய** ரவர்களது, உள்ளகம் - மனமாகிய, செம்மலர் - சிவந்தகமலத்தின்கண், நிறைந்த - நிறைதலாகிய, பதம் - **நபி**பெருமானரவர்க ளதுபயபாதங்களையும், தொட்டு- மெல்லநீவி, ஒளிர்பெறும்-ஒளியைப்பெற்றோங்கும், இணைவிழிக்கு - உபயகண்களிலும், ஏற்றி- சார்த்தி, பவளம் - பவளக்கொப்பானது, விரிந்தன - பிளந்தாற்போல, விளங்க - பிரகாசியாநிற்ப, கனிவாய் - கனிபோலுமினிய வாயைத் திறந்து, விள்ளரும் - சொல்லுதற் கரிதாய், வாழ்த்து - வாழ்த்துதலைச்செய்து, உவந்து - மகிழ்ச்சிபூத்து, தெள் - தெள்ளிய, அமுதனைய- துஞ்சாவமிர்தத்தையொத்த, முகம்மதுநபியை- **முகம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்**டவரர்களை, எடுத்து - மெல்லதூக்கி, திரு-மாட்சிமைதங்கிய, மடிமிசை - மடியின்கண், கொண்டார் - வைத்துக் கொண்டார்கள், எ-று.

(போ-ள.) **சபா**வென்று சொல்லப்படும் நாயகியானவர்கள் வரையாது கொடுப்பவரொன்று சொல்லும்படி தியாகங் கொடுத்து நாமத்தை நிலைபட நாட்டிக் கீர்த்தியாகிய அரிய பதவிக்கு ஓர் தருப்போலும் **அபுல் காசீம் மரைக்காய**ரவர்களது மனமாகிய சிவந்த கமலத்தின்கண் நிறைதலாகிய **நபி**பெருமானரவர்க ளதுபயபாதங்களையும் மெல்ல நீவி யொளியைப்பெற் றோங்

கு முபயகண்களிலும் சார்த்திப் பவளக்கொப் பானது பிளந்தாற்போல பிரகாசியா நிற்கக் கனிபோலு மினிய வாயைத்திறந்து சொல்லு தற்கரிதாய் வாழ்த்துதலைச்செய்து மகிழ்ச்சி பூத்து தெள்ளிய துஞ்சாவமிர்தத்தை யொத்த **முகம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரர்களை** மெல்லதூக்கி மாட்சிமை தங்கிய மடியின்கண் வைத்துக் கொண்டார்கள், என்பதாம்.

**நபி**பெருமானு ரவர்களி னியற்கை செயற்கைக ளடங்கிய வளையாப்பெருங்கடனீரிலோர்கைத்தனை யள்ளினாற்போன்று தமிழ்ப் புதுமொழி புனைந்து முதனூ னுமமுழங்க விந்நூன்முடித்துச் சிரமேற்கொண்டு அரங்கேற்றுவித்தற்பொருட்டுப் பன்னுடிரிந்தும் அவ்வாறு செய்விக்கும் அரும்பேற்றிற்குரியார் கிடைக்காது மாகூிமைதங்கும் எம்பதியாகிய **மஷ்ஹூது** பந்தரடைந்துநோக்க **நபி**பெருமானுரவர்களின் அருளே ஸ்வரூபமாய் **அபுல்காசீம்** எனும் அவதாரம் படைத்து விளங்காநிற்கும் வள்ளலினது திருமனைதரிசனையாய் அங்ஙனம் போந்த வாசிரியனைக் கண்ணுற்ற வம்மனைக்காயர் அவர்கள் அன்பு கூர்ந் தழைத் தருகுறவிருத்தி என்கொலோ நுமதரிய வகத்துற்றடைந் தவாறு? என வினயவழி ஆசிரியர் தமது கோரிக்கை முடிவுறும் இடமிஃதேஎன நன்குணர்ந்து அகத்துற்ற உருவிலாப்பொருளை உருப்படவெடுத்துக் காட்டாநிற்ப, மகத்துவமுடைய **அபுல்காசீம்** மனைக்காயரவர்க ளறிந்து **நபி**பெருமானுரவர்களின் உருவே அகமாய்க் கார்மேகமன்ன நிதி பொழிந்து அரங்கேற்றுவித்த காரணம்பற்றி "வள்ளலென் றுதவிப்பெயர்நிலைநிறுத்திவளந்தருபுகழபுல்காசீம்" என்றார். நிலைநிறுத்தி என்றமையான் பூலோகம், வானலோகம், சுவனலோக மெங்கணும் புகழ் நிறுவினனெனக் கொள்க. அன்பினினைவார துள்ளக் கமலத்தின்கண் தமது திருவடிகளோடு நிறையு மகத்துவம்பற்றி ஆசிரியர் நிறைந்தவென விறந்தகாலத்தாற் கூறினர். அல்லதுவும் மனைக்காயரவர்கள் அத்தன்மைத்தவராய்ப் படைக்கப்பட்டிருக்கும் நிட்சயம் பயப்பித்தற்பொருட்டு அப்பொருடோன்ற இறந்தகாலத்தாற் கூறினனெனினு மமையும். இணைவிழிக்கு என்புழி நான்கனுருபு ஏழன்

பொருளில் வந்தது. இருவிழிக்கேற்றி என்றமையான் பாதம் என்புழியும் உபய மென்பது பெறப்பட்டது. பவளம் ஆகுபெயர். விரிந்தால் எனற்பாலது விரிந்து என நின்றது. வாழ்த்தி என்னும் வினை எச்சத் திகரம் உகரமாய்த் திரிந்து நின்றது. ஒளிர்பு என்பது கடைகுறைந்து நின்றது. தரு என்பதை அபுல்காசீம் என்பதனோடு கூட்டுக. சபா எழுவாய்வேற்றுமை.

இச்செய்யுளினும் பொருண்முடிந்தவா றறியாது முதலுரையார் வாளாப்போந்தமையா னெடுத்துக் கூறிலம், அவருரையானே காண்க.

(102) மலர்தரு கரத்தா லேந்தியே மடியில்
வைத்தினி திருக்குமந் நேர
மலர்தரும் பவள வாயிதழ் திறந்தே
யழுதனர் முகம்மது நபியு
முலகமும் விசும்பு நிறைதரப் பொருந்து
முடையவன் சத்தமுண்டான
திலகிய கமல முகமலர் சபாவுக்
கிறஹ்மத்துண் டாகவென் றிசைந்தே.

(ப-ரை.) மலர்தரும் - சபாநாயகியவர்கள் மலர்ச்சியைத் தராநிற்கும், கரத்தால் - தமதுகையினால், ஏந்தி- மெல்லத்தாங்கி, மடியில் - மடியின்கண், வைத்து - பதனமாகவைத்து, இனிது - சந்தோஷித்து, இருக்கும் அந்நேரம் - இராநிற்கு மந்த நேரத்திலே, முகம்மதுநபியும் - முகம்மதுஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்கள், பவளம்-பவளநிறம், அலர்தரும் - விரிந்திராநிற்கும், வாய் இதழ் - வாயின துதடுகளை, திறந்து - நீக்குதல்செய்து, அழுதனர் - கசிதலாயினார்கள், உலகமும் - பூலோகத்திலும், விசும்பும் - வானலோகத்திலும், நிறைதர - தமது தத்துவத்திற் குறைவிலாது சமமாய், பொருந்தும் - அமர்ந்

திராநிற்கும், உடையவன் - அல்லா ஜல்லஷான ஹூத்த ஆலாவினது, இறஹ்மத்து - கிருபை, உண்டாகஎன்று - முகம்மதவர்களின்பேரி லுண் டாவதாகவென்று, சத்தம் - அசரீரியாகிய வோ ரிசையானது, இலகிய - பிரகாசியாநின்ற, கமல மலர் - தாமரைமலர்போலும், முகம்-முகத்தினை யுடைய, சபாவுக்கு - சபாநாயகியவர்களின் செ விக்கு, இசைந்து - பொருந்தி, உண்டானது - கேட்டது, எ-று.

(போ-ரை.) சபாநாயகி யவ்ர்கள் மலர்ச்சியைத்தராநிற்கும் தமது கையினுல் மெல்லத் தாங்கி மடியின்கண் பதனமாக வைத்துச் சந்தோஷித்திராநிற்கு மந்தநேரத்திலே முகம்மதுஸல்லல்லாஹு அலை ஹிவஸல்லம் ஆண்டவரகர்கள் பவளநிறம் விரிந் திராநிற்கும் வாயின துதடுகளை நீக்குதல்செ ய்து கசிதலாயினர்கள். பூலோகத்திலும் வான லோகத்திலும் தமது தத்துவத்திற் குறை விலாது சமமாய் அமர்ந்திராநிற்கும் அல்லா ஜல்லஷான ஹூத்த ஆலாவினது கிருபை முகம் மது அவர்களின்பேரி லுண்டாவதாகவென்று அசரீரியாகிய வோரிசையானது பிரகாசியா நிற்குந் தாமரைமலர்போலு முகத்தினையுடைய சபாநாயகியவர்களின் செவிக்குப் பொருந்திக் கேட்டதென்பதாம்.

ஏந்தியே திறந்தே என்னு மேகாரங்கள் இசைநிறை. இனிதிருக் கும்என்புழி இனிதெடுத்தென்றற் குரைத்தாங்குரைக்க. பவளவாய் என்புழிப் பவளம்போலு நிறத்தினையுடைய வாய் எனவிரிக்க. நபி பெருமானு ரவர்கள் தமதுள்ளத்துற்ற ஓரரிய கருத்தினுனே அழு தமையான் கடவுள் அக்குறிப்பறிந்து தன்னிடத்தவாம் மங்களமொழி யோதுகவென ஜிபுறயீ லவர்கட்குரைப்ப வவரங்ஙனமோதிய சத்தத்

தைச் சபாநாயகி கேட்டார்களென்பது கருத்து. இனி நபிநாயகந் தம்பினார்கள் அதற்கு அவ்வாறேத சபாகேட்டார்களென்பதூஉம் வேதாகமம்.

இக்கருத்துகளை யறியாத போலிவித்வான்கள் முதனூலோடு முரணித் தங்கருத்துக் கிலக்காய்ச் சபாவுக்கிறஹ்மத்துண்டாக எனச் செய்யுட்கிடந்தவாறே உரைகூறி யிடர்ப்படுவர். இது முதலுரையார்க்கு முடன்பாடு.

அணுவினும் மலையினும் தனது தத்துவம் ஒரேதன்மைத்தனவாய்ப்பொருந்தி விளங்கு மகத்துவமுடைய கடவுளென்பதுதோன்ற "உலகமும்விசும்புநிறைதரப்பொருந்துமுடையவன்" என்றார். ஈண்டு விசும்பு என்பது வானத்தின்பொருட்டாய்அங்ஙனம் மிக்க வன்மையினாற்றலானே விளங்கும் அருசினையும், உலகம்என்பது புவியின்பொருட்டாய் அங்ஙனம் எளிதினாற்றலானே விளங்கும் அணுவினையுங் குறித்துநின்றன. ஆகவே வஸ்துக்களில் அரியனபோலும் எளியனபோலும் விளங்குந்தன்மை மனுஷீகத்தினும் தெய்வீகத்தினுமன்றிக் கடவுளிடத் தில்லென்பதறிக. இது வேதவுடன்பாடாதல்பற்றி ஆசிரிய ரங்ஙனங்கூறினர்.

இக்கருத்தறியாது உலகமும் விசும்பு நிறைதரப் பொருந்தும் உடையவன் என்றற்கு "ஈண்டியாங்கூறியதேமுடிபன்று" என நழுகவிடுவர் முதலுரையார். இவ்விடத்தும் தமது அறிவிற் கிலக்காய்ச் செய்யுளைத்திருத்தி ஓர் முடிபு கூறாதுபோதல் இவர தியற்கைக்கு முரணாயினும்,

"குணநாடிக் குற்றமு நாடி அவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல்".

என்ற வள்ளுவர்க் கிலக்காய்ப் பொறுத்தருள்க.

இறஹ்மத் துண்டாக வென்பதை முகம்மதோடுகூட்டுக. இறஹ்மத்தென்பது தமிழியல். ஏற்றேகார மீற்றசை. பிறவருவனவெல்லா முய்த்துணர்க.

(103) சத்தமுண் டாகிக் கேட்டவப் பொழுதே
சபாவெனு மடமயி றனக்குப்

பத்திவிட் டொளிரு றூமிராச் சியத்துப்
பதியின்மா ளிகையெலாந் தெரிந்து
மித்திர னெழுந்த குணதிசை தொடுத்து
வீழ்தரு குடதிசை தொடுத்துச்
சித்திரம் பெறவே யிருவிழிக் கெதிரோ
தெரிதரச் சிறந்தன வன்றே.

(ப - ரை.) சத்தம் - அவ்வாறான அசரீரித்தொனியானது, உண்டாகி - தொனித்து, தெரிதர-விளப்பமாக, கேட்டஅப்பொழுது - கேட்டவந்தநேரத்திலே, சபாஎனும் மடமயில் தனக்கு - **சபா**வெனு மிளமானவர்களின், இருவிழிக்கு - உபயநோக்கங்களுக்கு, எதிர் - முன்னிலையாக, மித்திரன்-சூரியன், எழுந்த - உதயஞ்செய்யும், குணதிசை - கீழ்த்திசையை, தொடுத்து - அணிந்து, வீழ்தரும் - அதுஅஸ்தமாகும், குடதிசை - மேற்குத்திசையை, தொடுத்து-செலுத்தி, சித்திரம்பெற-பேரழகுவிளங்க, பத்திவிட்டு - நிரையாகக்கதிர்களைத்தாக்கி, ஒளிர்- பிரகாசிக்கும், உறூமிராச்சியத்து - **றூம்**தேசங்களுக்கு, பதியின் - தலைநகரமாகிய **கிஸ்தன்தனிய்யா**வினது, மாளிகை எலாம் - கொலுமண்டபமுதலியனவெல்லாம், தெரிந்து-தெரியாநின்று, சிறந்தன-சிறப்படைந்தனவாம், எ-று.

(போ-ரை.) அவ்வாறான அசரீரித்தொனியானது தொனித்து விளக்கமாகக் கேட்ட வந்தநேரத்திலே **சபா**வெனு மிளமானவர்களின் உபயநோக்கங்களுக்கு முன்னிலையாகச் சூரியன் உதயஞ்செய்யும் கீழ்த்திசையை யணிந்து அது அஸ்தமாகும் மேற்குத்திசையைச் செலுத்திப் பேரழகு விள

ங்க நிரையாகக் கதிர்களைத்தாக்கிப் பிரகாசிக்கும் ரூம்தேசங்களுக்குத் தலைநகரமாகிய கீஸ்தன் தனிய்யாவினது கொலுமண்டப முதலியனவெல்லாம் தெரியாநின்று சிறப்படைந்தனவாம் என்பதாம்.

பொழுதே என்னுமேகாரம் தேற்றம். மடமயில் ஆகுபெயர் தனக்கு என்னும் நான்கனுருபு ஐந்தன்பொருளிடத்துவந்தது. பத்திவிட்டொளிர்என்பதை மாளிகையோடுங்கூட்டுக. இராச்சியத்தின், பதியின் என்புழி வந்தஇன்கள் சாரியை. எழுந்த என்பது காலமயக்கம். குணதிசை தொடுத்து குடதிசைதொடுத்து என்பன விரண்டாம் வேற்றுமைத் தொகை. ஈண்டுக் குணதிசையை உதயம்பற்றிப் பிரகாசத்திற்கும் குடதிசையை அஸ்தம்பற்றி இருளுக்கும் குறிப்பினுனே உவமங்கூறினர். ஆகவே குணதிசைபோலும் பிரகாசத்தை யணிந்தும் குடதிசைபோலு மிருளை நீக்கியும் விளங்கு மாளிகையென்பது கருத்து. அது,

"பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கி
முன்னை மரபிற் கூறுங் காலைத்
துணிவொடு வரூஉந் துணிவினோர் கொளினே".

என்றவிதியானுமறிக.

நபிபெருமானரவர்களை மடியிற்கொண்டதுபற்றி அசரீரிவார்த்தைகேட்கவும் அவரது மார்க்கம் நிலைத்து விளங்கும் ஆசனம் இதுவெனக் காணவுமான தகுதிக் குடையராயினர் சபாநாயகி என்றறிக. இங்ஙனமாயின் அவர் மடியிற்கொண்டபொழுது நபிபெருமானர் அழுவானேன்? எனின், நன்று கடாயினுய். அசுத்தபாசங்களை மாய்த்து ஒளிவினு லமர்ந்த தேவர்கள்வசம் தாம் ஒப்புவிக்கப்பட்டு மலக்கூத்து எனும் வானசாரிபுரிந்து அசுத்தபாசங்களோடு கலந்து மண்ணுதியா லமர்ந்த மனுகரத்துற்ற வப்பொழுது மனுஷீகத்துவம் இத்தன்மைத்தாமிழிபினதெனும் அறிவுதோன்ற அதுநீங்கி யாவற்றினும் உயர்வான் வேண்டுமெனத் தமது பெருமானை நோக்கி மன்ருடு மழுகை யழுதார். அதுபற்றியே கடவு ளங்ஙனம் நன்மாராயங் கூறியவா றென்றறிக.

**கிஸ்தன்தனிய்யா** வென்பது எமது **தௌலத் சுல்தான் அப்துல் ஹமீதுகான்** தற்சமயம் நிலேத்து விளங்கு மரிய நகரா. இம்மாநக ரிப்பொழுது **இஸ்தம்பூ**லென்றும் பெயர் வழங்கப்படுகிறது.

இனி, மித்திரனெழுந்த குணதிசை தொடுத்து வீழ்தருகுடதிசை வரைக்கும் எனத் தமக் கியைந்தவாறு திருத்திச் "சூரியனுதிக்குங் கீழ்த்திசை (மஷ்றிகென்றபடி) தொடங்கி, அச்சூரியன் வீழாநின்ற மேற்றிசை (மகுறிபென்றபடி) வரையிலும்" எனப் பொருள்வரைந்து வாளாப்போவர் முதலுளாயார். **மஷ்றிது** தொடுத்து **மதுறிபு**வரையிலும் ஒருங்கே தோன்றியதுஎனுங் கருத் தாசிரியர்க் குளதேல்றாமிராச்சியத்தின் பதியின் மாளிகையெலாம் தெரிந்து எனவிதந்தும் ஓதல் வேண்டா. சிறப்புபற்றிவேண்டுமெனின், இருவிழிக் கெதிரோ என்றமையான் **மஷ்றிது மதுறிபு**அடங்க இருவிழிக்கு முன்னிலேயாதல் சூனியமாதல்பற்றி ஆசிரியர்க் கது கருத்தாகாதெனமறுக்க.

அன்று அசைநிலே. ஈற்றேகார மீற்றசை. பிறவருவனவெல்லா முய்த்துணர்க.

(104) வரியளி குடைந்து தண்ணறு வருந்து
மலர்ப்புய னப்துல்முத் தலிபு
கருதிய வரங்கேட் டிருந்துநெஞ் சுருகுங்
காலேயிற் கருபத்துல் லாவி
னிரைநிரை செறிந்த புத்துக ளனேத்து
நெட்டுயிர்ப் பொடுகலேந் தலேந்து
விரைவினி லோடிக் காவத வழிக்கு
வேறுவே றுய்க்கிடந் ததுவே.

இனிஆமினுவினது தனிமையைக்குறித்து **அப்துல் மூத்தலிபு கதுபத்துல்லாவில்** வரம்வேண்டிநின்றதாக முன்னர்க்கூறி நிறுத்தினமையான் ஈண்டு அது தொடுத்துச் சொல்லுவான் றெடங்கினாராசிரியர்.

(ப - ை.) வரி - இரேகைகளேயுடைய, அளி - வண்டினங்கள், குடைந்து - இடம்படுத்தி, தண்-குளிர்ந்த,

நறு - தேனை, அருந்தும்-குடிக்கும், மலர் - மலர் மாலைகணிறைந்த, புயன் - ஒப்பற்ற புயவலியின ராகிய, அப்துல்முத்தலிபு - அப்துல்முத்தலிபான வர்கள், கருதிய - தாம்நாடிய, வரம்-விஷயத்தை நிறைவேற்றும்படி, கேட்டுஇருந்து-வேண்டுதல் செய்துநின்று, நெஞ்சுஉருகும் - மனங்கரையா நிற்கும், காலையில் - நேரத்திலே, கஃபத்துல்லா வில்-அக்கதுபாவென்கிற சந்நிதியில், நிரைநிரை யாக - பத்திபத்தியாக, செறிந்த - நிறைந்துற்ற, புத்துகளனைத்தும்-விக்கிரகங்களெல்லாம், நெட் டுயிர்ப்பொடு - பெருமூச்செறிந்து, கலைந்து- தமதுஆசனநிலைகுலைந்து, அலைந்து - வருந்தி, காவதம்வழிக்கு-காததூரத்துக்கு, விரைவினில் ஓடி-வேகமாக ஓடுதலைச்செய்து, வேறுவேறாய்- வெவ்வேறாக, கிடந்தது - வீழ்ந்தது, எ-று.

(போ-ரை.) இரேகைகளையுடைய வண்டினங்கள் இடம் படுத்திக் குளிர்ந்த தேனைக்குடிக்கும் மலர் மாலைக ணிறைந்த வொப்பற்ற புயவலியின ராகிய அப்துல்முத்தலிபானவர்கள் தாம் நாடிய விஷயத்தை நிறைவேற்றும்படி வேண்டுதல் செய்து நின்று மனங்கரையாநிற்குநேரத்திலே அக்கதுபாவென்கிற சந்நிதியில் பத்திபத்தியாக நிறைந்துற்ற விக்கிரகங்களெல்லாம் பெருமூச் செறிந்து தமது ஆசனநிலைகுலைந்து வருந்திக் காததூரத்துக்கு வேகமாக ஓடுதலைச்செய்து வெவ்வேறாக வீழ்ந்தது என்பதாம்.

மலர் என்பது ஆகுபெயராய் அதனுனியன்ற மாலையை யுணர்த்தி நின்றது. மலர்புயன் என்புழி முன்னுரைத்தாங் குரைக்க. விக்கிர கத்தி னிழிபினுனே கிடந்தது என ஒருமையாற் கூறினர். ஏகார மீற்றசை.

(105) பானலங் கடந்து சேலெனப் பிறழ்ந்து
பரந்துசெவ் வரிக்கொடி யோடி
மான்மருள் விழியா ராமினு விருந்த
வளமனைத் திசையினை நோக்கி
நானிலம் புகலுங் கருபத்துல் லாவி
னாலுமூ லையுமொரு நெறியாய்த்
தூநறை கமழ வொளிதிகழ் தரவே
சுசூதுசெய் தெழுந்தன வன்றே.

(ப-ரை.) பானல்அம் - அழகிய கருங்குவளைமலரை, கடந்து - தமக் குவமேயமாய்ப்படுத்தி, சேல்என - கயல்மீன்போல, பிறழ்ந்து - துடித்து, செவ்வரி- செவ்விய விரேகைகளின், கொடிஓடி-கொடிகள் வளர்ந்து, பரந்து - பரவுதலாகிய, மான் - மானினது விழிபோலும், மருள் - வெருளாநிற்கும், விழியார் - விழியினையுடையாராகிய, ஆமினு- ஆமினுஅவர்கள், இருந்த-பிரசவித்திருந்த, வளம் மனை - மாட்சிமைதங்கிய வீட்டினது, திசையினை - திசையை, நோக்கி - எதிர்முகமாக்கி, நால்நிலம் - நான்குவகைப்படும் நிலமும், புகலும் - புகழ்ந்துபேசும், கருபத்துல்லாவின் - கதுபாவினது, நாலுமூலையும் - சதுர்கோணங்களும், ஒருநெறியாய் - ஒருவழியாய், தூ - தூய்தாகிய, நறைகமழ் - நறுநாற்றம் பரிமளிக்கவும், ஒளி - பிரகாசம், திகழ்தர - ஜொலிக்கவும், சுசூதுசெய்து - சாட்டாங்கஞ்செய்து, எழுந்தன - முன்னிருந்தபடியேநின்றன, எ-று.

(போ-ரை.) அழகிய கருங்குவளைமலரைத் தமக் குவமேயமாய்ப்படுத்திக்கயல்மீன்போலத் துடித்துச்செவ்விய விரேகைகளின் கொடிகள்வளர்ந்து பரவு

தலாகியமானினது விழிபோலும் வெருளாநிற்கும் விழியிணையுடையாராகிய ஆமினாஅவர்கள் பிரசவித்திருந்த மாட்சிமைதங்கிய வீட்டினது திகையை யெதிர்முகமாக்கி நான்கு வகைப்படும் நிலமும் புகழ்ந்துபேசும் கதுபாவினது சதுர்கோணங்களும் ஒருவழியாய்த் தூய்தாகிய நறுநாற்றம் பரிமளிக்கவும் பிரகாசம் ஜொலிக்கவும் சாட்டாங்கஞ்செய்து முன்னிருந்தபடியே நின்றன, வென்பதாம்.

பானல் ஆகுபெயர். மான் மருள் என்புழிச் சினைவினையாகிய மருள்தலை முதன்மே லேற்றப்பட்டது. விழி, மானலங்கடந்ததென்றமையான் அதை உவமேயப்பொருட்டாய்க்கூறினும். ஆமினாமனை நோக்கிக் கதுபா சாட்டாங்கஞ்செய்தகாரணம் இனைத்தென்பதை உய்த்துணர்க.

"நடுவ ணைந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்தியப் பண்பே".

என்றவிதிபற்றி நானிலம் என்றார்; அவையாவன,

"மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"

என்றவிதியானறிக.

(106) இறையவ னேவ விண்ணவர் கரத்தா
லியற்றிய மணிமதிட் கருபா
மறைபடா தெவர்க்குங் கேட்பன வாக
வாய்திறந் தோதுவ போன்று

குறைபடா வடிவும் பெருமையும் பெற்ற
கொற்றவ னென்றனை யின்றே
நிறைதரப் புனித மாக்கினு னென்ன
நிகழ்த்திய தொருமொழி யன்றே.

(ப-ை.) இறையவன் - அல்லாஜல்லாஷான ஹூத்தஆலா வானவன், ஏவ - உத்தரவுசெய்ய, விண்ணவர் - மலக்குகள், கரத்தால் - கையினுல், இயற்றிய - செய்த, மணி - நன்மைபயக்கும், மதிள் - சுவர் களையுடைய, சுகுபா - கதுபாவானது, வாய் - உதடுகளை, திறந்து - நீக்குதலைச்செய்து, ஓதுவ போன்று - பேசும் இயற்கையினையுடைய வஸ் துக்களைப்போன்று, எவர்க்கும் - எத்தன்மைத் தவர்க்கும், மறைபடாது - மறைவின்றி, கேட் பனவாக - அறியத்தக்கனவாக, குறைபடா-எவ் வித அறிவுக்காயினும் அடங்கியறியப்படுங் குற் றமில்லாத, வடிவும் - தனக்குத்தானு யறியப் பட் டடங்கு முருவத்தையும், பெருமையும் - இறுமாப்பினையும், பெற்ற - உடைத்தாகிய, கொற்றவன் - அரசனுனவன், என்றனை-என்னை, இன்று - இன்றையதினம், நிறைதர-பூரணமாக, புனிதமாக்கினுன்என - பரிசுத்தமாக்கினுனெ ன்று, ஒருமொழி - ஒப்பற்ற வார்த்தைகளை, நிகழ்த்தியது - சொல்லிற்று, எ-று.

(போ-ை.) அல்லாஜல்லஷானஹூத்தஆலாவானவன் உத்த ரவுசெய்ய மலக்குகள்கையினுல் செய்த நன் மைபயக்கும் சுவர்களையுடைய கதுபாவான துதடுகளைநீக்குதலைச்செய்து பேசும் இயற்கை யினையுடைய வஸ்துக்களைப்போன்று எத்தன் மைத்தவர்க்கும் மறைவின்றி யறியத்தக்கன

வாக எவ்வித வறிவுக்காயினும் அடங்கி யறி யப்படும் குற்றமில்லாத தனக்குத்தானு யறி யப்பட் டடங்கு முருவத்தையும் இறுமாப் பினையு முடைத்தாகிய வரசனுனவன் என்னை யின்மையதினம் பூரணமாகப் பரிசுத்தமாக் கினுனென்று ஒப்பற்ற வார்த்தைகளைச் சொல் லிற்று, என்பதாம்.

ஏவ என்பது ஈண்டு யாவற்றும் சதா பிரதக்கணஞ் செய்யத் தக்கவும் சாட்டாங்கஞ் செய்யத்தக்கவும் அசுத்தபாசங்களை யறுத் துத் தூய்மைசெய்யத்தக்கவும் பிறவும் பயக்கத்தக்கவுமான என்னு டைய வீடெனும் நாமத்தினதாய் ஓர் பீட மியற்றுக. என்ற உத்தர வைக் குறித்துநின்றது.

மலக்குகள் நினைத்தவாறு உருப்படைக்குந் தன்மைத்தவராத லின் அங்ஙனமாங் கரத்தாலியற்றிலர். அவர்க் குறுங் கரத்தாலியற் றினர் என்பது தோன்ற "விண்ணவர் கரத்தாலியற்றிய" என்ருர். கருபாவினது சுவருகள் இத்தன்மைத்தென்பதுதோன்ற "மணி மதிள்" என்ருர்.

"முத்துகளையுடைய சுவர்" என்பர் முதலுரையார். அங்ஙனம் உண்மை யன்மையான் அது போலியுரையாமென மறுக்க.

மறைபடா தெவர்க்குங் கேட்பனவாக என்றமையான் தெற்றெ ன வுணருந் திறமிலாருஞ் செவியுணர்விலாரும் எவ்வகைப்பட்ட பா டையாரும் விளங்கு மாற்றலுடையதாய்ச் சிறந்து பேசிற்றென்பது கருத்தாயிற்று. இத்தகுதிபற்றியே அதை ஈண்டும் "ஒருமொழி" என்ருர், அறிக.

இக்கருத்தறியாது ஒரு என்பதை எண்ணுப்பெயராய்க்கொண்டு "ஒருசொல்" என உரைகூறுவாரு முளர்; முதலுரைமாரு மது.

வாய்திறந்து ஓதுவபோன்று என்றமையான் தொடராயலற்ருது எடுத்தும், படுத்தும், விடுத்தும், தொடுத்தும் முறைவழாது ஓதிற் றென்றறிக. ஓதுவது என்புழித் து விகுதி கெட்டுநின்றது. கட்பு லன் இருநான்கேதுவானன்றிப் பயவாதென்பதூஉம் அவ் வேதுபற்

றிப் பயந்தடங்கும் பொருளாற்றலினுனே அரிய நுண்ணிய பொருளை மனப்புலனறியு மென்பதூஉம் வெளி. ஆகவே இத்தன்மைத்தன்வாய் இழிந்த அறிவிற்குப் புலப்பாடின்றித் தூயதன்மைத்தவனுய்க் கிடப்பன் கடவுள் என்பதுதோன்ற "குறைபடா" என்றும், அவனது வடிவம் மானுஷீகம் தெய்வீகம் இவற்றிற்குப் புலப்படாத காரணம்பற்றி இன்னின்ன தகுதிக்குரியனு யிருத்தன் மரபென மானுஷீக தெய்வீகங்கட்கேற்ப வொருவாறு நிஷ்கரித்தன் முறையாமெனக்கருதி வேதநூலார் குறிப்பிட்டவிதமாய் நம்மனோர் உட்கொண்டு பூசாதிமுதலியன புரிந்துவருவேமாயினும் கடவுளது அரும்பேற்றிற்குரிய தன்மையவாய்த் தன்னிற்றுனே, தனக்குத்தானுய்த், தன்னுற்றன்னைக் காணப்பட் டடங்கு முருவ மவனுக் குளதென்பது தோன்ற "வடிவும்" என்றும், இத்தகுதிபற்றிய பெருமையுடையான் அவனே ஒழிய இல்லென்பதுதோன்ற "பெருமையும்" என்றுங் கூறினுர்; உய்த்துணர்க

இனி இக்கருத்தறியாது வடிவும் என்புழி அழகும் என உரைகூறி அது தனக்கே பொருந்தாது "அரூபியாகிய கடவுண்மே லழகையேற்றிக் கூறுதல் பொருந்துமோ" எனக் கடாநிகழ்த்தி "குணமழகு குரலழகு என்று அருவப்பொருட்குக் கூறுதலு முளதாகலின் பொருந்து மென்க" என உதாரணங்காட்டியும் போந்தார் முதலுரையார். இவர் தேவர்களும் ஜின்னுதிகளும் அரூபிகளாகலின் கடவுளை அரூபி எனலும் பொருந்தாதென்பது அறிந்திலர்போலும். கடவுளை ரூபி என்பது நம்மனோர்போலு மாதல்பற்றிப் பொருந்தாதென்பதுபோலத் தேவர் முதலாயினுர் அரூபிகளாகலானும் ஆங்ஙனங் கூறலும் பொருந்தாதென்பவேதநூலாராகலின் அழகெனல் கடவுண்மேலே பொருந்துமென வவரோதிய காரணத்தை மறுத்து அக்கொள்கையை யொழிக.

இதுவேயுமன்றி "ஈண்டு அழகென்றது ஜமாலையும் பெருமையென்றது ஜலாலையும் என்றறிக" என்பர். ஜலால், ஜமாலென்பன வேதபாடையாகலின் அங்ஙனம் தலையிடல் தமதாசிரியர்க்கு முடன்பா டன்றென்பதைத் தெற்றென விளக்கினுர்.

அன்றியும் "இதுபற்றியன்றே ஜமால் ஜலாலென்னு மாசிரியர், வடிவும் பெருமையுமென்றுர்" என்பர்; இதில் ஜமால்

ஜலாலென் ரேுதவேண்டிய ஆசிரியர் வடிவும் பெருமையு மென்ருர், என்பது கருத்தாயினுந் தெற்றெனப் பொருண் முடிபுருமைபற்றி அக்கூற்று இழிபாமெனமறுக்க.

இன்று புனிதமாக்கிஞனென்னது இன்று நிறைதரப் புனிதமாக் கிஞன் என்றமையான் **கதுபா** யாண்டும் புனிதமுடையதாயினும் இற் றையில் புனிதத்தால் முடிவுற்றதென்பதூஉம் **நுபுவத்து றிஸாலத்து** முடிவுற்றதென்பதூஉம் கருத்தாயின. அன்று அசைநிலை. ஏகார மீற்றசை. இன்னும் விரிக்கிற்பல்கு மாகலின் ஒருவாறு நிறுத்தினும். உய்த்துணர்க.

(107) இரவினிற் றனித்தங் கிருந்தகா லையினி
லியற்றிய புத்துக ளனைத்தும்
பரவியே சிதறக் கண்டுமங் ககுபாப்
பண்புறச் சுஜூதுசெய் தியல்பா
விரைவினின் மொழிந்த வார்த்தையுங் கேட்டு
வெருவியே அப்துல்முத் தலிபு
முருகுகொப் புளிக்கு மாமிகு மனையின்
முழுமணி வாயில்வந் தடுத்தார்.

(ப-ரை.) அப்துல்முத்தலிபு - **அப்துல்முத்தலிபா**னவர்கள், இரவினில்-இராக்காலத்தில், தனித்து-தனித்த வராக, அங்குஇருந்தகாலையில் - அக்**கதுபா**வில் வரந்தாங்கி யிருந்தநேரத்திலே, இயற்றிய - அங் ஙனம் ஸ்தாபிக்கப்பட்டிருந்த, புத்துகள்அனைத் தும்-விக்கிரகங்களெல்லாம், பரவி-பரவுதலாய், சிதற - சிதையுண்டுபோக, கண்டும்-பார்த்தும், அம்-அழகிய, ககுபா - **கதுபத்துல்லா**வானது, பண்பு உற - தகுதிபொருந்த, சுஜூதுசெய்து - சாட்டாங்கஞ்செய்து, இயல்பா - ஒழுங்காக, மொழிந்தவார்த்தையும் - சொல்லிய வார்த்தை களையும், கேட்டு - கேள்வியுற்றும், வெருவி - பயந்து, முருகு - வாசனை, கொப்புளிக்கும் -

குதிக்கும், ஆமினு - ஆமினு அவர்களின், முழு மணி-துளையாதமணிபோலும், மனையின்வாயில்-வீட்டுவாசலைநாடி, விரைவினில்-அதிவேகமாய், வந்துஅடுத்தார் - வந்துசேர்ந்தார்கள், எ-று.

(பொ-ரை.) அப்துல் மூத்தலி பானவர்கள் இராக்காலத்தில் தனித்தவராக அக்கதுபாவில் வரந்தாங்கியிருந்த நேரத்திலே அங்ஙனம் ஸ்தாபிக்கப்பட்டிருந்த விக்கிரகங்களெல்லாம் பரவுதலாய்ச் சிதையுண்டுபோகப்பார்த்தும் அழகிய கதுபத்துல்லாவானது தகுதிபொருந்த சாட்டாங்கஞ் செய்து ஒழுங்காகச் சொல்லிய வார்த்தைகளையுங் கேள்வியுற்றும் பயந்து வாசனைகுதிக்கும் ஆமினுஅவர்களின் துளையாத மணிபோலும் வீட்டுவாசலைநாடி அதிவேகமாய் வந்துசேர்ந்தார்கள் என்பதாம்.

பரவியே வெருவியே என்னு மேகாரங்கள் இசைநிறை. கண்டும் என்ற உம்மையான் கேட்டு என்புழியும் உம்மை பெறப்பட்டது. மணி மனை யுவமத்தொகை. ஈண்டு முழுமணி என்பது ஆமினுமனை நபிபெருமானுரவர்களின் பிரபையின் சொலிப்பினுனே மணிபோலுமுருவாய் வாயலிதுவெனப்படாது மயங்குமாற்றலுடைத்தாய் விளங்கினதென்பது கருத்தாயிற்று.

(108) தரையினிற் பரந்த குபிரிருட் குலமுஞ்
சாற்றிய கலியிருட் குலமும்
வரைவிலா தொடுங்க முகம்மது நபியிம்
மாநிலத் துதித்தன ரொன்றே
கரையிலா வுவகை யானந்த வெள்ளக்
கடலிடைக் குளித்துறக் களித்து
விரைவினிற் றிமிரக் கடற்பகை துறந்து
வெய்யவன் கதிர்கள்விட் டெழுந்தான்.

(ப-ரை.) தரையினில் - பூமியின்கண், பரந்த - பரவிய, குபிர்இருள் - அஞ்ஞானமயக்கத்தின், குலமும்-கூட்டமும், சாற்றிய-வேதாகமத்திற்சொல்லிய, கலி - கடையுகத்தினது, இருள் - மயக்கத்தின், குலமும் - கூட்டமும், வரைவுஇலாது - அள விலாது, ஒடுங்க - அடங்கும்படியாக, முகம் மதுநபி- முகம்மதுஸல்லல்லாஹு-அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்கள், மா - பெருமைதங்கிய, நிலத் தில்-மக்கத்தின்கண், உதித்தனர்என்று-உதயஞ் செய்தார்களென்று, வெய்யவன்-சூரியனானவன், கரைஇலா - கணிப்பிலாதுபெருகிய, உவகை ஆனந்தம் - சந்தோஷமாகியபேரானந்தத்தால், வெள்ளம் - பிரவாகித்த, கடல்-சமுத்திரத்தில், குளித்து - மூழ்கி, களித்து-மதத்து, பகைஉற-உலகத்திற்குப் பகையுண்டாக, கடல்திமிரம் - நிறைந்தகடல்போலும்இருளை, துறந்து - நீக்கி, விரைவினில் - அதிவேகமாய், கதிர்கள்விட்டு - தமதுகிரணங்களைத் தாக்கி, எழுந்தான் - கீழ்த் திசைக்கடலின்கண் உதயமாயினான், எ-று.

(போ-ரை.) பூமியின்கண்பரவிய அஞ்ஞான மயக்கத்தின் கூட்டமும் வேதாகமத்திற்சொல்லிய கடை யுகத்தினது மயக்கத்தின் கூட்டமும் அளவிலா தடங்கும்படியாக முகம்மதுஸல்லல்லாஹு-அலைஹிவஸல்லம்ஆண்டவரவர்கள் பெருமைதங்கிய மக்கத்தின்கண் உதயஞ்செய்தார்களென்று சூ ரியனானவன் கணிப்பிலாது பெருகிய சந்தோ ஷமாகி பேரானந்தத்தாற் பிரவாகித்த சமுத் திரத்தின்மூழ்கி மதத்து உலகத்திற்குப்பகை யுண்டாக நிறைந்த கடல்போலு மிருளைநீக்கி

அதிவேகமாய்த் தமது கிரணங்களைத் தாக்கிக் கீழ்த்திசைக் கடலின்கண் உதயமாயினுன் என்பதாம்.

தனை என்பது ஈண்டு ஆகுபெயராய் மாக்களை யுணர்த்திநின்றது. குபிரொன்பதூஉமது. கடையுகம் உளவாக வேதவளவையான் யாவரும் விளங்குவரென்பதுபற்றிச் "சாற்றியகலி" என்றூர்.

இனி, அதைச் "சொல்லியவறுமை" என்பர் முதலுரையார். வறுமையைப்பற்றி இப்படலத்தில் யாங்ஙனஞ் சொல்லினுரோ ஆசிரியர் ; அங்ஙனமின்மையா லது பயனில் கூற்றுமென மறுக்க.

அஞ்ஞானமும் சாற்றிய கலியும் பலவகைத்தாகலின் குலமெனக் கூறினுர். அவற்றின் தேய்வு இத்தன்மைத்தனவாம் என்பது குறிப்பின்மைபற்றி வரைவிலா எனக்கூறினுர். மாநிலம் என்றமையால் மக்கமென்பதாயிற்று.

இனி "பெரியபூமி" என்பர் முதலுரையார். நபிகளுயகம் உதயஞ்செய்ததலம் இத்தன்மைத்ததுஎன்பான் மாநிலம் என்ருரல்லது பூமிஎனுங் கருத்தினரல்ல ராசிரியரொன்க.

என்றே எனு மேகாரம் இசைநிறை. கடல்திமிரம்என்பது திமிரக்கடலென பிறழ்ந்துநின்றது. உலகத்துக் கிருள் பகைஎன்பது வெளி. பகைஎன்றமையான் உலகம் அவாய்நிலையால் வந்தது. அது ஆகுபெயராய் உயிர்மேனின்றது. பிறவருவனவெல்லா மமைத்துக்கொள்க.

(109) விடிந்தவப் பொழுதி லப்துல்முத் தலிபு
விரைவினி லாமிஞ வென்னு
மடந்தையைக் கூவி வருகவென் றுரைப்ப
மடமயிற் பெடையென வெழுந்து
நடந்தெதிர் வரக்கண் டம்மநின் னுதலி
னலங்கிளர் பேரொளி யொன்றுண்
டிடந்திகழ்ந் திலங்கக் காண்கிலே னென்ன
வீன்றனன் மகவென விசைத்தார்.

(ப-ரை.) விடிந்தஅ பொழுதில் - சூரியனுதயமாகிய அவ் வேளையில், அப்துல்முத்தலிபு - அப்துல்முத்தலி பவர்கள், ஆமினுஎன்னுமடந்தையை - ஆமினு என்றுசொல்லும்பெண்ணினை, கூவி-கூப்பிட்டு, விரைவினில் - சீக்கிரத்தில், வருகஎன்று - என் னிடத்து வருவாயாகவென்று, உரைப்ப - சொ ல்ல, மடமயில் - இளமயிலாகிய ஆமினுஅவர்கள் கேட்டு, பெடைஎன - பெண்அன்னம்போன்று, எழுந்து - எழாநின்று, நடந்து - நடத்தலைச்செ ய்து, எதிர்வர - முன்னோக்கிவர, கண்டு - அப் துல்முத்தலிபவர்கள்நோக்கி, அம்ம - அம்மா!, நின் - உன்னுடைய, நுதலில் - நெற்றியின்கண், நலம்கிளர் - அழகுபிரகாசியாநின்ற, பேர்ஒளி - பெரியஒளியானது, ஒன்றுஉண்டு - ஒன்றிருந் தது, இடம் - இப்போது அவ்வொளி யவ்விடத் தில், திகழ்ந்து - பிரகாசித்து, இலங்க - ஒளி செய்ய, காண்கிலேன் - நான்பார்க்கவில்லை, என்ன - என்னையோவென்றுசொல்ல, மக - அதைமகவாக, ஈன்றனன்என - பெற்றேனெ ன்று, இசைத்தார் - சொன்னார்கள், எ-று.

(போ-ரை.) சூரிய னுதயமாகிய வவ்வேளையில் அப்துல் முத்தலிபவர்கள் ஆமினுஎன்றுசொல்லும் பெண் ணினைக் கூப்பிட்டு சீக்கிரத்தில் என்னிடத்து வருவாயாகவென்று சொல்ல, இளமயிலாகிய ஆமினுஅவர்கள் கேட்டுப் பெண்ணன்னம்போ ன் றெழாநின்று நடத்தலைச்செய்து முன்னோக் கிவர, அப்துல்முத்தலிபவர்கள் பார்த்து அம் மா! உன்னுடைய நெற்றியின்கண் அழகு பிர காசியாநின்ற பெரிய ஒளியானது ஒன்றிருந்

தது, இப்போ தவ்வொளி யவ்விடத்தில் பிரகாசித்து ஒளிசெய்ய நான்பார்க்கவில்லை என்னையோ வென்றுசொல்ல, அதை மகவாகப் பெற்றேனென்று சொல்லினார்கள் என்பதாம்.

ஆமினாவினது புடைபெயர்வுக்குப் பெடை உவமையாதல்பற்றி அன்னம் வருவிக்கப்பட்டது. அது,

"பேடையும் பெடையும் நாடி னென்றே"

என்றதனாலறிக. அஇடம் என்பது இடமென அகரச்சுட்டுத் தொக்குகின்றது. கிளர் வினைத்தொகை. மகவாக எனற்பாலது மகவெனத் தொக்குகின்றது. ஆகவே அவ்வொளியையே மகவாகப் பெற்றேனென்பதாயிற்று. பிறவருவனவெல்லா மமைத்துக்கொள்க.

(110) வஞ்சிமென் கொடியின் முகமலர்க் கவினு
மருங்கினில் விசித்தபட் டுடையுங்
கஞ்சமென் மலர்த்தா ணிலம்புடை பெயர்வுங்
கமழ்தரு மெய்யினிற் குறியும்
பிஞ்சுநன் னுதலுங் கண்டுளத் தடக்கிப்
பெற்றவா றென்கொலென் றெண்ணிக்
கொஞ்சுமென் மொழியீர் மதலையைக் கொணர்கென்
றுரைத்தனர் குளிர்மழைக் கொடையார்.

(ப - ரை.) மென் - மெல்லிய, வஞ்சிகொடியின் - வஞ்சிக்கொடிபோலுமிடையினையுடைய ஆமினாவினது, முகம்மலர் - முகத்தின்கண்மலர்தலாகிய, கவினும்-அழகையும், மருங்கினில்-இடையின்கண், விசித்த - உடுக்கப்பட்ட, பட்டுஉடையும் - பூம்பட்டாடையையும், கஞ்சம் - தாமரையினது, மென் - மென்மையான, மலர் - பூப்போலும், தாள் - பாதங்கள், நிலம்-பூமியில், புடைபெயர்வும் - புடைபெயர்தலையும், மெய் - மேனியில், கமழ்தரும் - பரிமளிக்கும், குறியும்-குறிப்பினை

யும், பிஞ்சு - இளம்பிறைபோலும், நல்-நன்மையாகிய, நுதலும் - நெற்றியையும், குளிர்மழை-குளிர்ந்தமழைமேகங்களைப்போலும், கொடையார் - தியாகஞ்செய்யும் அப்துல் மூத்தலிபவர்கள், கண்டு - நன்குமதித்து, பெற்றவாறு - பிள்ளையைப்பெற்றவழி, என்கொல்என்று - எவ்விதமென்று, எண்ணி-யோசித்து, உளத்துஅடக்கி-அவைகளின்சாராம்சங்களை வெளிக்கிடாது நெஞ்சத்துள்ளே வைத்துக்கொண்டு, கொஞ்சும் - கொஞ்சாநிற்கும், மென்மொழி - மெல்லியமொழியினையுடையஆமினா!, ஈர் - நெஞ்சங்களைவகிர்க்கும், மதலையை - உன்னுடையபிள்ளையை, கொணர்க என்றுஉரைத்தனர் - என்னிடத்திற் கொண்டுவருவாயாகவென்று சொன்னார்கள், எ-று.

(பொ-ரை.) மெல்லிய வஞ்சிக்கொடிபோலு மிடையினையுடைய ஆமினாவினது முகத்தின்கண் மலர்தலாகிய அழகையும் இடையின்கண் உடுக்கப்பட்ட பூம்பட்டாடையையும் தாமரையினது மென்மையான பூப்போலும் பாதங்கள் பூமியில் புடைபெயர்தலையும் மேனியில் பரிமளிக்குங் குறிப்பினையும் இளம்பிறைபோலும் நன்மையாகிய நெற்றியையும் குளிர்ந்த மழைமேகங்களைப்போலுந் தியாகஞ்செய்யும் அப்துல் மூத்தலிபு அவர்கள் நன்கு மதித்துப் பிள்ளையைப் பெற்றவழி யெவ்விதமென்று யோசித்து அவைகளின் சாராம்சங்களை வெளியிடாது நெஞ்சத்துள்ளே வைத்துக்கொண்டு கொஞ்சாநிற்கும் மெல்லியமொழியினையுடைய ஆமினா! நெஞ்சங்களை வகிர்க்கும்உன்னுடைய பிள்ளை

யை என்னிடத்திற் கொண்டுவருவாயாகவெ
ன்று சொன்னார்கள் என்பதாம்.

வஞ்சி கொடி உவமைநிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை. முகமலர் ஏழாவது தொக்கது. மலர் முதனிலைத்தொழிற்பெயர். ஈண்டு ஆகிய என்ற ஒருசொல் பெறப்பட்டது.

இனி, முகமலர் என்புழி முகமாகிய தாமரைமலர் என்று உரைகூறுவர் முதலுரையார். தாமரையை ஈண்டுப் பாதத்திற்குவமித்திருத்தலால் அங்ஙனமே முகத்திற்கு முவமானித்தல் ஆசிரியர்க் குடன்பா டன்றென்க.

பிஞ்சுநன்னுதல் என்புழி ஒற்றுமை நயத்தான் பிறை வருவித்துரைக்கப்பட்டது. பிஞ்சுநன்னுதல் உவமத்தொகை. கொல் அசைநிலை. மென்மொழி அன்மொழித்தொகை. ஈண்டு அது அண்மைவிளியி னின்றது. ஈர் என்றவதனுன் மனம் அவாய்நிலையாற் பெறப்பட்டது. **அப்துல்முத்தலிபு** தாம் கண்ணுற்ற சொல்லற்கரிய காரணங்களெல்லாம் இம்மதலையாலெனும் வியப்புபற்றி அங்ஙனங் கூறினார். ஆகவே காரணங்களால் மனதை வகிர்க்கும் மதலை என்பது கருத்து.

இக் கருத்தறியாது முதலுரையார் மொழியாய் எனச் செய்யுளைத் திருத்தித் தவறுரைவரைந்து போந்தார்.

மழைக்கொடையான் உவமத்தொகை. பிற வருவனவெல்லாமாங்காங் கமைத்துக் கொள்க.

(111) கூறிய மொழிகேட் டாமினு வெனது
குமரனை மூன்றுநாள் வரைக்கும்
வேறொரு வருக்குங் காணேு தெனவே
விண்ணவ ருரைத்தன றொன்றே
யூறிய மதுர வாயிதழ் திறந்தே
யோதின ரப்துல்முத் தலிபு
சீறினர் புருவ முரிதர விருகண்
டீப்பொறி தெறித்திடச் சிவந்தே.

(ப-ரை.) கூறிய - அவ்வாறு அப்துல்முத்தலிபு அவர்கள் சொல்லிய, மொழி - சொற்களை, ஆமினுகேட்டு - ஆமினுஅவர்க ளுணர்ந்து, எனதுகுமரனை - என தரியகுமாரனை, மூன்றுநாள்வரைக்கும் - இன்று முதல் மூன்றுநாள் பரியந்தம், வேறு ஒருவருக் கும் - வேறொருவராலும், காண் - பார்த்தலைச் செய்ய, ஒணுதுஎன - கூடாவாம்என்று, விண் ணவர் - தேவர்கள், உரைத்தனர்என்று - சொல்லி ஞர்கள்என, மதுரம்ஊறிய - இனிமைசுரந்திரா நின்ற, வாய் - வாயினது, இதழ் - உதடுகளை, திறந்து - நீக்கி, ஓதினர் - மரியாதையாகச்சொல்லி னர், அப்துல்முத்தலிபு - அதுகேட்டு அப்துல் முத்தலிபு அவர்கள், இருகண் - இரண்டுகண் களிலும், தீபொறி - அக்கினிப்பொறிகள், தெறித் திட - சிதறும்படியாக, சிவந்து - சிவப்பேறி, புருவம் - இரண்டுபுருவங்களும், முரிதர - உடை யும்படியாகச்சுளித்து, சீறினர் - பெருங்கோபங் கொள்ளாநின்முர்கள், எ-று.

(பொ-ரை.) அவ்வாறு அப்துல்முத்தலிபு அவர்கள் சொல் லிய சொற்களை ஆமினுஅவர்க ளுணர்ந்து என தரிய குமாரனை இன்றுமுதல் மூன்றுநாள்பரி யந்தம் வேறொருவராலும் பார்த்தலைச் செய் யக்கூடாவாமென்று தேவர்கள் சொல்லினுர்க ளென வினிமைசுரந்திராநின்ற வாயின துதடு களை நீக்கி மரியாதையாகச்சொல்லினர். அது கேட்டு அப்துல்முத்தலிபு அவர்கள் இரண்டு கண்களிலு மக்கினிப்பொறிகள் சிதறும்படியா கச் சிவப்பேறி யிரண்டு புருவங்களு முடையும் படியாகச் சுளித்துப் பெருங்கோபங்கொள்ளா நின்முர்கள் என்பதாம்.

வேறொருவருக்கும் என்றமையான் ஆமினுகாண்பர்என்பது கருத்தாயிற்று. காணுறுதென்றவதனுன் கண்கள் நபிபெருமானுரவர்களைத் தொடாவென்பது பெறப்பட்டது. ஒருவருக்கும் என்புழி நான்கனுருபு மூன்றன்பொருளிடத்து வந்தது. காண் முதனிலைத்தொழிற்பெயர். ஈண்டு நபிபெருமானுரவர்களின் மகிமை இத்துணையாந்தன்மைத்து என்பதுதோன்ற விண்ணவர் அங்ஙனங் கூறினுரல்லது கரத்தற்பொருட்டாய்க் காட்டாது வைக்குமாறு கூறினுரென்ப தன்றென்றறிக. இங்ஙனம் விரிக்கிற் பல்குமாகலின் முதற்பாட்டிற் கூறியவாற்று னன்குணர்ந் தடங்குக.

இக்கருத்தறியாத முதலுரையார் "காட்டொணுது" எனச் செய்யுளைத் திருத்திப் போந்தார். அங்ஙனமாகுமேல் நபிபெருமானு ரவர்களின் றகைமை மிக்க விழுக்கியுறுமாதல்பற்றி அவருரையை ஓதற்க.

கேட்டு என்பது சொல்லெச்சமாயப் பின்னருஞ் சேர்க்கப்பட்டது. விண்ணவ ருரைத்தனர் என்புழி "ஜிபுறியீல் உரைத்தார்" என்பர் முதலுரையார். அது ஆமினுவினதுகூற்ருகலானும் ஜிபுறியீலை ஆண்டியாரு மறியாராகலானும் அவருரை அறியாமைஎன்க.

தேவரென்பதூஉம் ஆமினு அறியாரெனின் அற்றன்று. நினைத்தபொழுதே காண்டலும் மறைதலும் பலவகைப்பாடுறுதலுமான குணுதிசயங்களா லறிவர் என்க. ஈற்றேகார மொழிந்த ஏகாரங்க ளிசைநிறை. ஈற்றேகார மீற்றசை.

(112) சினந்தமா துலனைக் கண்டுளம் பதறிச்
சேயிழை யாமினு திகைத்துக்
கனந்தரு கொடையா யரசர்நா யகமே
கருதலர்க் கசனியே நுந்த
மனந்தனிற் சினமென் மனையுநும் மனையே
மகவுநும் மகவினின் மகவே
யினந்தரும் பலன்போ லெழுந்தசந் ததியை
யெடுமிலம் புகுமென விசைத்தார்.

(ப-ரை.) சேயிழை - செவ்விய ஆபரணங்களையுடைய, ஆமினு - ஆமினுஅவர்கள், சினந்த - கோபங் கொண்டிராநின்ற, மாதுலனே - அப்துல்முத்தலிபி னது, கண்டு - குறிகளைநோக்கி, உளம்பதறி - நெஞ்சம்பதைப்புற்று, அரசர்நாயகமே - இரா ஜர்களுக்குநாயகமானவரோ, கருதலர்க்கு - சத் துராதிகளுக்கு, அசனியே-இடியானவரோ, நும்- தங்களுடைய, மனம்தனில் - உள்ளத்தின்கண், சினம்என் - கோபமேன்? வேண்டாம், மனையும்- இந்தவீடுமோ, நும்மனே - உங்களுடையவீடு, மகவும் - பிள்ளையோ, கனம்தரும் - நிறைதரும், கொடையாய் - புண்ணிய தோற்றமாய்வரும், மகவின் - மகவினுடைய, இன்-இனிமையாகிய, மகவே - பிள்ளையே யாகலின், இனம் - நம் முடைய குறைசிக்கூட்டத்தாரெல்லாம், தரும் பலன்போல் - புரியுந்தவத்தின்கைம்மாறுபோ ல, எழுந்த - இப்பூமிமுகத்திலுதயஞ்செய்த, சந்ததியை - பிள்ளையை, எடும் - தாங்கள்எடுப் பீர்களாக, இலம்புகும்என - வீட்டின்கண்புகுது வீர்களாக என்று, இசைத்தார் - சொன்னார்கள், எ-று.

(போ-ரை.) செவ்விய வாபரணங்களையுடைய ஆமினுஅவர் கள் கோபங்கொண்டிராநின்ற அப்துல்முத்தலி பினது குறிகளை நோக்கி நெஞ்சம் பதைப் புற்று இராஜர்களுக்கு நாயகமானவரோ! சத் துராதிகளுக்கு இடியானவரோ! தங்களுடைய உள்ளத்தின்கண் கோபமேன்? வேண்டாம், இந்தவீடுமோ உங்களுடையவீடு, பிள்ளையோ நிறைதரும் புண்ணியதோற்றமாய்வரும் நும்

மகவினுடைய இனிமையாகிய பிள்ளையேயாக லின் நம்முடைய நுறைசிக்கூட்டத்தா ரெல் லாம் புரியுந்தவத்தின் கைம்மாறுபோல இப் பூமிமுகத்தி லுதயஞ்செய்த பிள்ளையைத் தாங் கள் எடுப்பீர்களாக, வீட்டின்கண் புகுதுவீர்க ளாக வென்று சொல்லினுர்கள் என்பதாம்.

மாதுலனே என்புழி ஆசிரியர்கூற்று. அவ்விடத்தினின்ற விரண்ட னுருபு ஆறன்பொருண்மைக்கண் ணின்றது. குறிகள் அவாய்நிலையாற் பெறப்பட்டது. கொடை ஆகுபெயர். அங்ஙனம்வரும் என்ற ஒரு சொல் வருவித் துரைக்கப்பட்டது. கொடையாய் என்பது ஈண்டு அப்துல்லாவினது புகழ் குறித்துநின்றது.

இனி, அதை விளியாய்க்கொண்டு அப்துல்முத்தலிபோடுபடுத்தி ஆமினுவினது கூற்ருகலின் மரியாதையின்மையாகக்கூறல் பொருந்தாதெனுங் கருத்தினராய்க் "கொடையீர்" எனத் திருத்திப்போந்தார் முதலுரையார். நும்என மரியாதை யாய்க் கூறியவர் கொடையாய் எனக் கூருர்எனும் பேரறி வை மறப்பெனும் பகைவன் கைப்படவிடுத்து மயங்கினுர் போலும். திருத்திப் பொருள்கூறல் மிக்க வியப்பினேது பற்றி யொன்றே பொருந்துமென்பர் சிலராயினும் இவர் பொருள் கேடுறவல்லது திருத்தார் என்றறிக.

நாயகமே அசனியே எனு மேகாரங்கள் விளியின்கண் வந்தன. தம்கட்டுரை சுவைப்படநின்றஅசை.

"சாரியை விகுதி தான்கெட லுரித்தே"

என்றவிதியான் இனிப் பென்பதின் இகரச்சாரியையும் புகரவிகுதியும் கெட்டு இன்னெனநின்றது.

இனி, இங்ஙனமறியாத முதலுரையார் மகவினின் என்புழிநின்ற இன் இரண்டும் சாரியை என மயங்கி "இருசாரியைப்பெறு தல் கூடாமையான் திருத்துவாம்" எனும் கருத்தினராய் "மகவினன்மகவே" என தமதறிவிற் கிலக்காய்ச் செய்யு ளைத் திருத்தினர்.

மனேயே மகவே என்பதின் ஏகாரங்கள் தேற்றேகாரங்களெனினுமாம். இனந்தரும்பலன் என்புழித் தவம்என்ற ஒருசொல் அதிகாரத்தான் வருவித் துரைக்கப்பட்டது.

(113) மருமலர் செறிந்து வண்டுகண் படுக்கு
மஞ்செனுங் கருங்குழன் மடந்தை
தருமுரை கேட்டு வெகுளியைப் போக்கிச்
சசிமுக மலர்ந்தகங் குளிர்ந்து
பருதியொத் திலங்கு மாளிகை புகப்போய்ப்
பார்த்தனர் வாயிலு ளொருவ
ருருவின கருவி கரத்தினி லேந்தி
யுறுக்கிட வெருக்கொடு மீண்டார்.

(ப - ரை.) வண்டு - வண்டினங்கள், கண்படுக்கும் - துயிலாநிற்கும், மரு - வாசனைபொருந்திய, மலர் - பூக்கள், செறிந்து - செறிக்கப்பட்ட, மஞ்செனும் - சூன்மேகம்போலும், கரும் - கருமைதங்கிய, குழல் - கூந்தலையுடைய, மடந்தை - ஆமினு அவர்கள், தரும் - கொடுக்கும், உரை - வார்த்தையை, கேட்டு - அப்துல்மூத்தலி பவர்களுணர்ந்து, சசி - சந்திரனேப்போலும், முகம் மலர்ந்து - முகத்தின்கண்மலர்ச்சிபூத்து, வெகுளியை போக்கி - தமது கோபத்தைநீக்கி, அகம்குளிர்ந்து - உள்ளங்குளிர்தலாய், பருதியொத்து - சூரியனேப்போன்று, இலங்கும்-பிரகாசியாநிற்கும், மாளிகை - வீட்டின்கண், புக போய் - பிரவேசிப்பதற்காகச்சென்று, பார்த்தனர் - நோக்கினுர்கள், வாயிலுள் - அப்பொழுது அவர்வீட்டின் வாயிலினுள்ளே, ஒருவர் - ஒரு வாலிபர், உருவினகருவி - உறைநீக்கிய வாளாயுதத்தை, கரத்தினில் - கையில், ஏந்தி - ஏந்தினவராக நின்று, உறுக்கிட - பயமுறுத்த,

வெருகொடு - அச்சங்கொண்டு, மீண்டார் - திரும்பினார்கள், எ-று.

(போ-ரை.) வண்டினங்கள் துயிலாநிற்கும் வாசனைபொருந்திய பூக்கள் செறிக்கப்பட்ட சூன்மேகம்போலும் கருமைதங்கிய கூந்தலையுடைய ஆமினு அவர்கள் கொடுக்கும் வார்த்தையை அப்துல் முத்தலி பவர்கள் உணர்ந்து சந்திரனைப்போலும் முகத்தின்கண் மலர்ச்சிபூத்துத் தமது கோபத்தைநீக்கி உள்ளங்குளிர்தலாய்ச் சூரியனைப்போன்று பிரகாசியாநிற்கும் வீட்டின்கண் பிரவேசிப்பதற்காகச் சென்று நோக்கினார்கள். அப்பொழுது அவ்வீட்டின் வாயிலினுள்ளே ஒருவாலிபர் உறைநீக்கிய வாளாயுதத்தைக் கையி லேந்தினவராகநின்று பயமுறுத்த அச்சங்கொண்டு திரும்பினார்கள் என்பதாம்.

மருமலர் என்பதைக் குழலோடும், வண்டுகண்படுக்கும் என்பதை மருமலரோடுங் கூட்டுக. செறிந்த என்பது செறிந்து எனத் திரிந்துநின்றது. சசிமுகம் உவமத்தொகை. அகமென்னும் உள்ளிடப்பெயர் அங்கிருக்கும் மனசுக்காதலால் ஆகுபெயர். ஒருவர் என்னும்பொதுப்பெயர், உருவினகருவி கரத்தினிலேந்தி யுறுக்கிட எனு மேதுவான் வாலிபன் என்பதாயிற்று. உறுக்கிட என்புழி ஈண்டு "அங்ஙனம் செல்லற்க செல்லினும் நுமதுகண் அவளைப் பொருந்தாது" என வற்புறுத்தினரென்பதுகருத்து. அப்துல்முத்தலிபு வெருவாச் சாதியினராயினும் அவர் தேவராகலின் தமதியற்கைக்கிலக்காய் வெரீஇனுரெனக் கொள்க. பிறவருவனவெல்லா மமைத்துக்கொள்க.

(114) மீண்டனர் பதறிக் காறடு மாறி
விளைந்திடும் பயனையோ ராம
லாண்டகை யிவனார் நம்மனை தனைவந்
தடுப்பனோ தகாதென வெண்ணிப்

பூண்ட நம் மினத்தா ரனைவர்க்கு முரைத்துப்
போக்குவ மிவனைநா மென்னத்
தூண்டியே நடந்து வாயிலைக் கடந்தார்
துன்பமுற் றப்துல்முத் தலிபு.

(ப-ரை.) மீண்டனர் - அங்ஙனம் பயந்து உள்ளேபுகாது திரும்பிய, அப்துல்முத்தலிபு - அப்துல்முத்தலி பானவர்கள், பதறி-பதைப்புற்று, கால்தடுமாறி-தமதுகால்கள் நிலைபெறாதவராய், ஆண்தகை - ஆணினது தகைமையுள்ள வீரனாகிய, இவன் - இம்மனுஷன், யார் - யாவன், நம் - நம்முடைய, மனைதனை - வீட்டின்கண், அடுப்பனோ - அச்ச மின்றிவருவானோ, தகாதுஎன - அப்படி வரத் தகாதென்று, எண்ணி - மதித்து, பூண்ட-பொருந்திய, நம் - நமது, இனத்தார் - பந்துக்கள், அனைவர்க்கும் - எல்லாருக்கும், உரைத்து - இச் சமாசார மறிவித்து, இவனை - இவ்வீரனை, நாம் போக்குவம் என - நாம் கொல்வோமென்று, தூண்டி - தமது மனதைச்செலுத்தி, விளைந்திடும் - உண்டாகும், பயனை - பிரயோசனத்தை, ஓராமல்-இன்னதென் றறியாமல், துன்பமுற்று-வியசனித்தவராக, நடந்து - நடத்தலைச்செய்து, வாயிலை - வீட்டினதுவாசலைவிடுத்து, கடந்தார்-அப்புறமாயினார்கள், எ-று.

(போ-ரை.) அங்ஙனம் பயந்து உள்ளேபுகாது திரும்பிய அப்துல்முத்தலிபானவர்கள்பதைப்புற்றுத்தமது கால்கள் நிலைபெறாதவராய் ஆணினது தகைமையுள்ள வீரனாகிய விம்மனுஷன் யாவன்? நம்முடைய வீட்டின்கண் அச்சமின்றி வருவானோ அப்படி வரத்தகாதென்று மதித்துப்

பொருந்திய நமது பந்துக்களெல்லார்க்கும் இச் சமாசார மறிவித்து இவ்வீரனை நாம் கொல்வோமென்று தமது மனதைச் செலுத்தியுண்டாகும் பிரயோசனத்தை யின்னதென் றறியாமல் வியசனித்தவராக நடத்தலைச்செய்து வீட்டினது வாசலைவிடுத்து அப்புறமாயினர்கள் என்பதாம்.

மீண்டனர் என்னும் வினைமுற்றுச்சொல் பெயரொச்சப்பொருண்மைக்கண் ணின்றது. பயனை யோராமலென்பது ஈண்டு அங்குற்றிருந்தார் இத்துணையரென்பதூஉ மிவரோதியவா றினைத்தென்பதூஉ மறியாதாயின ரென்பதுபற்றி இத்தன்மைத்தாஞ் சிறப்பினையுடையபெருமானை யடைந்திருத்தலால் வரையாதுறும் பயனுதல்பற்றி "விளைந்திடும்பயன்" என்றார். ஆண்டகைஎன்ப தாகுபெயர்.

இனி, அதை அன்மொழித்தொகை என்பர்முதலுரையார். அது பொருந்தாது; என்னை? ஆகுபெயர் ஒன்றன்பெயரான் அதனேடியைபுபற்றிய பிரிதொன்றனை யுணர்த்தி ஒருமொழிக்கண்ணதாம்; அன்மொழித்தொகை இயைபு வேண்டாது இருமொழியும் தொக்கத்தொகையாற்றலால் பிரிதுபொருளுணர்த்தி இருமொழிக் கண்ணதாம்; இவையே தம்முள் வேற்றுமையாதல்பற்றி ஆண்என வியந்து கூறும் வீரன் என்பார் "ஆண்தகை" என்றார். ஆகவே ஆண்என்பதுபாற்பொதுமையினீக்கிப் பொருளை விசேடித்து நிற்ப தகை என்பதுவிடாத ஆகுபெயராய் அப்பொருளின் வீரத்தையுணர்த்திநிற்ப இருபெயரும் ஒன்றனையொன்றுவிசேடித்து இன்னது இது என உணர்த்து மாற்றலான் ஆண்டகை ஆகுபெயராயிற்றென்க.

**அப்துல் முத்தலிபு** இத்துணையாங் கோபமாயினர் என்பது தோன்ற நாம் எனுஞ்சொல் இச்செய்யுளின்கண் பல்லிடத்தும் வந்தது. **அப்துல் முத்தலிபு** குறைஷிகளின் றலைவரொன்னும் பெருமைபற்றி "நம்மனை" என்றார். மனைதனை என்புழி இரண்டனுருபு ஏழன் பொருண்மைக்கண் வந்தது. அடுப்பனோ என்புழி ஓகாரம் எதிர்மறை. போக்குவம் என்றமையானும் தூண்டி என்றமையானும் முறையே

உயிரும்மனமும் ஒத்துமை நயத்தான் வருவித் துரைக்கப்பட்டன. ஈண்டுத் தாண்டியே என்னு மேகாரம் இசைநிறை. பிற வருவன வெல்லாம் ஆண்டாண் டமைத்துக் கொள்க.

(115) காரண மனைத்தும் வெளிப்படா தமைக்குங்
　　காலமென் றறிந்துண ராம
லூரவ ரெவர்க்கு முரைத்திவண் புகவென்
　　றுளத்தினி லெண்ணிய காலைப்
பாரிடத் தெறும்பீ ருயிப முதலாப்
　　பகுத்தமைத் தவன்விதிப் படியா
லீரமுற் றுணங்கி நாவழங் காம
　　லெழுதின மில்லம்புக் கிருந்தார்.

(ப - ரை.) காரணம் - அங்ஙனங் கண்ணுற்ற நூதனக்காட்சிகள், அனைத்தும் - எல்லாவற்றையும், வெளிப்படாது - வெளியிடாவண்ணம், அமைக்கும் - மனத்தின்கண்ணே புதைக்கும், காலம்என்று - தருணமிஃதென்று, அறிந்து - ஆராய்ந்து, உணராமல் - தேர்ச்சியடையாமல், ஊரவர் - ஊரிலுள்ளவர்கள், எவர்க்கும் - அனைவர்க்கும், உரைத்து - வெளிப்படுத்தி, இவண் - இவ்விடத்தில், புக என்று - வரச்செய்வோமென்று, உள்ளத்தில் - மனத்தின்கண், எண்ணியகாலை - எண்ணி நடக்கின்ற நேரத்திலே, பார் இடத்து- பூமியின்கண், இபமுதல் - யானைமுதல், எறும்பு ஈருய் - உறவி யீருகவுள்ள எண்பத்துநான்கு நூருயிர ஜீவசாதிகளையும், பகுத்து - வெவ்வேறுவகைபடுத்தி, அமைத்தவன் - உண்டாக்கிய சர்வதயாபரக் கடவுளினது, விதிப்படி - உத்தரவின்படி, ஈரமுற்று - அறிவுகள் நிறைந்தும், நாவழங்காமல் - நினைத்த கருமத்தைச் சொல்

லுதற்கியலாது, உணங்கி - வாட்டமுற்று, எழு தினம் - எழுநாள்வரையினும், இல்லம் - வீட்டின்கண், புக்கு இருந்தார் - புகுந்திருந்தார்கள், எ-று.

(போ-ரை.) அங்ஙனங் கண்ணுற்ற நூதனக்காட்சிகள் எல்லாவற்றையும் வெளியிடாவண்ணம் மனத்தின்கண்ணே புதைக்குந் தருண மிஃதென்று ஆராய்ந்து தேற்சியடையாமல் ஊரிலுள்ளவர்கள் அனைவர்க்கும் வெளிப்படுத்தி இவ்விடத்தில் வரச்செய்வோமென்று மனத்தின்கண் எண்ணி நடக்கின்ற நேரத்திலே பூமியின்கண் யானைமுதல் உறவி யீருகவுள்ள எண்பத்து நான்கு நூறுயிர ஜீவசாதிகளையும் வெவ்வேறு வகைபடுத்தி உண்டாக்கிய சர்வதயாபரக் கடவுளினது உத்தரவின்படி அறிவுக ணிறைந்தும் நினைத்தகருமத்தைச் சொல்லுதற் கியலாது வாட்டமுற்று எழுநாள் வரையினும் வீட்டின்கண் புகுந்திருந்தார்கள், என்பதாம்.

காரணம் ஆகுபெயர். **அப்துல்மூத்தலிபு** கண்ட நூதனக்காட்சிகள் எல்லாம் என்பான் "அனைத்தும்"என்றார். பன்னுள் தெய்வமென்றுள்ளிட்டு பூஜாதிகிரியைகள் நடாத்தப்பட்டுவந்த விக்கிரகங்களெல்லாம் முகங் குப்புறக் கிடப்ப **மக்கவாசிகளு**நோக்கி இஃதென் கொலோவிளைவென மனமலைந்து அவைகளைச் செவ்வையுறுத்துநேர மதுவாகலின் **அப்துல்மூத்தலிபு** கருதிய விஷயம் அச்சமயம் அவருளைநுதலற்பாலதன்றென்பான் "வெளிக்கிடா தமைக்குங்காலம்" என்றார். புக என என்புழிச் செய்வோமென்றசொல் வருவித் துரைக்கப்பட்டது. இபமுத லெறும் பீருய் எனற்பாலது பிறழ்ந்துநின்றது; அது பண்புத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகைப் பொருட்டாய் யானையாகிய வஸ்துமுதல் எறும்பாகிய வஸ்துகடையாயுள்ள எண்பத்துநான்கு நூறுயிர சீவசாதிகளாகிய வஸ்துக்களை

யெல்லாம் உணர்த்தி நின்றது. அது "எழுத்தெனப்படுப வகரமுத னகரவிறுவாய்" என்ருற்போல வென்றறிக.

இனி, யானைமுதலும் எறும்புஈறும் என்பர் பிரத்தியட்ச ஆணை யாற்றலின் உலகுவழக்குப்பற்றியல்லது, யானையிற் பெரிதும் எறும்பிற் சிறிதும் இல்லெனுங் கருத்தினரல்ல ராசிரிய ரறிக.

ஈரம் உற்றும் என்புழி உயர்வுசிறப் பும்மை விகாரவகையாற் றொக்கது. **நபி**பெருமானரது அரிய தகைமை இனைத்தென்பது இதனுணும் **அப்துல்முத்தலிபு** அறிதற்பொருட்டாய் ஈரமுற்றிருந்தும் நாவழங்காதிருந்தார் என்றறிக. இங்குறு மரியகருத்துகளை உய்த்துணர்ந் தடங்குக. ஈரமுற்று என்றமையான் ஆறறிவோடு மிருந்தா ரென்பது கருத்து. ஆகவே **அப்துல்முத்தலிபு** எதுகுறித்து நடந்தாரோ அஃதொன்றே வழங்கற் கியலாதிருந்தா ரென்க.

இக்கருத்தறியாது முதலுரையார் 'ஈரமற்று' எனச் செய்யுளைத் திருத்தித் தமதறியாமையை விளக்கினரன்றி யாதும் பயந் திலரென் ருேதிவிடுக.

விதிப்படியால் என்பதில் ஆல் அசைநிலை. பகுத்து அமைத்தவன் என்பதிலுறும் அரிய கருத்துக்களை உய்த்துணர்க.

(116) சிலைநுதற் கயற்க ணாமினு வென்னுஞ்
செவ்விபூத் திருந்தபொன் மடந்தை
மலர்தலை யுலகிற் சுருதியை விளக்கு
முகம்மது நபிநயி னுரை
யிலகிய கமலக் கரத்தினி லேந்தி
யிருவிழி குளிர்தர நோக்கிப்
பலகலை யறிவுங் கொடுப்பபோ லெழுநாட்
பான்முலை கொடுத்தன ளன்றே.

(ப - ரை) செவ்விபூத்து இருந்த - அழகுபூத் திராநின்ற, சிலை - வில்லைப்போலும், நுதல் - புருவங்களையும், கயல் - கயல்மீன்போலும், கண் - விழிகளையுமுடைய, ஆமினுஎனும் - ஆமினுவென்று

சொல்லும், பொன் - பொன்போலும், மடந்தை - பெண்ணனவர்கள், மலர் - மலர்தலாகிய, தலை - பெருமைதங்கிய, உலகில்-பூமியின்கண், சுருதியை - வேதங்களை, விளக்கும் - விளக்கஞ் செய்யும், முகம்மது நபிநயினாை - மூகம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்களை, இலகிய - பிரகாசியாநின்ற, கமலம் - தாமரைமலர்போலும், கரத்தினில் - கைகளில், ஏந்தி - சுமந்து, இருவிழி - தமது இரண்டுகண்களும், குளிர்தர - குளிர்ச்சிபூப்ப, நோக்கி - பார்த்து, பல - பலவித, கலை அறிவும் - வித்வத்துவமாகியஞானங்களையும், கொடுப்பபோல்- ஊட்டுவதுபோன்று, முலைபால் - ஸ்தன்னியத்தோடு மமுதை, கொடுத்தனர் - ஊட்டினார்கள், எ-று.

(போ-ரை.) அழகுபூத்திராநின்ற வில்லைப்போலும் புருவங்களையும் கயல்மீன்போலும் விழிகளையுமுடைய ஆமினுவென்று சொல்லும் பொன்போலும் பெண்ணனவர்கள் மலர்தலாகிய பெருமைதங்கிய பூமியின்கண் வேதங்களை விளக்கஞ்செய்யும் மூஹம்மதுஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்களைப் பிரகாசியாநின்ற தாமரைமலர்போலும் கைகளிற்சுமந்து தமதிரண்டு கண்களுங் குளிர்ச்சிபூப்பப் பார்த்துப் பல்வித வித்வத்துவமாகிய ஞானங்களையும் ஊட்டுவது போன்று ஸ்தன்னியத்தோடு மமுதை ஊட்டினார்கள், என்பதாம்.

சிலைநுதல் கயல்கண் பொன்மடந்தை என்பன உவமத்தொகைகள். ஈண்டுப் பொன்மடந்தை என்புழிப் பொன்போலப் போர்த்தப்

படும் அரிய மடந்தையென விரிக்க. நபி பெருமானாரவர்கள் நான்கு வேதத்திற்கு நாயகமாகலின் சுருதி என்புழி நான்குவேதத்தையுங் கொள்க.

அது குறு ஆன் என்பர் முதலுளையார். அது பொருள் வியப் பின்றாகலின் பயனில்கூற்றாம் என்க.

நயினார் என்பது ஈண்டுத் தென்பாண்டி நாட்டார் வழக்குநோக்கி உயர்வுகுறித்து நின்றதென்க. அதை மலையமாநாட்டார் கோயா வென வழங்குவர். கமலம் ஆகுபெயர். ஸ்தன்னியத்தோடு பால் கொடுப்பதினும் அவற்றின் வேறாக்கிக் கொடுப்பதினும் பேதமை யுள வாகலின் ஐயங்தொலைப்பான் கருதி "பான்முலை" என்றார். முலை பால் என்பது பான்முலை எனத் திரிந்து நின்றது. அது மூன்றாம்வேற் றுமைத்தொகை. உம்மைகள் விகாரவகையாற் றொக்கன. கொடுப் பதுபோல என்பது து விகுதிகெட்டு நின்றது. அன்று அசைநிலை. ஏகார மீற்றசை.

(117) மின்னவிர் சுவன வானவர் கூண்டு
விளங்கொளி யினமணித் தசும்பி
னன்னிலைச் சலிலங் கொணர்ந்து கோதறவே
நறைகமழ் முகம்மது நபியை
யிந்நிலம் விளங்க விளக்குவ தெனவே
யெழிற்கரத் தேந்திநீ ராட்டிப்
பன்னிய சலவாத் தோதியே வாழ்த்திப்
பரிவுடன் புகழ்ந்துபோந் திடுவார்.

(ப - ரை.) மின் - பிரகாசம், அவிர் - விரியாநிற்கும், சுவ னம் - சுவர்க்கத்து, விண்ணவர் - மலக்குகள், கூண்டு - திரண்டு, விளங்கு-சொலிக்கும், ஒளி- பிரபையையுடைய, மணியினம் - இரத்தினவர்க் கங்களாலாய, தசும்பின் - குடங்களில், நல் - நல்ல, நிலை - நிலைமையதான ஹௌலுல்கௌச ராற்றின், சலிலம் - சலத்தை, கோதற - பரி சுத்தமாக, கொணர்ந்து - கொடுவந்து, நறை -

வாசனை, கமழ் - பரிமளிக்கும், முகம்மது நபியை - முஹம்மதுஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்களை, இந்நிலம் - இப்பெரிய பூமியின்கண்ணும், விளங்க - பிரகாசிக்க, எழில் - வலிய, கரத்து - கைகளிலே, ஏந்தி - சுமந்து, நீராட்டி - ஸ்நானஞ் செய்வித்து, பன்னிய - சொல்லத்தகுந்த, சலவாத்து - துதிச்சொற்களை, ஓதி - ஓதாநின்றும், வாழ்த்தி - சலாமுரைத்தும், பரிவுடன் - அன்போடு, புகழ்ந்து - பாராட்டுதல் செய்தும், போந்திடுவார் - போவார்கள், எ-று.

(போ-ரை.) பிரகாசம் விரியாநிற்கும் சுவர்க்கத்து மலக்குகள் திரண்டு சொலிக்கும் பிரபையையுடைய விரத்தின வருக்கங்களாலாய குடங்களில் நல்ல நிலைமையதான ஹௌலுல் கௌசராற்றின் சலத்தைப் பரிசுத்தமாக கொடுவந்து வாசனை பரிமளிக்கும் முஹம்மதுஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்களை இப் பெரிய பூமியின்கண்ணும் பிரகாசிக்க வலிய கைகளிலே சுமந்து ஸ்நானஞ் செய்வித்துச் சொல்லத்தகுந்த துதிச்சொற்களை யோதாநின்றும் சலாமுரைத்தும் அன்போடு பாராட்டுதல் செய்தும் போவார்களென்பதாம்.

அவிர் வினைத்தொகை. மணியினம் இனமணி யெனப் பிறழ்ந்து நின்றது. நிலை ஆகுபெயர். ஹௌலுல்கௌசர் அதிகாரத்தாற் பெறப்பட்டது. கோதற என்பது ஈண்டுக் கொடுவருதலின் பரிசுத்தம் இத்துணையதாமென்பதை யுணர்த்தி நின்றது.

இனி, இந் நிலம்விளங்க கோதற விளக்குவது என என்று கூட்டி "இந்தப் பூமியானது விளங்கும்படி குற்றமற விளக்குவது

போல" எனப் பொருண்முடிப்பர் முதலுரையார்; அது தெற்றெனப் பொருண்முடியாமைபற்றிப் போலி யுரையா மென மறுக்க.

அதை **முகம்மதுநபி** என்பதனோடு படுத்தி **முகம்மதுநபி**யைக் குற்றமறக் கழீஇனுர் என்பாருமுளர்; **முகம்மதுநபி** யாண்டும் குற்ற மற விளங்குவராதலின் அதூஉம் ஆசிரியர்க் குடன்பாடாகாவென்க. இங்ஙனமாகுமேல் நீராட்டிய தெற்றிற்கோ? வெனின், பூதங்களி னியற்கைமாறி வானத்தின் குணமே ஈண்டும் விளங்குதற்பொருட்டுக் கழீஇ னுரெனக்கொள்க. அதுபற்றியே ஆசிரியர் "இந்நிலம்விளங்க" என்ருர். வானத்திலேயன்றி இந்நிலத்திலும் விளங்க என்னும் பொ ருட்டாய் நின்ற எச்சஉம்மை விகாரிவகையாற் ருெக்கது; உய்த்து ணர்க. போந்திடுவார் என்றமையால் தினந்தினம் அவ்வாறு செய்து போவாரொன்பது கருத்து. அது குறிக்கப்பட்ட ஓர் காலம்வரையிலெ னக் கொள்க. உம்மைகள் விகாரவகையாற் ருெக்கன. ஏகாரங்க ளிசைநிறை.

(118) இலங்கிலே வேற்கை யப்துல்முத் தலிபு
மெழுதின மனையகத் திருந்து
நலங்கிளர் நாவும் வழங்கிட மனத்தி
னுல்வகைப் பயனையு முணர்ந்து
கலங்கியே தெளிந்து மதலைமேல் விருப்பாய்க்
கடுவிழிக் கனிமொழித் துவர்வாய்ப்
பொலன்கொடி யாமி னுமணி மனையிற்
புக்கினர் புயங்கள்விம் முறவே.

(ப - ரை.) இலங்கு - பிரகாசிக்கும், இலை - இலைபோலும், வேல் - வேற்படைதங்கிய, கை - கரத்தினையு டைய, அப்துல்முத்தலிபும் - **அப்துல் முத்தலி** பானவர்கள், எழுதினம் - ஏழுநாள்பரியந்தம், மனையகத்து - வீட்டின்கண், இருந்து - தரிப் புற்றிருந்து, மனத்தின் - மனத்தினல், நால்வ கை - நாலுவித, பயனையும் - காரியாமிசங்களை யும், உணர்ந்து - நன்குமதித்து, தெளிந்து -

கோபத்தினின்று தெளிவடைந்து, கலங்கி-தாம் கருதிய கருமங்களைக்குறித்து விசனமுற்று, மதலைமேல் - பிள்ளையின்மேல், விருப்பாய் - ஆவலுற்றவராய், கடு - விஷம்போலும், விழி - கண்களையும், கனி - கனிபோலும், மொழி - இனிய சொற்களையும், துவர் - பவளம்போலும், வாய் - உதடுகளையுமுடைய, பொலன்கொடி - பொன்னுலியன்ற கொடியாகிய, ஆமினு - ஆமினுஅவர்களின், நலம்கிளர் - நலமே கிளர்தலாகும், மணி- அழகிய, மனையில் - வீட்டின்கண், நாவழங்கிட- பேசுதற்கு நாவமைதலாகவும், புயங்கள்-இரண்டுதோள்களும், விம்முற - புளகெழும்படியாகவும், புக்கினர் - புகுந்தார்கள், எ-று.

(போ-ள.) பிரகாசிக்கும் இலைபோலும் வேற்படைதங்கிய கரத்தினையுடைய அப்துல் மூத்தலிபானவர்கள் ஏழுநாள் பரியந்தம் வீட்டின்கண் தரிப்புற்றிருந்து மனத்தினுல் நானுவித காரியாமிசங்களையும் நன்குமதித்துக் கோபத்தி னின்று தெளிவடைந்து தாம்கருதிய கருமங்களைக் குறித்து வியசனமுற்றுப் பிள்ளையின்மேல் ஆவலுற்றவராய் விஷம்போலுங் கண்களையுங் கனிபோலு மினிய சொற்களையும் பவளம் போலு முதடுகளையுமுடைய பொன்னுலியன்ற கொடியாகிய ஆமினுஅவர்களின் நலமே கிளர் தலாகு மழகிய வீட்டின்கண் பேசுதற்கு நாவமைதலாகவும் இரண்டு தோள்களும் புளகெழும்படியாகவும் புகுந்தார்கள், என்பதாம்.

அப்துல் முத்தலிபும் என்ற உம்மை சாரியை.

இனி, நலம் கிளர் என்பதை நாவோடு கூட்டுவர் முதலுளையார். அதில் பொருள் வியப்பின்முகலின் பொருந்தாதென்க.

மனந்தனில் என்புழி ஐந்தனுருபு மூன்றன் பொருண்மைக்க ணின்றது. ஆமினு சூலானகாலந்தொடங்கி நடந்தனவூஉம் கதபாவி னடந்தனவூஉம் ஆமினுவுரைத்தனவூஉம் உருவிய கருவியோ டொரு வாலிபர் வீட்டினகத்து நின்றதூஉம் ஆறறிவினோ டிருந்தும் தாம் நினைந்த கருமத்தை வெளியிடற் கமையாதிருந்ததூஉமான பல கார ணங்களை "நால்வகைப்பயனும்" என்ருர்.

இனி, அதை அறம், பொருள், இன்பம், வீடு என்பர் முதலுரை யார். அவைக ளிங்ஙனம் நிகழாமையானும் அல்லதூஉ மவைகளை அப்துல்முத்தலிபு நினைத்தற் கேதுவின்மையா னும் அவர்கூற்றுப் பிரதிப் பிரயோசனமாகலின் இழுக்கா மெனமறுக்க.

பயனையும் என்புழி உம்மை எஞ்சாப் பொருளை யுணர்த்தலின் முற்றும்மை என்க. கலங்கி என்புழி ஏற்புழிக் கோடலால் தாம் கரு திய கருமங்களைக்குறித்து என்பது வருவிக்கப் பட்டது. அது அவாய் நிலைஎனினு மமையும். இலைவேல், கடுவிழி, கனிமொழி, துவர்வாய் என்பன உவமத்தொகைகள். பொலன்கொடி ஆகுபெயர். அப்துல் முத்தலிபவர்கட்கு நினைத்த கருமங்களையெல்லாம் மொழிய ஆமினு மனைபுக்கவிடத் தன்றே நாவழங்கிற்றென் றறிக. ஏகார மிசை நிறை. உம்மைகள் விகாரவகையாற் ருெக்கன. ஈற் றேகார மீற் றசை.

(119) திண்டிறற் பொருப்பும் பொருவரா தெழுந்து
செம்மைவீற் றிருந்தபொற் புயத்தான்
வண்டணி குழலா ராமினு வெனும்பேர்
மடந்தைதன் றிருமுக நோக்கிக்
கண்டெனு மொழியா யிவ்வயி னிகழ்ந்த
காரணக் காட்சிக ளெல்லாம்
விண்டெமக் குரையு மென்றனன் முறுவல்
விளங்கிய குமுதவாய் திறந்தே.

(ப - ரை.) திண் - திண்ணிய, திறல்-வலிதங்கிய, பொருப் பும் - மலைகளும், பொருவராது - நிகர் சொல் லற்கமையாது, எழுந்து - எழாநின்ற, பொன் -

அழகிய, புயத்தான் எனும் - புயத்தி னெப்பற் ருனென்று சொல்லும், வண் - வலிமையையும், செம்மைவீற்றிருந்த - கனந்தங்கிய, தணி-குளிர் தலாகிய, குழல்ஆர்-இசைப்பாட்டினையு முடையாராகிப அப்துல் மூத்தலிபானவர்கள், ஆமினு எனும் - ஆமினுஎன்றுசொல்லும், பேர் - பெருமைதங்கிய, மடந்தை - பெண்ணினது, திரு-தெய்வத்தன்மை பொருந்திய, முகம் - முகாரவிந்தத்தை, நோக்கி - பார்த்து, என்தன் - என்னுடைய, நல் - நல்ல, முறுவல்-பற்கள், விளங்கிய - தெரியாநின்ற, குமுதம் - செவ்வல்லிமலர்போலும், வாய் - வாயை, திறந்து - நீக்கி, இவ்வயின் - இவ்விடத்தில், நிகழ்ந்த - நடந்த, காரணம் - நூதனமாகிய, காட்சிகள் எல்லாம்-விஷயங்களை யெல்லாம், விண்டு - வெவ்வேருக, கண்டெனும் - கற்கண்டுபோலும், மொழியாய்-இனிய சொல்லினதாய், எனக்கு - என்றனக்கு, உரை - சொல்வாயாக, எ-று.

(பொ-ள்.) திண்ணிய வலிதங்கிய மலைகளும் நிகர்சொல்லற்கமையாது எழாநின்ற வழகிய புயத்தினெப்பற்ருனென்று சொல்லும் வலிமையையும் கனந்தங்கிய குளிர்தலாகிய இசைப்பாட்டினையு முடையாராகிய அப்துல் மூத்தலிபானவர்கள் ஆமினு என்றுசொல்லும் பெருமைதங்கிய பெண்ணினது தெய்வத்தன்மை பொருந்திய முகார விந்தத்தைப்பார்த்து என்னுடைய நல்ல பற்கள் தெரியாநின்ற செவ்வல்லி மலர்போலும் வாயைநீக்கி இவ்விடத்தில் நடந்த நூதனமாகிய விஷயங்களையெல்

லாம் வெவ்வேருகக் கற்கண்டுபோலும் இனிய சொல்லினதாய் எனக்குச் சொல்வாயாக வென்பதாம்.

பொருப்பும் என்புழி உம்மை மலையின்சிறப் புணர்த்துகையான் உயர்வு சிறப்பும்மை. எழுந்து என்பதைப் புயத்தோடுங் கூட்டுக. எழுந்தவென்னும் பெயரெச்சத் தகரவொற்றின்மேனின்ற அகரம் உகரமாய்த் திரிந்துநின்றது. புயத்தானென்பது புறத்தார்கூற்று. அன்விகுதி ஒப்பாறுதலைக் குறித்துநின்றது. தணி என்பது முதனிலைத் தொழிற்பெயர். எனும் என்பது சொல்லெச்சமாய் முன்னருஞ் சேர்க்கப்பட்டது. தன் என்பது கட்டுரைச்சுவைப்படநின்ற அசை. உரையும் என்புழி உம் சாரியையாய் நின்றது. முறுவலை அப்துல்முத்தலிபோடு கூட்டுக.

இனி, இச்செய்யுட்குப் பொருண்முடிந்தவா றினைத்தென வறியாது புக்கினர் என முன்னரும், எழுந்தார், சார்ந்தாரென்று பின்னரும் கூறிய ஆசிரியரை ஒருமைபன்மை அறியாதாரெனக்கருதி புயத்தார், தந்திருமுகம், உரையாய், என்றனர் எனச் செய்யுளைத் திருத்தியும் கண்டெனு மொழியாய் என்பதை விளியாய்க்கொண்டும் பலவாறு தவறிப் போந்தார் முதலுரையார்; அவையெல்லா மவருரையானே காண்க.

குமுதம் ஆகுபெயர். உம்மைகள் விகாரவகையாற் ரெக்கன. ஏகார மீற்றசை.

(120) பறவைக ளனைத்தும் வந்ததுஞ் சுவனப்
பதியைவிட் டமரர்வந் ததுவும்
மறியமு மாசி யாவும்வந் ததுவும்
வானவர் மகளிர்வந் ததுவும்
வெறிகமழ் பறவை வீசிநின் றதுவும்
விண்ணகத் தமுதந் தந்ததுவுங்
குறைவிலாப் புதுமை பலவுங்கண் டதுவுங்
குறிப்புடன் படிப்படி யுரைத்தார்.

(ப - ரை.) வெறி - வாசனை, கமழ் - பரிமளிக்கும், சுவனம் பதி - சுவர்க்கலோகங்களை, விட்டு - நீங்கி, பறவைகள் அனைத்தும் - எல்லாவித பட்சிசாதிகளும், வந்ததுவும்-வந்தன என்பதுவும், அமரர்- மலக்குகள், வந்ததுவும் - வந்தார்க ளென்பதுவும், மறியமும் ஆசியாவும் - மறியம்அலைஹிஸ்ஸலா மவர்களும் ஆசியாநாயகி யவர்களும், வந்ததுவும் - வந்தார்க ளென்பதுவும், பறவை - ஒருபட்சியானது, வீசிநின்றதுவும் - தமக்கு சுவேதநீரற வீசிநின்ற தென்பதுவும், விண்ணகத்து அமுதம் - வானத்தினின்று தேவருணவு, வந்ததுவும் - வந்ததென்பதுவும், புதுமைபலவும் - இவைகளல்லாம லற்புதக்காட்சிக ளநேகம், கண்டதுவும் - கண்டேம் என்பதுவும், குறைவிலா - இழுக்கியுறாது, குறிப்புடன்-திட்டமாய், படி படி-வகைவகையாய், உரைத்தார்- சொன்னார்கள், எ-று.

(போ-ரை.) வாசனைப் பரிமளிக்குஞ் சுவர்க்கலோகங்களை நீங்கி எல்லாவித பட்சிசாதிகளும் வந்த என்பதூஉம் மலக்குகள் வந்தார்க ளென்பதூஉம் மறியம்அலைஹிஸ்ஸலா மவர்களும், ஆசியாநாயகி யவர்களும் வந்தார்களென்பதூஉம் ஒரு பட்சியானது தமக்கு சுவேதநீரறவீசி நின்றதென்பதூஉம் வானத்தினின்று தேவருணவு வந்ததென்பதூஉம் இவைக ளல்லாமல் அற்புதக் காட்சிக ளநேகங் கண்டேமென்பதூஉம் இழுக்கியுறாது திட்டமாய் வகைவகையாய்ச் சொன்னார்கள், என்பதாம்.

பறவைகளனைத்தும் என்பது ஈண்டுப் பட்சியின் சாதிகள் எல்லாமென்பதை யுணர்த்தி நின்றது. வெறிகமழ் என்புழிப் பொது வகையால் சுவர்க்கத்தோடு கூட்டினும்.

அதைவீசிய பட்சி என்பதனோடு கூட்டுவர் முதலுரையார். அது சிறப்பில் கூற்றுமென மறுக்க.

குறைவிலாது என்பது ஈண்டு ஆமினு எல்லாம் சொன்னார்களென்பது குறித்து நின்றது. ஆகலின் அதை ஆமினுவின துரையோடு கூட்டுக.

இனி, அதைப் புதுமையோடு கூட்டுவர் முதலுரையார்.

பலவும் என்றவதனுன் இச்செய்யுளின்கண் கூறுதனவெல்லா மடக்கினர். அவை இவ் வதிகாரத்துள் அடங்கி நின்றனவெல்லாமென்பது கருத்து. அது குறைவிலா என்றதனுன் அடங்குமெனின்; அற்றன்று, அங்ஙனங் கண்ணுற்றனவேயன்றி அடங்காவென்க. குறிப்புடன் என்றவதனுன் மனத்தோற்றத்திற்கு அமைந்தன வெல்லா மமைத்துக் கூறினர் என்பதூஉ மாயிற்று. பிறவருவனவெல்லாம் உய்த்துணர்க.

(121) புகன்றநன் மொழிகேட் டறப்பெரும் புதுமைப்
புதுமையீ தெனச்சிர மசைத்துன்
மகன்றனைத் தருக வென்றலு மடமான்
மகிழ்வொடுந் திருமனை புகுந்து
மிகுந்தபே ரொளிவு சொரிந்துகால் வீச
விளங்கிய முகம்மதை யெடுத்துச்
செகந்தனி புரக்கு மப்துல்முத் தலிபு
செழுமணித் தடக்கையி லீந்தார்.

(ப-ரை.) புகன்ற - அவ்வாறு ஆமினு அவர்கள்சொன்ன, நல் - நல்ல, மொழி - சொற்களை, கேட்டு - செவியில்கொண்டு, ஈது - இது, அற - கழிய, பெரும் - பெரிய, புதுமை என - அற்புதமென்று, சிரம் - சிரத்தை, அசைத்து - அலைத்து, உன் மகன்தனை - அம்ம! நின்குமாரனை, தருக என்ற

லும் - என்வசம் தருவாயாக என்றவுடனே, மட மான் - இளமானாகிய ஆமினா அவர்கள், மகிழ் வொடும் - மிக்க ஆனந்தத்தோடு, திருமனை - தெய்வீகத்துவமனையின்கண், புகுந்து - பிரவே சித்து, செகம் - பூலோகத்திலும், புரக்கும்-நிலை நிறுத்தும், தனி - ஒப்பற்ற, பேர் - கீர்த்தியை யும், கால்வீச - கிரணங்கள்தாக்க, சொரிந்து- அள்ளிப்பொழிந்து, விளங்கிய - விளங்காநின்ற, ஒளி - பிரகாசத்தையுமுடைய, முகம்மதை - முஹம்மதுஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண் டவரவர்களை, எடுத்து - தூக்கி, அப்துல்முத்த லிபு - மாதுலராகிய அப்துல்முத்தலிபு அவர்களி னது, செழும் - செழிய, தடம் - பெருமை பொருந்தும், மணி - அழகிய, கையில் - கரத லத்தில், ஈந்தார் - கொடுத்தார்கள், எ-று,

(போ-ரை.) அவ்வாறு ஆமினா அவர்கள் சொன்ன நல்ல சொற்களைச் செவியில் கொண்டு இதுகழிய பெரிய அற்புதமென்று சிரத்தை யசைத்து அம்ம! நின்குமாரனை என்வசம் தருவாயாக என்றவுடனே இளமானாகிய ஆமினா அவர்கள் மிக்க ஆனந்தத்தோடு தெய்வீகத்துவ மனை யின்கண் பிரவேசித்துப் பூலோகத்திலும் நிலை நிறுத்தும் ஒப்பற்ற கீர்த்தியையுங் கிரணங்கள் தாக்க அள்ளிப் பொழிந்து விளங்காநின்ற பிர காசத்தையுமுடைய முஹம்மதுஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவ ரவர்களைத் தூக்கி மாதுலராகிய அப்துல்முத்தலிபு அவர்களினது செழிய பெருமைபொருந்தும் அழகிய கரத் தில் கொடுத்தார்கள், என்பதாம்.

அற, என்றசொல் ஈண்டு வனாயின்மையை யுணர்த்திகின்றது. இது என்பது ஈது என நீண்டுநின்றது. வியப்புக்குறியாய்ப் புதுமை இரட்டுறநின்றது. சிரமசைத்தல் ஈண்டு உடன்பாட்டுக் குறிப்பு. தருக என்றமையான் என்வசம் என்பது பெறப்பட்டது. மடமான் ஆகு பெயர்.

இனி, பேர்என்பதை ஒளிவோடு கூட்டிப் "பெரியஒளி" எனவும், செகம்தனிபுரக்கும் என்பதை அப்துல்முத்தலிபோடு கூட்டிப் "பூமியை ஒப்பறக்காக்கும்" அப்துல்முத்தலிபு எனவும் வாளாப் பொருள்கூறி இடர்ப்படுவர் முதலுரையார்.

விளங்கியவும் என்புழி உம்மை விகாரவகையாற் றொக்கது. ஈண்டு ஆன என்றஒருசொல் வருவித்துரைக்கப்பட்டது. கொடுக்கப் படுபொருளின் அரியதன்மையானே வாங்குவாரின் இழிவு குறிப் புணர்த்துவான் ஈந்தா ரொன்றுர்.

(122) கறைநிணஞ் சுமந்த செங்கதிர் வடிவேற்
　　கரதல னப்துல்முத் தலிபு
முறைமுறை மோந்து முத்தமிட் டுவந்த
　　முழுமலர்ச் செழுமுக நோக்கி
நிறைமதி நிகரா முகம்மது நயினர்
　　நிலவுகொப் பளித்திடச் சிரிப்பக்
குறைபடா வுவகைப் பெருக்கெடுத் தெறியக்
　　குளித்தக மிகமகிழ்ந் தெழுந்தார்.

(ப - ரை.) முறைமுறை-பிள்ளையை வாங்கியவுடனே அடுத்தடுத்து, மோந்து - மோந்து, முத்தமிட்டு - கொஞ்சுதல்செய்து, உவந்த-இத்துணையதென்று சொல்லுதற் கமையா வுவப்புவாய்ந்த, நிணம்-சத்துருக்களினது கொழுப்பின், கறை - அடையாளங்களை, சுமந்த - சுமந்திராநின்ற, செம் - செம்மையாகிய, கதிர் - பிரகாசமுள்ள, வடி வேல் - கூரியவேற்படையொழியாத, கரதலன் அப்துல்முத்தலிபு - கரதலத்தானென்று சொ

ல்லும் அப்துல் மூத்தலிபினது, முழுமலர் - பூரணப்பட்ட தாமரை மலர்போலும், செழும் - செழிய, முகம் - முகத்தை, முகம்மதுநயினர் - முகம்மதுஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்கள், நோக்கி - பார்த்து, நிறைமதி - பூரணச்சந்திரனது, நிகரா - நிகராத, நிலவு - ஒப்பற்ற பிரகாசத்தை, கொப்பளிப்ப - நபிபெருமானரவர்களின் திருவாய் கக்குவதுபோன்றிலங்க, சிரித்திட - முறுவல்தோன்ற, குறைபடா - பார்த்தவுடனே குறைவில்லாத, உவகை - ஆனந்தத்தின், பெருக்கு-வெள்ளமானது, எடுத்துஎறிய - அவரது மனவிருளைக் கிழித்தெறியாநிற்ப, குளித்து - அவ்வுவகை வெள்ளத்தில் மூழ்கி, மகிழ்ந்து - களிப்புற்று, எழுந்தார் - எழும்பினர்கள், எ-று.

(போ-ரை.) பிள்ளையை வாங்கியவுடனே அடுத்தடுத்து மோந்து கொஞ்சுதல்செய்து இத்துணையதென்று சொல்லுதற்கமையா வுவப்புவாய்ந்த, (சத்துருக்களினது கொழுப்பின் அடையாளங்களைச் சுமந்திராநின்ற செம்மையாகிய பிரகாசமுள்ள கூரிய வேற்படை யொழியாத கரதலத்தானென்றுசொல்லும்) அப்துல் மூத்தலிபினது பூரணப்பட்ட தாமரை மலர்போலும் செழிய முகத்தை முகம்மதுஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்கள் பார்த்துப் பூரணச்சந்திரனது நிகராத ஒப்பற்ற பிரகாசத்தை நபிபெருமானரவர்களின் திருவாய் கக்குவதுபோன்றிலங்க முறுவல்தோன்ற பார்த்தவுடனே குறைவில்லாத ஆனந்தத்தின் வெள்

ளமானது அவரது மனவிருளைக் கிழித்தெறி யாநிற்ப அவ்வுவகை வெள்ளத்தில் மூழ்கிக் களிப்புற் றெழும்பினர்களென்பதாம்.

கரதலன் என்பது பிறர்கூற்று. அங்ஙனம் எனும்என்ற ஒரு சொல் செய்யுள்விகாரத்தாற் சிதைந்தவதனுல் வருவித்துரைக்கப்பட்டது. நிறைமதி வினைத்தொகை. நிகராத என்பது நிகராவெனநின்றது. நிலவுகொப்பளித்திடச்சிரிப்ப என்பதை நிலவு கொப்பளிப்பச் சிரித்திட எனக்கொண்டு கூட்டுக. சிரிப்பபோல் எனற்பாலது உவமையுருபு தொக்குநின்றது. அங்ஙனம் இலங்க என்றசொல் ஏற்புழிக்கோடலாற் பெறப்பட்டது. கொப்பளிப்ப ஏன்றமையான் அதற்குரியவாய் ஆற்றலானே பெறப்பட்டது. சிரித்தற்றெழிலால் நிகழும்பயனே ஒளிவெனக் கொள்க.

இச்செய்யுட்கு முதலுரையார் கூறும் உரை அத்தனைச் சிறப்பன்றென்பதை யவருரையானே காண்க.

பிறவருவனவெல்லாம் ஆய்ந்தாய்ந் தறிக.

(123) கதம்பமான் மதம்பே ரொளிவுடன் றிகழ்ந்த
காளையைக் கரத்தெடுத் தணைத்து
மதஞ்சொரிந் தசைந்த களிறென நடந்து
வந்துகரு பாவினை வலஞ்செய்
திதம்பெறப் போற்றி யுள்ளுறப் புகுந்தங்
கிருந்திறை தனைப்புகழ்ந் தேத்தி
விதம்பெற முகம்ம தெனப்பெயர் தரித்து
வீறுடன் றிரும்பின ரன்றே.

(ப - ரை.) மான்மதம் - கஸ்தூரியையும், கதம்பம் - பிறவர்கும் வாசனைப் பொடிகளையும், பேரொளிவுடன்- பெரிய பிரகாசத்தோடு, திகழ்ந்த - சேர்த்து படைத்தாற்போலும் விளங்காநின்ற, காளையை- பிள்ளையை, கரத்து எடுத்து - கையிலெடுத்து, அணைத்து - நெஞ்சோடு சேர்த்து, மதம்சொ

ரிந்து - மூன்றுமதங்களேயு மள்ளிப்பொழிந்து, அசைந்த - திமிர்கொண்டு ஆடாநின்ற, களிறு என - மால்யானையைப்போன்று, நடந்து-நடத் தலைச்செய்து, கருபாவினைவந்து - கதுபாவின் கண்சேர்ந்து, வலஞ்செய்து - அதைப் பிரதக்க ணஞ் செய்து, உள்உறப்புகுந்து - உள்ளே நுழைந்து, இருந்து - தரிப்புற்றுநின்று, இறை தனை - மெய்யாகியகடவுளை, இதம்பெற - நன் மைபெற, போற்றி - வணங்கி, விதம்பெற-பின் னர்த்திர்ப்பாக, முகம்மது என-மூகம்மது என்று சொல்லி, பெயர்தரித்து-நாமஞ்சூட்டி, புகழ்ந்து-பிள்ளையைக் கவிகளாற் புகழ்ச்சிசெய்து, ஏத்தி-பலவாறுதுதித்து, வீறுடன் - மிக்க பெருமை யோடு, திரும்பினர் - கதுபாவினின்று வீட்டிற் குப் புறப்பட்டார்கள், எ-று.

(போ-ள.) கஸ்தூரியையும் பிறவாகும் வாசனைப் பொடிக ளையும் பெரிய பிரகாசத்தோடு சேர்த்துப் படைத்தாற்போலும் விளங்காநின்ற பிள்ளை யைக் கையிலெடுத்து நெஞ்சோடு சேர்த்து மூன்றுமதங்களேயு மள்ளிப் பொழிந்து திமிர்க் கொண்டு ஆடாநின்றமால்யானையைப்போன்று நடத்தலைச்செய்து கதுபாவின்கண் சேர்ந்து அதைப் பிரதக்கணஞ் செய்து உள்ளேநு ழைந்து தரிப்புற்று நின்று மெய்யாகிய கட வுளை நன்மைபெற வணங்கிப் பின்னர்த் திர்ப் பாக மூகம்மது என்று சொல்லி நாமஞ்சூட்டிப் பிள்ளையைக் கவிகளாற் புகழ்ச்சிசெய்து பல வாறு துதித்து மிக்க பெருமையோடு கதுபா வினின்று வீட்டிற்குப் புறப்பட்டார்கள், என் பதாம்.

சேர்த்துப் படைத்தாற்போலும் என்பது ஆற்றலாற் பெறப்பட்டது. காளை என்பது திணையொடுபழகிய விரவுப்பெயர். மதம் என்ற பொதுமையான் மூன்றுமதம் என்றும். அவை கன்னத்தானும், கபோலத்தானும், கோசத்தானும் பொழியு மதமென்க. களிறென என்புழி என என்ப துவமவுருபு. **கதுபா**வின என்புழி இரண்டாவது ஏழாவதன் பொருண்மைக்கணின்றது. அன்று அசைநிலை. போற்றி என்பதை இறையோடு கூட்டுக. **கதுபா**வின்கண் புகுந்து **அப்துல் முத்தலிபு** போற்றியதில் மெய்யாகிய கடவுளினது தகைமைக்கியைந்த பொருட் பயந்துநின்றதென்பதுதோன்ற இறைதமை என்னுது "இறைதனை" என்று ராசிரியர்; அதுபற்றி யாமும் மெய்யாகிய கடவுள்என்றும். அப்புகழ் **அப்துல்முத்தலிபு** எங்ஙனம் பயின்றுரோ? எனின், நன்று கடாயினுய்; **நபி**பெருமானுரை நெஞ்சோடு சார்த்தியவன்றே பயின்றுரென்க. **அப்துல்முத்தலிபு நபி**பெருமானுரவர்கட்குப் பெயர்வேறு கருதியிருந்தும் அது முடிவுருது **முகம்மது** என்பதே அவர்க்குந் தோன்றி அங்ஙனமே தாமும் கொண்டாரென்பது கருதி "விதம்பெறமுகம்மதெனப்பெயர்தரித்து" என்றுர். **நபி** பெருமானுர் **அப்துல்முத்தலி**பவர்கட்குப் பிள்ளையாங் காரணம்பற்றி அவர்க்குயாரும் நிகராரென்பதுதோன்ற "வீறுடன்றிரும்பினர்" என்றுர். ஏகாரம் ஈற்றசை.

(124) தேமலர்ப் பொழில்சூழ் சுவனநாட் டரசைத்
திசைதொறும் விளக்குநா யகத்தை
மாமறைக் கொழுந்தை முகம்மது நபியை
மறுப்படா தெழுந்தசெம் மணியைப்
பூமலர்க் குழலி யாமினு வென்னும்
பூங்கொடிக் கரத்தினி லருளி
நாமவை வேற்கை யப்துல்முத் தலிபு
நடந்துதன் றிருமனை சார்ந்தார்.

(ப - ரை:) நாமம்-விளங்கிய கீர்த்தியையுடைய, வைவேல்-கூரிய வேற்படைசுமந்த, அப்துல் முத்தலிபு - **அப்துல் முத்தலிபா**னவர்கள், நடந்து - அவ்விடத்தினின்று நடத்தலைச்செய்து, தேம் - வா

சனைபொருந்திய, மலர் - பூக்களின், பொழில் - சோலைகள், சூழ் - சூழாநின்ற, சுவனநாடு - சுவர்க்கலோகத்துக்கு, அரசை - இறையானவர்களை, மா - மகத்தாகிய, மறை - வேதங்களின், செம் - செம்மையாகிய, கொழுந்தை - துளிரானவர்களை, மறுபடாது - குறைவின்றி, எழுந்த - உதயமாகிய, மணியை - நன்மையானவர்களை, திசைதொறும் - எவ்விடத்தினும், விளக்கும் - தமதுகீர்த்தியை விளக்காநிற்கும், நாயகத்தை - நாயகமானவர்களை, முகம்மது நபியை - எங்களை ரட்சித்து அருளு முகம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவரவர்களை, பூமலர் - அழகு நிறைந்திராநின்ற, குழலி - பெருமை பொருந்திய, ஆமினைஎனும் - ஆமினு வென்று சொல்லும், பூங்கொடி - பூவானியன்ற கொடியானவர்களின், கரத்தினில் - கையில், அருளி - கொடுத்துவிட்டு, திரு - அழகிய, மனை - வீட்டிற்கு, சார்ந்தார் - போயினுர்கள், எ-று.

(போ-ன.) விளங்கிய கீர்த்தியையுடைய கூரிய வேற்படைசுமந்த அப்துல் முத்தலிபானவர்கள் அவ்விடத்தினின்று நடத்தலைச்செய்து வாசனைபொருந்திய பூக்களின் சோலைகள்சூழாநின்ற சுவர்க்கலோகத்துக்கு இறையானவர்களை, மகத்தாகிய வேதங்களின் செம்மையாகிய துளிரானவர்களை, குறைவின்றி யுதயமாகிய நன்மையானவர்களை, எவ்விடத்தினுந் தமது கீர்த்தியைத் விளக்காநிற்கு நாயக மானவர்களை, எங்களை ரட்சித்தருளு முகம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் ஆண்டவ ரவர்களை அழகு

நிறைந்திராநின்ற பெருமைபொருந்திய ஆமினு வென்றுசொல்லும் பூவானியன்ற கொடியான வர்களின் கையில் கொடுத்துவிட்டு அழகிய வீட்டிற்குப் போயினூர்கள் என்பதாம்.

திசைதொறும் விளக்கும் என்றமையான் தமது கீர்த்தியை என்றது அவாய்நிலை. திசைதொறும் விளக்குங் கீர்த்தி மற்றைய நபிமார்களுக் கின்மையான் இங்ஙனங் கூறினு ராசிரியரென்க. நாயகம் உபசாரவழக்கு. அரசு என்பது தலைமைபற்றிவந்தது.

அதை உபசாரவழக்கென அறியாதுகூறுவர் முதலுரையார்.

மறை என்ற பொதுமையான் நான்குவேதமென்ரும். எல்லா வேதங்களினும் நபிபெருமானுரவர்களின் புகழே தோன்றுகையான் "கொழுந்து" என்ருர்.

இனி, மாமறை என்புழி மகா வேதமாகிய குறுஆன் என்பர் முதலுரையார். மணியை மாணிக்கமென்பாரு மவர். அவையெல்லாம் போலியுரையென்க.

தன், சாரியை. இங்ஙனமறியாது தம்எனத்திருத்திக்கோடுவர் அவரோ.

இங்ஙனமாக,

ஐயந்திரிபறக்கற்றுத் தேர்ந்து திரிகுணங்களைத்திருத்தி நிலை கண்ட மஹான்களில் ஒருவரும், உமறு எனுந் திருநாமத்தை உடையவருமாகிய வள்ளல் நபிபெருமானுரது அருளாற் பயந்தியற்றிய புராணத்தின்கண் பலவாறு திருந்திக்கிடந்த செய்யுட்களைத்தவறெனத் தமது சிற்றறிவிற்கேற்பத் திருத்திப் பெரும்பாலும் இடர்ப்பட்டுப்போயினூர் முதலுரையார்.

ஆகவே அவரிழுக்கை ஒருவாறு யாமிங்ஙனங்கூறிப்போந்தாம். கூறுதனவெல்லாம் அவருரைகொண்டு நோக்குக.

(125) அன்புட னெழுநா ளணியிழை சுமந்த
வாமினு முலையருந் தியபின்

னின்புற அபூல கபுதிரு மனேயி
னிருந்ததோர் மடக்கொடி துவைபா
மன்பெரும் புகழார் முகம்மது நபிக்கு
மனமகிழ் வொடுமுலை கொடுத்துத்
தன்பெரும் புகழும் வரிசையும் பெருகத்
தழைத்தினி திருக்குமந் நாளில்.

இச்செய்யுள் "அலிமாமுலையூட்டுப்படலத்தைக்" கொளுவிநிற்ற லான் ஈண்டு உரைகூறிலம்.

நபியவதாரப்படலம் - உரைகடிலகம்
முற்றிற்று.

---

இப்படலத்திற்கு எமது சிற்றறிவிற்குப் புலப்பட்டதுகொண்டு
உரைகூறினும். பேரறிவுளார்க்குப் பலவாறு
மதந்து பொருட்பயக்கும்;
ஆகலின் உய்த்துணர்க.



# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| | | (முகவுரை.) | |
| 2 | 26 | பல | பலவும் |
| 3 | 24 | ஒருமைப் | ஒருமை |
| 8 | 8 | மப்புடியே | மப்படியே |
| | | (நூல்.) | |
| 1 | 16 | ரனது | ரன்களது |
| 2 | 12 | ,, | ,, |
| 4 | 14 | ,, | ,, |
| 6 | 13 | யிவ்வை | யிவை |
| 8 | 17 | றுணற | றுணர |
| 18 | 13 | கௌஸைஸன் | கௌஸைன் |
| 21 | 11 | யிழிந்தோர் | யிழிந்தோன் |
| 23 | 1 | குணிப்பறுங் | குணிப்பருங் |
| 24 | 17 | கருத்தாயிற்று | கருத்தாயின |
| 29 | 5 | பெப | பொ |
| 30 | 4 | யிரட | யிரட் |
| ,, | 8 | குணிப்பறுங் | குணிப்பருங் |
| 31 | 28 | யிவ்வை | யிவை |
| ,, | 31 | ஆருய்ந்த | ஆராய்ந்த |
| 33 | 26 | வரு | வரூஉ |
| 34 | 2 | க்குடித்து | யுண்டு |
| ,, | 4 | யுண்டெனப் | யுண்டன |
| 35 | 24 | கக்கூறுதல் | கக் |
| 41 | 29 | திர்ஷ்டை | திருட்டி |
| 49 | 23 | னூலேயே | னூலே |
| 50 | 5 | அலேயி | அலேஹி |
| ,, | 19 | ,, | ,, |

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 52 | 11 | ணிபுலி | ணிபுலீசி |
| ,, | 20 | ணிபுலி | ணிபுலீ |
| 54 | 8 | உகப் | உவப் |
| ,, | 23 | ,, | ,, |
| 59 | 5 | றந்தாய் | தந்தாய் |
| 62 | 14 | படும்எல் | படூஉமெல் |
| ,, | 16 | யினல்லது | யொடல்லது |
| ,, | ,, | பாறெறிவி | பாறெரிபி |
| ,, | 19 | ஞனே | ஞன |
| 65 | 25 | மதிர்ஷ் | மதிஷ் |
| 66 | 9 | ,, | ,, |
| 67 | 3 | நனீ | நன |
| ,, | 24 | மதிர்ஷ் | மதிஷ் |
| 68 | 1 | உல்காச | உல்லாச |
| ,, | 7 | மதிர்ஷ் | மதிஷ் |
| ,, | 12 | உல்காச | உல்லாச |
| ,, | 24 | ஓப்பற | ஒப்பற |
| 69 | 15 | மிஞஆ | ஆமிஞ |
| 72 | 5 | துகது | துக்கு |
| 73 | 29 | க°°பா | கருபா |
| 74 | 9 | ஆமீஞ | ஆமிஞ |
| 76 | 8 | தெண்டநி | தெண்டனி |
| 78 | 4 | வதிர்ஷ் | வதிஷ் |
| ,, | 20 | ,, | ,, |
| 85 | 9 | ஓக்கல் | ஒக்கல் |
| 88 | 16 | உல்காச | உல்லாச |
| 89 | 3 | ,, | ,, |
| 91 | ,, | ஞெருதி | ஞெருதி |
| 96 | 9 | விதிபிர | விதிப்பிர |
| 98 | 3 | போலகண் | போலக்கண் |
| 103 | 6 | மைாகிய | மையாகிய |
| 105 | 14 | நீகழு | நிகழு |
| ,, | 28 | மடைமை | மடமை |
| 109 | 6 | ஹஷறி | ஹஷரி |
| ,, | 26 | வதிர்ஷ் | வதிஷ் |
| 110 | 6 | வம்மிஷத் | வமிசத் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 110 | 13 | வதிர்ஷ் | வதிஷ் |
| ,, | 19 | வம்மிஷத் | வமிசத் |
| 111 | 12 | என்ற | என்றவ |
| ,, | 27 | வதிர்ஷ் | வதிஷ் |
| 112 | 13 | ,, | ,, |
| ,, | 21 | னாமிஆ | ஆமினா |
| 116 | 12 | என்ற | என்றவ |
| 119 | 11 | ஆமினானா | ஆமினா |
| 120 | 7 | ஏற்புழிக்கோடலான் | அவாய்நிலையால் |
| 121 | 18 | கருத்தாயிற்று | கருத்தாயின |
| 122 | 19 | வதிர்ஷ் | வதிஷ் |
| ,, | 29 | ,, | ,, |
| 124 | 4 | சேந்தாள் | சேர்ந்தாள் |
| ,, | 30 | வசிக்குப் | வசிக்கும் |
| 127 | 4 | இவ்ஆ | இவ்வா |
| ,, | 17 | விவ்ஆ | விவ்வா |
| 130 | 5 | விகர்ப்ப | விகற்ப |
| 132 | 26 | வதிர்ஷ் | வதிஷ் |
| 136 | 5 | சபர | சபா |
| 145 | 18 | தரிக் | தறிக் |
| 148 | 21 | வணாகரு | வணாக்கு |
| 149 | 29 | போலி ! | போலி |
| 155 | 25 | அமமை | அமை |
| ,, | 26 | சுவக்ர் | சுவர்க் |
| 166 | 13 | வாமிர்த் | வாமிர் |
| ,, | 26 | றிலுவரணே | றிலுவாணே |
| 171 | 12 | கா; ஆகலானும் | கா ஆகலானும். |
| 172 | 29 | எங்கணா | எங்கணு |
| 182 | 25 | அகுபது | அகுமது |
| 183 | 16 | கொப்ப | கொப்பு |
| ,, | 26 | கொப்ப | கொப்பு |
| 186 | 20 | றுமி | றுமில் |
| 187 | 2 | இலா | இல்லா |
| 191 | 22 | திங்கட | திங்கட் |
| 192 | 21 | கஃபத் | கஃபத் |
| 202 | 22 | கங்கி | கங்கங் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 203 | 8 | கங்கி | கங்கங் |
| 206 | 11 | வினுஞ் | வினஞ் |
| ,, | 27 | இனும் | இனம் |
| 209 | 4 | தகாது, | தகாது - |
| ,, | 22 | ஹூத்த | ஹூத்த |
| 211 | 25 | ஜீபுறி | ஜிபுறி |
| 221 | 3 | கீரத்தி | கீர்த்தி |
| ,, | 19 | டவரர் | டவரவர் |
| 222 | 7 | ,, | ,, |
| 231 | 16 | தியப் | திய |
| ,, | 18 | காடுனை | காடுறை |
| ,, | 22 | குரிஞ்சி | குறிஞ்சி |
| 233 | 26 | லுனைமாரு | லுனையாரு |
| 240 | 7 | ஞென்றே | ஞென்றும் |
| 248 | 24 | வெறீஇ | வெரீஇ |
| 265 | 19 | கொப்ப | கொப்பு |
| 266 | 7 | ,, | ,, |

இங்ஙனமேயுமன்றி 176 - வது பக்கம் 3 - வது வரியில் "ஞங்கி" என்னும் பதத்திற்குப் பிற்றை குழுவினை நீந்தி - தமது கூட்டங்களைக்கடந்து எனும் பதங்களை ஒட்டிக்கொள்ளவேண்டியது.